


இந்நூலினை ஆதரித்து,
அச்சிட ஏற்றதென ஆதரவு நல்கிய
பெரியோர்க்கும்,
திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகளுக்கும்
எனது வணக்கத்துடன் நன்றி!

# திருக்கண்ணபுரச் செல்வன்

ஆக்கம் சிறு குறிப்புரையுடன்
கவிரத்ந-கண்டீரவ, செஞ்சொற்கவி
அபிநவ பட்டர்பிரான்
அபிநவ வித்யாபாஸ்கர
வித்யாரத்ந
T. S. ராஜகோபாலன், B. A., L T.
முன்னாள் தலைமையாசிரியர்
இந்து உயர்நிலைப் பள்ளி
திருவல்லிக்கேணி

விற்பனை உரிமை :
ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

First Published : March, 1989

Number of copies printed : 1000

Price: Rs. 25-00

The sale proceeds of this book
will be donated to
(THIRUKKANNAPURAM)
SRI SOURIRAJA PERUMAL
KAINKARYA SABHA (REGD)

SALES RIGHT
STAR PUBLICATIONS
72, BIG STREET,
TRIPLICANE, MADRAS-600 005.
Phone : 844740

---

Printed by : Sri Gomathi Achagam
41, Soorappan Street, Triplicane, Madras-600 005.



திருக்கண்ணபுரம்

பண்டித ரத்நம் ஸ்ரீநிவாஸாசார் ஸ்வாமி

# FOREWORD

Prof. C. Jagannathacharlar,
M.A. (Hist.), M.A. (Tamil), L. T.,
P.O.L., Dip. in Geog., Vidwan,
Head of Department of Tamil (Retd.),
Vivekananda College, Madras-600 004.
(Formerly U. G. C. Professor).

TIRUKKANNAPURAC-CHELVAN. Tirukkannapuram is in the Tanjore District and is sanctified as "Sapta-Punya Stala". It is one of the Pancha-Krishna Kshetras. The local deity enshrined in the temple is known as "Sri Souriraja Perumal," after the beautiful "Souri-Kondai" (coil of hair) adorning the head. This Lord is an embodiment of "Ashtakshara-mantra". The founding of the holy city with the temple as its nucleus, is ascribed to Uparicharavasu, the ruler of Chedi Nadu. The king gave his daughter Padmini in marriage to the Lord and hence one can see even today the Lord with Padmini as his consort on a par with the Ubhaya Nachiars and Andal, all the four standing in a row on the sacred pedestal.

Tirukkannapuram has been hallowed by five Alwars—Periyalwar, Andal, Kulasekaralwar, Thirumangaimannan and Nammalwar. Thirumangaimannan has dedicated ten decads the whole of the Eighth centum, his Periya Tirumoli in praise of the deity, he sings as "Kannapurattamman". This is because it is here that he revealed the inner content of the Astakshara-mantra before the Lord, when questioned by Him as it to its significance, as understood by him.

Now turning to the Kavya entilled "Tirukkannapurac-Chelvan", the contents are divided into six sections with the main headings as follows .

**Section 1.** "Essence of the Vedas" (Vedap-porul)

This section consists of fifteen decads and the themes dealt with in this section in a nutshell are as follows :

Entry with benediction, coupled with the Tirumantram, Dwayam and Carama slokas of Varaha—Rama and Krishna, culminating in the ultimate **purushartha** to be attained.

**Section 2.** "Grandeur of the festivals" (Tirunat-cirappu). This section consists of twelve decads and the themes are as follows:

Participation of lady devotees by lighting the lamps denoting auspiciousness decorating the floor of the temple with ornamental figures drawn with rice flour and coloured powder, holding up in their hands decorated golden pots (Purna kumbhams)— the Masi festival in detail, the deity seated on a golden plank, **carried on hands** daily in procession to the Vahana Mantapam (famous as the Tirukkaittala Seva), strewing sweet-scented powder in the streets during procession, plucking and gathering of flowers to be used as offerings to the Lord, singing the swing-song, dancing in joy, singing the auspicious qualities of the Lord, and Hisexquisite beauty, eulogising the exploits of the Lord in Krishnavatara, the play with small balls (Ammanai) by three girls while singing the glory of the Lord and His pre-eminence at the same time, mainly bringing out His **sawlabhya** and **paratva** qualities, gathering of devotees singing the **namas** of the Lord and His pre-eminence, at the same time, dancing with measured steps to the accompaniment of cymbols.

**Section 3.** Praise of the Lord by the elite of His devotees (Adiyar Thudi)

This section consists of nine decads and the themes dealt with are as follows:

Praise showered on the Lord by Garuda, Indra, Vibhishana, the Holy sages of Naimisaranya, the saint of Dandaka forest, king Uparicaravasu, the Pandya king, the temple priest and Muniadarariyar, a vassal of the Chola monarch.

**Section 4**. The five-fold manifertations of the Lord Aivahai Nilaigal)—

This section consists of twenty-four decads and the main themes dealt with are as follows:

Paratwam—Pre-eminent Almighty Bhagavan with His six Kalyana gunas, Vyuham—Manifestation as three Divinities—Sankarshana, Pradyumna and Aniruddha; Vibhavam-manifestation of the ten Avatars; Anthar-yamitwam—Manifestation as being immanent in the universe and governing it; Archai—Manisfestation as idol worshipped in temples and at home.

The main themes have been interspersed with sub-themes to serve as their explanation. For example, Vibhavam has been explained by Avatars, expecially of Narasimha, Vamana, Rama and Krishna. Ramavatara is dealt with, bringing out His exquisite qualities in a decad (No. 10) and His enchanting beauty through the words of Hanuman in another decad (No. 11). Then some incidents of Krishnavatara have been rendered with devotional fervour and ecstatic experiences by the author.

In the succeeding seven decads (Nos. 18-24) the unique eminence that Archa Manifestation enjoys among the devotees in the Vaishnavite parlance, has been clearly portrayed The Lord's Sawlabhya Guna (easy accessibility) in conjunction with other Archa-gunas has been emphasised. Last, but not least, some of His main Archa abodes like Srirangam. Thiruvenkatam, Srimushnam, Vanamamalai, Naimisaranyam, Badari, Pushkaram, Salagramam, Tirumeyyam, Tirukkadigai (Sholingar) and Talaic-changa Nanmadiyam, are spoken of with an eye on Tirukkannapuram—incidentally, the author's native-place—stressing its importance (attachment to one's native soil can never be shuffled off).

**Section 5**. Padmini, the Lord's Consort (Talaivi Padmini)

This section consists of ten decads and the themes dealt with are as follows:

Concern of the parents about the marraiage of their daughter Padmini, the role of Toli (The female comparsion oj Talaivi the heroine). appealing to Cupid the God of Love, sending messages to the Lord through her heart, the cuckoo and the clouds, Talaivi's dream consummating in her wedlock with the Lord of Tirukkannapuram.

**Section 6.** Supplication (Vinnappam). This section consists of eight decads and the themes dealt with are as follows:

God the sole refuge, transitoriness of life, despicable nature of the body, the doctrine of surrender (**Saranagati**), the Lord's eulogy and the expression of gratitude for His bestowal of graces.

Thus ends the Kavitai with 78 decads, with short notes added at the end of every page.

**Appendage**: The auther has appended the Kaisika Purana, rendering it in easily comprehensible Tamil Viruttams numbering about minety, for the benefit of those who can read Tamil verses on the Kasika Dwadasi day, that is, the twelfth day of the bright fortnight of Karthigai, sacred to Nampatuvan.

Prosody: In versification the authar T. S. R. has adopted the metrical feet associated with verses in Vanchi-turai, Kali-Viruttam, Kalitturai, Arucir-viruttam, Elucir-cir-viruttam and Encir-viruttam. Two kural venbas are introduced in the Kaisika Purana. Thus we find a clear testimony of the author's facile handling of the various metres and he is really a **Kaviratna Kantirava**. Further, the influence of Periyalwar, Andal and Tiurmangaimannan is felt when reading the poems and he is fittingly termed **Abhinava-Pattarbiran** and **Cen-cor-kavi.** His father is the famous Panditharatna Tirukkanna-puram Srinivasa Chariar, whose Birth centenary was recently celebrated at the Vanamamalai Mutlt, Triplicane, when many savants spoke about the high erudition and good qualities of the Panditaratna and really the entire atmosphere was

saturated with spirituality and devotion. In commemoration of this Birth centenary, this Kavya written by his Illustrious son, Sri T. S. Rajogopala Iyangar, Abhinava Vidya Bhaskara, emerges out as a publication with the aid of the T.T D. May Lord Balaji and Souriraja Perumal shower. Their choicest blessings on Sri T. S. R. May his tribe increase and the world will become a Heaven to live in.

Triplicane
13th March, 1989

C. Jagannathachariar

# முன்னுரை

தென்னாட்டுத் திலகமான திருக்கண்ணபுரம் ஸப்த-புண்ய ஸ்தலம் என்றும், ஆதலால் அஷ்டாக்ஷர-மந்த்ர-ஸித்திக்கு ஏற்றதென்றும் நைமிசாரண்யத்து முனிவர் பாராட்டி இங்குத் தவஞ்செய்து வந்துள்ளனர். இத்தலத்து எம்பெருமான்—ஸ்ரீசௌரிப் பெருமாள்—க்ருத யுகத்தில் சித்திரை மாஸம், ஹஸ்த நக்ஷத்ரம் கூடிய நன்னாளில் சாயங்காலம் ஆவிர்பவித்தான் என்றும், அஷ்டாக்ஷர-மந்த்ரத் திருமேனி வாய்ந்தவன் என்றும் ஸ்ரீ பாத்ம புராணம் கூறுகின்றது.

இத்தலத்தையும், இப்பெருமானது திருக்கோயிலையும் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் உபரிசரவசு என்ற சேதி வேந்தன் நிர்மாணித்துத் தனது புதல்வியான பதுமினியைக் கன்யகா தானமாக இப்பெருமானுக்கு அளித்தான்; பெருமானிடம் திருமந்த்ர உபதேசம் பெற்றான். இப்பெருமான் ஆழ்வார்கள் ஐவரால் மங்களாசாஸநம் செய்யப்பெற்றவன்; ''நான் வணங்கும் கண்ணன்'' என்று திருமங்கையாழ்வார் உருகிப் பாடும்படி திருமேனி வாய்ந்தவன்; ''வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' என்று நம்மாழ்வாரால் புகழப்பட்டவன்.

இப் பெருமானது கல்யாண குணங்கள் பலவற்றுள் மிகவும் சிறப்புடையன: ஆத்மாக்களுக்குத் தன்பால் அன்பு விளைவித்துத் தன்னடிக்கீழ்ச் சேருமாறு அருள் பொழிவது; அடியார்களது குறைகளைக் காணாமல் காப்பது, அவர்களது விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுப்பது, அவர்கள் அளிப்பதை அமுதினுஞ் சிறந்ததாக ஏற்றுக் கொள்வது. இவன் உயிர்களைக் காப்பதே கருத்தில் கொண்டவன் என்பதை, இவன் கையி லேந்திய ப்ரயோக சக்கரத்தாலும், திருநெற்றியில் வலது புருவத்தின் மேலுள்ள தழும்பாலும் தெற்றென உணரலாம்.

இப் பெருமாள் திருவஷ்டாக்ஷரத் திருமேனி வாய்ந்தவனாதலால், இந்தத் திருமந்த்ரத்தின் கருத்தும், இதன் விரிவான

சரம ச்லோகங்கள், த்வயம் இவற்றின் விவரமும், ஸ்ரீவைஷ்ணவ ஸமயத்தின் கருத்துக்களும், இப்பெருமான் பாட்டுக்குரிய தலைவனாகக் கொண்டு விளக்கம் பெற்றுள்ளன.

இவை யனைத்தும் நான் ஏற்றது எனது திருத்தகப்பனார், திருக்கண்ணபுரம் பண்டித ரத்னம் ஸ்ரீநிவாஸாசார் ஸ்வாமியின் திருவடிகளின் கீழே வணங்கிப் படிந்து. ஆதலால் அவர் திருவவதரித்த நூற்றாண்டாகிய இந்த ஆண்டில் சிறப்புடன் நடந்த திருவிழாவின் நினைவு மலராக, இந்நூலை அச்சிட்டு, அவர் தமது குலதெய்வமாக வணங்கி வந்த ஸ்ரீ சௌரிப் பெருமாளது தாமரை யடியிணையில் பாமாலையாகச் சூட்டு கிறேன்.

ஆழ்வார்கள், ஆசாரியர்கள் வெளியிட்டுள்ள கருத்துக்களே ஆதாரமாகக் கொண்ட இந்தக் காவியத்தை "இளைய புன் கவிதையேலும்", "பத்தியேய்ந்த" தென்று பெரியோர்கள் ஆதரிப்பர் என நம்புகிறேன்.

இந்நூலை அச்சிட ஊக்க மளித்துக் கையெழுத்துப் பிரதியை ஆராய்ந்து, மாறுபாடுகளைப் பேருக்கத்துடன் தெரி வித்தவர், செந்தமிழ்ப் பெருங்கடலைக் கரைகண்ட வித்வான் ஸ்ரீ C ஜெகந்நாதாசார் ஸ்வாமி, (M A., L. T, Dip. in Geog.) முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர், விவேகாநந்தர் கல்லூரி, சென்னை. இவருக்கு என் அன்பு கலந்த வணக்கத்தையும் நன்றி யையும் தெரிவிக்கிறேன்.

இதனை அச்சிட்டு உதவிய திருவல்லிக்கேணி, ஸ்ரீகோமதி அச்சகத்தினருக்கு என்னுடைய பாராட்டும் நன்றியும் உரித்தாவன.

ஆசிரியன்

# பொருளடக்கம்

## வேதப் பொருள்



## திருநாட் சிறப்பு

## பொருளடக்கம்

### அடியார் துதி



### ஐவகை நிலைகள்

## பொருளடக்கம்



### தலைவி பதுமினி



### விண்ணப்பம்

உத்பலாவதேகே திவ்யே

விமானே புஷ்கரேக்ஷணம் ।

சௌரிராஜ மஹம் வந்தே

ஸதா - ஸர்வாங்க - ஸுந்தரம் ॥

# வேதப் பொருள்

## 1. வாழ்த்து

பொன்னி புணர்ந்துறையும்
மின்னொளிர் மேனியனே!
அன்ப ரகத்துறையும்
இன்பப் பெருங்கடலே!
    கண்ண புரத்துறைவாய்!
    கண்ணனே! வாழியநீ, 1

மன்மகள் மாவோடும்
மண்மக ளாண்டாளும்
நின்னெழில் மாந்திடவே
நின்றருள் நின்மலனே!
    கண்ண புரத்துறைவாய்!
    கண்ணனே! வாழியநீ. 2

அன்பருக் காகுலஞ்செய்
வன்பகை மாய்க்கவெனப்
பொன்னொளி ராழிதனை
நின்கரத் தேந்துவைநீ

### சிறு குறிப்பு

*திருக்கண்ணபுரத்துப் பெருமான் திருமேனி எட்டெழுத்து மயமாகும். இப்பகுதியில் வேதங்களின் சாரமான திருவெட்டெழுத்தின் கருத்தும், இதன் விவரமான சரம ச்லோகங்கள், த்வயம் இவற்றின் கருத்தும் விவரம் பெறும்.*

2. மன்—மன்னன், உபரிசரவசு. மன் மகள்—இவன் திருமகளாகிய பதுமினித் தாயார். மா—பெரிய பிராட்டியார். 3. ஆகுலம்—துன்பம்.

கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 3

இந்திர னின்னலெல்லாம்
வெந்திட வீய்த்தவனே!
அந்தமி லானந்தத்
தெந்தையே! எற்குயிரே!
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 4

சேதிபன் சிந்தைகொளச்
சோதியில் தோன்றினைநீ
ஓதினை யுன்மனுவை
மாதவ! மதுசூதா!
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 5

கொற்றவன் நல்கியதாம்
பொற்றொடி முன்கையில்
பற்றென ஏந்துவைநீ
அற்றவர்க் காருயிரே!
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 6

தண்டக மாமுனிவன்
மண்டுமோர் வாஞ்சையினில்
கண்டிட நின்னுறைவிற்
கொண்டனை கோவலனே!
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 7

4. இன்னல்—துன்பம்; பதவி இழந்தது முதலியன. 5. சேதிபன்—சேதி வேந்தன், உபரிசரவசு. மனு—மந்திரம்; திருவெட்டெழுத்து. 6. கொற்றவன்—பாண்டியன். இவன் கொடுத்த தோள்வளையைப் பெருமான் முன் கையில் அணிந்துகொண்டான். 7. வாஞ்சை—ஆசை. தண்டக முனிவன் பெருமான் முன் இன்று நின்று கொண்டிருக்கிறான்.

வேலையில் மேவியதோர்
மாலார் மலையினுக்குன்
கோலக் கவினுருவை
மாலுறக் காட்டுவைநீ.
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 8

பொன்வணப் புள்ளிறைவன்
நின்வணம் நின்றுதொழ
அன்பா லருளினைநீ
புன்னகை பூத்தொளிர்ந்தே.
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 9

பங்கயப் பைந்தடத்தில்
பங்கய நாண்மலர்போல்
பொங்குமுன் பொன்னுருவை
எங்களுக் காக்கினைநீ.
கண்ண புரத்துறைவாய்!
கண்ணனே! வாழியநீ. 10

## 2. திருமந்திரத் திருமேனி

மறைகளி லூறும் வளங்கெழு மந்திர மாவுருவன்
நெறியொடு நேமம் நிலையுற நோக்கும் நெடுமாலோர்
வெறிகமழ் சோலை விரிந்துவி ளங்கிடுங் கண்ணபுர
முறைதருங் கோமானொண்கழ லொன்றுவ முய்ந்திடவே.1

8. வேலை—கடல். மாலார்—பெரிய. மலை: கருட பர்வதம். கவின்—பேரழகு. மால்—மயக்கம். 9. புள் இறைவன்—கருடன்.

1. திருவெட்டெழுத்து வேதங்களின் சாரமாகும். மந்திர மா உருவன்—திருமந்திர மயமான சிறந்த திருமேனி வாய்ந்தவன். வெறி—பரிமளம்.

கடலினு ளாழுங் காருட வெற்பும் காசினியில்
படர்பெரும் புகழார் பாண்டியன் சோழன் வசுமன்னன்
கடிதினிற் கற்க மந்திரம் நல்கிடுங் கண்ணபுர
முடையவன் தாளில் தோய்ந்தவன் சீரெலா மோதுவமே. 2

வானுற வோங்கும் மணிமுடி மாலோ னுயிர்க்கெல்லாம்
கோனெனக் காட்டக் குரைகழல் தன்னிற் குனிவதுதான்
ஆனதா லன்னா னருட்கெனக் காட்ட மணியுருவோ
தானது காட்டுந் தகைய னிவன்நா ரணனெனவே. 3

தொன்மறை மூன்றில் தோய்தருந் தூய பொருளாகி
முன்னுறு மூன்றா மக்கர மாகும் பிரணவத்தில்
மன்னிடு மூர்த்தி மணிமதிள் சூழ்தருங் கண்ணபுரந்
தன்னருஞ் சேர்வாய்ச் சார்ந்தவன் தாள்கள் நமக்கரணே. 4

அகரமே காட்டு மனைத்துல கேத்து மரும்பெறலாய்ப்
புகருடை முன்னோன் புண்ணிய மூர்த்தி தனக்கெங்கும்
நிகரில னாகி விண்ணெழு நீண்மதிட் கண்ணபுர
நகரினன் நம்பன் நலன்கழல் நாளும் நமக்கரணே. 5

திசையிரு நான்கும் தேவரும் தேசின் சுடரிரண்டும்
அசலமு மாறு மடவி யனைத்தும் படைத்தமுதல்
அயர்விலன் நம்ப னணிமதிள் சூழ்தருங் கண்ணபுரம்
நயனுற வந்த பரமனின் நற்கழல் நாடுவமே. 6

2. காருட வெற்பு—கருட பர்வதம். கடிதினில்—விரைவில். 3. பெருமானது மணிமுடி, திருவடி, திருமேனி இவை திரு மந்திரத்தின் பதங்கள் மூன்றையும் காட்டுவன. முதற் பதம்; காப்பவன் என்பது குறிப்பு; இதைக் காட்டுவது திருமுடி. இரண்டாம் பதம்: இவனைப் பெறுவதற்கு உபாயம் காட்டும். இதைக் குறிப்பது திருவடி. மூன்றாம் பதம்: இவன் நமக்கு ஆதாரம் என்பதைக் காட்டும்; இதைக் குறிப்பது திருமேனி. 4 மூன்று வேதங்களின் சாரமான, அ, உ, ம— இவற்றின் சேர்க்கை பிரணவம்; இது காட்டுவது பெருமான். 6. யாவும் பெருமானது படைப்பு. அசலம்—மலை. அடவி—காடு.

ஊர்வன மற்று முயிர்களும் பிற்றைப் பொருளெல்லாம்
பாரினில் மல்கப் படைத்தவன் காரணன் தானாகுஞ்
சீரின னென்றுமோர் தேசினன் திண்மதிட் கண்ணபுரத்
தோரிறை யாக வுற்றவ னொண்கழ லேத்துவமே. 7

தொடிமுத லாக நுவல்தருங் கால விரிவோடும்
படர்தரு மூழியுங் கற்பம் பலபல தானேயாய்ப் [புரம்
படர்புகழ்ச் செல்வன் படர்பொழிற் பாங்குடைக் கண்ண
இடவகை கொண்டா னிவனடி யேத்திநா மின்புறுவோம்.
8

பீலிகை முதலாப் பிரமனுங் கொள்வதாம் பேரின்பும்
கோலமாம் வாழ்வும் குறையில வானும் படைக்குமிவன்
வாலறி வாளன் மணிவணன் காவளர் கண்ணபுர
மாலிவன் தாள்கள் வணங்கிநாம் நாளும் வளமுறுவோம்.9

நிலையில தாகும் நிலனொடு வானும் பரம்பதமும்
சலமுடை யின்புந் தளர்வில தாகி வளனெல்லாம்
நிலவிடத் தானோர் காரணன் நீண்மதிட் கண்ணபுரம்
நிலைபெறுஞ் சேர்வென நின்றவன் தாள்கள்
நமக்காணே. 10

## 3. காரணன்

வாச மலராள் வனையும் வரைமார்பன்
ஈச னுயிர்களுக் கெல்லா மெழிலுருவன்
மாசி லாமணி வண்டறை மாலையினன்
தேச னரும்பெறற் சேர்வாம் கணபுரமே. 1

---

7. சராசரங்கள் படைத்தவன். 8. காலமும் இவன் படைப்பு. 9. பீலிகை—எறும்பு. 10. சலமுடை—நிலையில்லாத.

1. அகரத்தின் கருத்துக்கள்:பெருமானே காரணம்.அவனே காப்பவன். இப்பகுதியில் விவரிப்பது, அவன் காரணன் என்பது. வாசம்—பரிமளம். வாசமலராள்—பெரிய பிராட்டியார்.

அந்தமி லின்பத் தமரர்க் கதிபதியாம்
முந்தை முகுந்தன் மூவுல காளுமிவன்
எந்தை யெனக்குமி ரீடில் கருணையினன்
வந்து வதியும் தலமாம் கணபுரமே. 2

அரியதாம் ஞானத் தயன்றனைத் தோற்றியவற்
கரியதாம் வேத மளித்தவன் நாரணனாம்
வரனவில் சீரால் வரையிலா வின்புடையான்
பரம்பரன் வாழும் பதியாம் கணபுரமே. 3

தேவராய்த் தேறு முயிர்க்கெலாந் தேவாகி
யாவருந் தானா யவர்க்கருள் செய்யுமவன்
மூவா முதல்வன் முதுமறை முன்பயந்தான்
கோமா னுறைதருங் கோயில் கணபுரமே. 4

உயிர்தமின் வாழ்வு முணர்வுஞ் செயல்களுமாய்
அயர்விலா வண்ண மவையெலாங் காக்குமவன்
உயர்சுடர் தானா மொருவ னுறைவதுவே
கயல்மலி வாவிகள் சூழுங் கணபுரமே. 5

பூதமோ ரைந்தும் புவியும் படைத்ததனிச்
சோதியாய்த் தோன்று முயிர்களுந் தானாகி
வேத நெறியை விரித்ததொர் வித்தகனாம்
நாதன் விரும்பும் நகராங் கணபுரமே. 6

---

2. இவன் தேவர்களுக்கு அதிபதி. 3. இவன் ஞானமயன்; பிரமனைப் படைத்து, அவனுக்கு வேதங்களை ஓதினான். வரன் நவில்—சிறப்பெனக் கூறும். 4. தேவர்களுக்கு அந்தர்யாமி. தேவராய்...உயிர்கள்—தேவர்கள். மூவா—மூப்பில்லாத. 5. உயிர்களின் வாழ்வு, உணர்வு, செயல்கள் யாவும் இவனாலே. உயர் சுடர்—வானில் இயங்கும் சுடர்கள். 6. ஐந்து பூதங்களாகிய காரணங்களும், பூமி முதலான காரியப் பொருள்களும் இவனே. இவனே வேத நெறியை விளங்கச்செய்தவன் வித்தகன்—அறிஞன், சிறந்தவன்.

ஊழியில் வெள்ளத் துயிர்களைத் தான்புரப்பான்
ஆழிப் பரப்பினி லாலிலை யிற்றுயின்ற
கேழிலா வன்பன் கேசவன் தானுகந்தே
வாழும் புரமோ வளனார் கணபுரமே. 7

காலமோர் மூன்றாய்க் கணக்கிலாக் கற்பமதாய்க்
காலமே காணாக் ககனத் திறையவனாம்
வாலறி வாளன் வளரும் மகிழ்வுடைய
மாலோ னுறைவாம் மதிள்சூழ் கணபுரமே. 8

அணுதொறுந் தானுறைந் தண்டக் குலந்தன்னுள்
அணவ வொடுக்கு விபுவா மருந்தகையன்
மணிமய மேனியன் வாழ்வாம் மறிகடற்குப்
புணையெனத் தோய்வான் புரமே கணபுரமே. 9

மண்ணொடு வானிலும் மல்கு முயிர்களுமாய்
எண்ணில் சராசர மெல்லாந் தனக்காக்கிக்
கண்ணென யாவையுங் காக்குங் கமலமலர்க்
கண்ணன் கருதும் புரமாங் கணபுரமே. 10

## 4. காப்பவன்

அன்னையா யத்த னாகி யன்புடை யிறைவன் சௌரி
பொன்னென வுயிரி னங்கள் புரக்குமோ ரார்வங் கொண்டு
பொன்னுல கோடு மண்ணிற் பொருந்திவா முயிர்க
ளெல்லாம்
இன்னவன் காப்பே யாகி யிவனருள் தன்னை நோக்கும்.1

---

7. வெள்ளத்தில் உயிர்களைக் காத்தவன். கேழ்—ஒப்பு. 8. காலத்திற்கும் இவனே காரணம். ககனம்—ஆகாசம், வானுலகு; அங்குக் காலம் இல்லை. 9. அண்டக்குலம், தன்னுள் அணவ (சேருமாறு). 10. தனக்காக்கி—இவற்றுக்குத் தான் காரணமாகி.

1. பெருமான் எவ்விதம் காப்பான் என்று விவரிப்பது இப் பதிகம். புரக்கும்—காக்கும். அத்தன் — தகப்பன். பொன் னுலகு—ஸ்ரீவைகுண்டம்.

மண்மிசை வாழ்வி னோடு வானுறப் பேணும் முக்தி
விண்ணவர் தொண்டில் தோய மேவுவ யாவும் நல்கித் [து
துண்ணெனத் துனியைத் தீர்த்துத்துவள்வற வின்பம் பெய்
கண்ணெனக் காக்கும் நம்மைக் கருதுவ யாவு மீந்தே. 2

வானொடு மண்ணி லெங்கும் மலர்மக ளோடு மன்னித்
தானொரு காப்பி லூன்றுந் தனதரும் பேறே யாக [லாம்
மான்விழி மங்கை நோக்கால் மாய்ந்தறும் வினைக ளெல்
கோனிவ னன்பே நேரும் குறையெதுங் காண மட்டோம்.3

தேவருந் தேவர் தங்கள் தலைவரு மாகுஞ் செல்வர்
யாவரும் மாலோன் பாலே கேட்பது காப்பே யாகும்
மேவரும் பதமே வேண்டி வேள்வியால் வணங்கி நிற்பர்
ஆவன நலன்க ளெல்லா மவர்க்கிவன் செய்வன் மாதோ.4

நிலந்தனிற் குடில மைத்து நெற்பயிற் செய்ப வன்போல்
நிலந்தனில் வந்து தோய்ந்து நெகிழ்வறக் காக்கு மீசன்
நிலவுமோர் சோதி யோங்க நேடுமோர் வடிவ மேற்று
நலமுறக் காப்பா னாகித் தன்னலம் நாட கில்லான். 5

அறனெலாந் தேய்ந்து மண்ணி லாசுரம் மண்டும் போது
நெறியதே நிற்க வாகும் வகையதே நேடித் தானோர்
உருவிலே தோன்றி மாந்த ருய்வினுக் காவ செய்வான்
உருவிவன் கொள்வ யாவு மொருவரு மெண்ண கில்லார்.6

---

2. காக்கும் வகை: விருப்பத்தை அளித்து வெறுப்பதை அகற்றுதல்: இன்பம் பெய்தல், துன்பத்தைத் துடைப்பது. மண்ணில் சிலர் நல்வாழ்வு கோருவர், சிலர் முக்தி கோருவர். ஸ்ரீவைகுண்டத்தில் நித்தியசூரிகளும் முக்தர்களும் தொண்டே விரும்புவர். துண்ணென — விரைவில். 3. வானிலும் பூமியிலும் பிராட்டியுடன் கூட இருந்து அருள்புரிவான். 4 தேவர்களும் தேவர்களது தலைவர்களும் காப்பே கோருவர். வேள்வி —நியமத்தால் செய்யும் பூசை. 5. ஏற்ற வகையிலே அவதாரம் செய்து காப்பான். 6. ஆசுரம்—அசுரத் தன்மை. இவன் ஏற்கும் உருவங்கள் எண்ண முடியாது.

தோன்றுமோருருவுக் காகுந் தானமோ சொல்லுக் கில்லை
தோன்றுவ னெங்குந் தூணில் துரும்பிலும் நீரும் நாடிச்
சான்றசீ ரன்பர்க் காகத் தன்னுரு மாயோன் காட்டும்
ஆன்றசீ ரமலன் தோன்ற அகலிடம் வாழு மன்றோ? 7

ஏற்றதோர் வடிவுக் காகு மெல்லையே எண்ணகில்லோம்
தோற்றமோர் மீனு மாமை சுடரொளி யேன மாகும்
சீற்றமே கொள்ளுஞ் சீய வடிவிலுந் தெவ்வொ டுக்கும்
மாற்றிலாப் பரிவ னாவன் வல்லவர் தமக்கும் மாலே. 8

அன்பரைக் காக்க வாகு மார்வினில் மாலோன் றானும்
தன்னிலை மறந்து கொள்ளும் பாடுதான் சாற்ற லாமோ?
தன்பதந் துறந்து கானில் தாதரைக் காத்த ளித்தான்
துன்பமுங் கஞ்சன் பெய்த துனியெலாஞ்சொல்லலாமோ?.9

அறிவுடை யன்பர் தம்மை யகலிடந் தோற்று வித்தும்
அறிவுடை யான்றோர் பாலே யகத்துளா வேசஞ் செய்தும்
அறிவினைப் பெருக்கி மாலோ னகலிடங் காப்பா னாகி
நெறியெலாம் பரப்பி நிற்பன் நின்மல னுய்ய நாமே. 10

---

7. மக்களைக் காப்பதற்கு இவன் எங்குந் தோன்றுவான். தூணில் தோன்றினான். அவதாரத்தின் நோக்கு: சான்ற சீர்...—தனது அன்பரிடம் களித்துப் பழக. 8. இவன் ஏற்கும் வடிவு, யாதென்று எண்ணுவதற்கில்லை; மீன், ஆமை, வராக வடிவங்கள் ஏற்றான். 9. இவ்வாறு இவன் அவதாரஞ் செய்து, படாதன பட்டான். இராமனாய்க் கானகம் சேர்ந்ததும், கண்ண பிரானாய்ப் பிறந்து துன்பங்கள் நேர்ந்ததும் குறிப்பு. தன்பதம்— தனது பதமாகிய அரசு. பெய்த — அளவின்றி ஒன்றின் மேலொன்றாக விளைவித்த. 10. காக்கும் வகை: அடியார்களைத் தோற்றுவித்து, அறநெறி உபதேசிப்பது. ஆழ்வார்கள் ஆசாரியர் கள் மூலமாக நெறியை வளர்த்தான். வியாச பகவானிடம் ஆவேசித்தது போல சான்றோர்களிடம் ஆவேசித்து நன்னெறி யைப் பரப்பினான்,

## 5. ஆய—பொருள்

பாரோ டுயிர்கள் படைத்துக் காக்கும் பரிவுடைய
நாரா யணனே! நானோ நிற்கா முயிரானேன்
தேறேன் பிறனோர் தெய்வம் நிற்கே பணிசெய்யும்
பேறே யிதுவாம் பேணேன் வேறே பெருமானே! 1

விண்வாய் மேவும் வெள்ளத் துயிர்கள் வயிற்றொடுக்கிக்
கண்ணாய்ப் புரந்தாய் கண்ணா! நானோ உனக்குரியேன்
நண்ணேன் வேறோர் புகலா நானுன் கழலின்றி
எண்ணேன் சரணா தொண்டே செய்வ னெளியேனே. 2

மறையும் நெறியும் மனுவும் நீதி வழங்கியருள்
இறைவா! எந்தாய்! நீயே எனக்காம் குலதெய்வம்
பிறிதோர் தெய்வம் பேணேன் நின்றன் மலரடியில்
உரிதாந் தொண்டே யுள்ளங் கொண்டே னுறுபொருளா. 3

பிறந்த போழ்தே பெற்றேன் பெருமான்! நினதருளே
சிறந்தேன் மாலே! நீயென் சிந்தை திகழுவையால்
மறந்தும் நாடேன் மற்றோர் தெய்வம் மதுசூதா!
உறைந்தே னுன்றன் கழலி லுற்ற பணிசெய்வான். 4

வானை மறந்தாய் மண்பால் மாந்தர்க் கருள்செய்யக்
கோனே! வந்தாய் கொண்டே னுன்னைக் குறிப்பினிலே
நானோர் தெய்வம் நாடேன் நம்பீ! உனையல்லால்
தேனே மலரு முன்றன் பதமென் சிரத்தேற்பன். 5

அன்ப ரார்விற் கோரும் வடிவா யமைவாய்நீ
பொன்னே! என்ற னுள்ளம் பொங்கப் புகுந்தனையால்
நின்னை யின்றி நினைக்க கில்லேன் நெடுமாலே!
இன்ப மிதுவே யுன்னை யேத்தி வணங்குவதே. 6

---

ஆய: நாலாம் வேற்றுமை உருபு. கருத்து: நாம் பெருமானுக்கே உரியோம். 1. பெருமான் உயிர்களுக்கு உயிர். 2. வெள்ளத்தில் நம்மைக் காத்தான். 3. வேதம் முதலியன அளித்தான். 4. பிறந்தபோதே என்னைத் தனக்காக்கிக்கொண் டான். 5. ஸ்ரீ வைகுண்டத்தில் கொள்ளும் பேரின்பத்தை மறந்து நம்மைக் காப்பதற்காக வந்தான்.

பரனே! உன்னைப் பாடிப் பணியப் பதின்மர்தம்
மறையே நல்கி மனத்து ளென்று மொளிர்வாயால்
குறையே யில்லை கூறேன் வேறோர் பொருளாக
அரியே! உன்றன் பேர்க ளடியே னிசைப்பேனே. 7

தென்பால் வடபாற் குடக்குங் குணக்கு முறைவாய்நீ
அன்பர் தொழவே அடியே னகத்தே யுனைக்கொண்டேன்
நின்பா லின்றி யடியேன் நெஞ்சம் நிலவாதுன்
செம்பொற் கழல்பால் தொண்டே சிந்தை யடர்த்தேனே. 8

கருணைக் கடலாய்க் கற்றோர் பரவும் பரமாசான்
அருளே காட்ட அடியேன் பாலே யருள்செய்தாய்
பரனே! நின்னை யின்றிப் பாடே னுனதடியிற்
பரவுஞ் சிந்தை கொண்டேன் பரமா மிதுவென்றே. 9

கண்ணா! கண்ண புரத்துக் கனியே! கருமணியே!
அண்ணால்! நின்பா லன்பே பெறநீ யருள்செய்தாய்
நண்ணேன் வேறோர் நாதன் நம்பீ! நினையல்லால்
எண்ணே னுன்பாற் தொண்டே யின்றிப் பிறிதொன்றே. 10

## 6. மகரம்—பொருள்

ஊனி லுலவு முயிரே! உலப்பில்லா
வானி னிறைவன் மார்பின் மணிபோலே
ஆனாப் புகழே கொள்வா யப்பெருமான்
தானு முனதகஞ் சாருந் தகையினனே. 1

---

8. உன்னைத் தொழ நான்கு திசைகளிலும் திருக்கோயில் கொண்டுள்ளாய். என் உள்ளத்திலும் உறைவாய். 9. ஆசாரியனிடம் என்னைச் சேர்வித்தாய். பரம் ஆம்—மிகச் சிறந்தது. 10. பெருமானிடம் வேண்டிக் கொள்வது.

*பிரணவத்தில் ம என்ற எழுத்து, ஆன்மாவைக் காட்டும். ஆன்மாவைப் பற்றி இப்பதிகம் விளக்கும். ஆன்மாவை விளித்து, அதன் சிறப்பைக் கூறுவது. 1. ஊன்—மாமிச மயமான உடல், உலப்பு—அழிவு. மார்பின் மணி—கௌத்துபம், இது ஜீவர்களைக் காட்டும்.*

அணுவா யொளியா யறிவுக் குறைவிடமாய்ப்
பிணியா ருடலின் பிணைப்பிற் பிணைப்புற்றாய்
மணியின் புகர்போல் மல்கும் புகருடையை
உணர வரிதா லுனைப்புலன் தம்மாலே. 2

வளர்தல் தேய்தல் மாய்த லுனக்கில்லை
தளர்வே யின்றித் தாமோ தரனுக்கே
கிளரும் பரிவிற் கேழிற் பணிசெய்யும்
வளனே வாய்ந்தாய் வாழ்வு மினிதன்றோ? 3

நீராற் படையால் நெருப்பா லிடரெதுவும்
நேரா துனக்கோ நெகிழ்வே யிலைகண்டாய்
நாரா யணன்தாள் நாடும் நலனுடையை
வேறோர் நலனோ மிக்க தெதுவுண்டோ? 4

உருவு முறுப்பு முடல்போ லுனக்கில்லை
பரவி யுடலி னுணரும் பதனுற்றாய்
பரம னிறைவ னுன்னைப் பரிப்பானாம்
ஒருவ ரெவரு முன்னை யுணராரே. 5

பொல்லாப் புலன்கள் பொலியு முடலினிலே
எல்லே! படிந்து மேதுந் துயர்காணாய்
வல்ல தெனவே மனத்தைப் படிவிக்க
வல்லை யெனிலோ வாழ்வே யினிதன்றோ? 6

2. ஆன்மா அணுவானது, ஒளி மயம், அறிவு வாய்ந்தது. அதன் புகர், மணியின் புகர் போன்றது, 3. உடல் போல் மாறு படுவதன்று. பெருமானுக்கு அன்பே இயல்பாக வாய்ந்தது 4, ஒரு வகையாலும் இதற்கு அழிவில்லை. தளர்வே இல்லை. 5 ஆன்மா வுக்கு உருவம், உறுப்பு இல உடல் முழுதும் பரவி அறியும் இயல்புடையது இது. பெருமானுக்கு இது உறைவிடம். இதை ஒருவரும் காண முடியாது. 6. உடலிலே இருந்தும் இதற்குத் துன்பமில்லை. மனத்தை அடக்கக் கூடுமானால் வாழ்க்கை இனியதாகும்.

முன்னம் படர்ந்து மொய்த்த வினைப்பயனால்
மன்னு முடலோ வுனக்கு மலிந்தடருந்
துன்பம் வினைக்கு மிதுவோ துவளுங்கால்
பொன்னாம் பதியே புகுந்து பொலிவுறுவாய். 7

மாசு கழிந்த வுன்றன் மனந்தனிலே
ஈச னுறைந்து தானும் மகிழ்கொள்வான்
பேசில் தனக்காம் பேறாக் கருதித்தன்
வாச மலரார் மார்பி லணைத்துகக்கும். 8

மாகத் திறைவன் மண்பா லடியரொடும்
போகம் புணர்க்கப் போந்தான் கணபுரமே
நாகத் திருப்பும் வேண்டா நமையவன்றன்
ஆகத் தணைப்ப னுயிரே! அறிதெனவே. 9

பிறப்பா லுயிரே! பெருமா னுனக்கேயாம்
சிறப்பே பெற்றாய் செல்வ மவற்கானாய்
மறப்பே யின்றி யவன்றன் மலரடியில்
உறைப்பி லுறைவாய் தொண்டே யுளங்கொண்டே. 10

## 7. உகரம்—பொருள்

பிறந்தேன் பலவாம் பிறவிக ளுன்னைநான்
மறந்தே னெவையும் மாலே! எனதென்றே
யிருந்தே னிறைவா! உனதரு ளெண்கொண்டே
சிறந்தே னடியே னுனக்கெனுஞ் சிந்தையனே. 1

---

7. ஆன்மாவுக்குத் துன்பம் உடலாலே. 8. மனத்தில் மாசு கழிந்தால், பெருமான் அதில் உறைவான்; ஆன்மாவைத் தன் மார்பில் அணைத்து மகிழ்வான். 9. அன்பரோடு பழகப் பெருமான் இங்கு வந்ததால், நமக்கு வைகுந்தமும் வேண்டா. 10. ஆன்மாவின் சிறப்பு. உயிர்—ஆன்மா.

1. ஆய என்பதுடன் உ என்ற எழுத்து பெருமானுக்கே என்பதைக் காட்டும். இது வரையில் நான், எனது என்றிருந்தேன். இப்போது இதை மறந்து, உன் அருள் ஒன்றையே நினைக்கின்றேன்.

விரிந்த வுலகும் விரும்பு முறவெல்லாம்
பரந்த பொருளும் பரனே! எனக்கெனவே
இருந்தே னுனதருள் நோக்கா லெனைநன்னர்
அறிந்தே னுனக்கா மரும்பொருள் தானென்றே. 2

நானுன் கைப்பொருள் நாரா யணனே!கேள்
நானெவ் வாறென் நலனுக் குரியேனோ?
கோனே! உன்றன் குரைகழல் தன்னிலுறுந்
தேனாந் தொண்டே சிறப்பெனத் தேர்ந்தேனே. 3

ஒளியா முயிர்க ளுனக்கே யுரியனவே
தெளியும் மனமே வளர்ந்து சிறந்தேன்நான்
களைக ணெனக்கெனக் காணேன் பிறனொருவன்
அளிபெய் தென்னையுன் னடிமைக் கேற்பாயே. 4

அரியே! உனக்கே அடியே னுரியேனே
உரையோ டுடலு முளமு முனக்கேயாம்
பிரியா தெனதுளம் பெம்மா னுறைந்தனையால்
அறியேன் பிறிதே யுனதரு மன்பின்றி. 5

அன்னையு மத்தனும் சுற்ற மவைநீயே
அன்பும் பரிவு மடர்த்தனை யென்பாலே
என்னினி நானோ எண்ணுவ தொன்றுளதோ?
மன்னினை யென்றன் மனத்துள் மணிவண்ணா! 6

வேறொரு தெய்வம் விரும்புவ தில்லைநான்
கோரும் நலன்கள் கோனே! அளிப்பாய்நீ
ஆரா வமுதே! அடியே னுனக்கானேன்
ஓரேன் நினையே யின்றி யொருபுகலே. 7

---

2. பொருள்—செல்வம். 3. தேனாம் தொண்டு—விரும்பும் கைங்கர்யம். 4. ஒளியாம் உயிர்கள்—சோதிமயமான ஆன்மாக்கள். களைகண்—புகல், ஆதரவு. 5. உரை, உடல், உளம்: முக்கரணங்கள். 7, எனக்கு ஆராவமுதானாய்; நான் உனக்கே யானேன். உன்னையின்றி வேறு புகல் நினைக்கமாட்டேன். ஓர்தல்—நினைத்தல்.

புலனைந் தாலே புணரு முடற்காகும்
நலனே யடியேன் நாட மனங்கொள்ளேன்
பொலிந்தா யெனதகம் பொன்சேர் திருமார்பா!
அலந்தலை யேதுங் காணே னடியேனே. 8

பொன்னொடு தாரம் புத்திரர் சம்பத்தால்
என்னினி நானோ ரின்பம் விரும்புவதோ?
பொன்னி யவளொடும் புந்தி புகுந்தென்றன்
மன்னவ னானாய் வளரு மெனக்கின்பம். 9

கற்றார்க் குயிராங் கண்ண புரத்திறைவா!
உற்றார் கிளையொடு முன்னும் பொருளெல்லாம்
எற்றே! இனையன வாயினை நின்னருளே
பெற்றே னுனைநான் பிரியே னினியென்றும். 10

## 8. நாராயணன்

காரார் பொழில்தழுவுங் கண்ண புரக்கோனே!
சீரார் திருநாடோ வுன்றன் திருத்தாமம்
நாரா யணனாவாய் நாரந் தமையொடுக்கி
பாரோர் தமக்காமுன் தாமம் பரம்பதமே. 1

---

8. புணரும் — அடர்ந்த. பொலிந்தாய் — விளங்கினாய். அலந்தலை—துன்பம். உன்னும்—விரும்புகிற.

பரம பதத்தில் வாழும் நாராயணன் இங்கு வந்துள்ளான். "ஏஷ நாராயண: ச்ரீமாந்...ஹ்யாகதோ மதுராம் புரீம்." இங்கு மதுராம் புரீம் என்பதற்குத் திருக்கண்ணபுரத்தை என்று விளக்கினர், ஆசாரியர். நாரங்களைத் தன்னுள் கொள்பவன் நாராயணன்.

1. பாரோர்...பரம்பதமே — "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்பது குறிப்பு. திருநாடு—பரமபதம், தாமம்—இடம்.

நிகரில் நெடுவானில் காவும் நெடுமதிளும்
புகரும் புதுமணமும் பொங்குந் தனியின்பும்
நகர்வ நிலையுறுவ நார மிவையாவ
உகவைக் குபநிடத மைந்தா யொளிர்வனவே. 2

யாரு மெவையெவையும் நிற்கே யனுகூலம்
கோரும் நலமொன்றே கொள்ளும் பணிபுரிய
நார மிவையாவ நலிவே யிவைகொள்ளா
சோர்வே காணாமல் தோய்வ திருத்தொண்டில். 3

மேனிப் புகரோடு மெய்யி னணியினமும்
மேனி மணிநிறமும் மின்னும் மணிமுடியும்
தேனின் துளவத்தார் தெய்வ வளைசங்கும்
கோனே! இவையெல்லாம் நாரக் குழுவாவ. 4

நின்னுயிர்த் தேவியரும் நின்னணை சேடனொடு
நின்பதத் தொண்டிலுறும் நேமக் கருடனொடு
நின்னெழில் மாந்திடுவோர் நித்திய முக்தரெலாம்
நின்றனக் காம்பலவும் நாரம் நவிலுவரே. 5

வானும் கதிர்மதியும் மற்றும் நினைப்பரிய
ஆனாச் சுடரினமு மண்டம் பலபலவும்
கானும் மலைபலவும் காலப் படர்வோடு
நானா வகையுயிரும் நார வகையாமே. 6

---

2. நாரங்கள்: அழியாதவற்றின் திரள்கள். ஸ்ரீவைகுண்டமும் அங்குள்ள உயிர்களும் மற்றும் யாவும், பெருமானின் திருமேனி, ஆபரணங்கள், திவ்யாயுதங்கள், கல்யாண குணங்கள், இவை எப்போதும் நிலைத்திருப்பன. 3. யாவும், யாவரும் பெருமானுக்கு அனுகூலம். 4. புகர்—சோதி. 5. தேவிமார், ஆதிசேஷன் முதலான யாவரும் நாரங்கள். 6. வைகுந்தத்திற்குக் கீழே உள்ளவையும் நாரங்கள். ஆனா—அழியாத. அண்டங்கள், அவற்றிலுள்ள உயிர்கள், காடுகள், மலைகள், காலம் யாவும் நாரங்களே.

ஆற்றின் பெருக்கொப்ப வற்று முருக்கொண்டும்
கூற்றுக் கிலக்காகுஞ் சீவர் குலமெல்லாம்
காற்றுக் கிலக்காகுங் காவும் மலையனைய
நாற்றத் துழாய்முடியோய்! நார மிவையெல்லாம். 7

யாவும் வயிற்றொடுக்கி யாவும் புரக்கவென
மேவி யிவற்றுள்ளே தோய்ந்து மிகமகிழ்வாய்
கோவே! பரிவுடைய தாயாய்க் குருவாகி
ஆவ தலத்துக்கா மத்தனும் நீயாவாய். 8

அண்டர் தமக்காகு மாதிப் பெருமானாய்
மண்டி யுறைகின்றாய் மாந்தர் மனத்துள்ளே
வண்டார் துளவத்தாய்! வாயால் நினதருமை
தொண்டர் குழுவெல்லாம் நாளுந் துதிசெய்வ 9

மாகத் திறையவனாய் மண்ணி லுயிர்காக்கும்
போகந் தழைத்திடவே போந்தாய் கணபுரமே
நாகத் திருப்பெனக்கு நாடிப் பயனெதுவோ?
ஆகத் திருந்தனை நீ அத்தா! துணையாக. 10

---

7. ஸ்ரீவைகுண்டத்திற்குக் கீழுள்ளன யாவும் நாரங்கள்: இவை அழியு மியல்புடையன; எனினும் அவ்வப்போது மீண்டுந் தோன்றுவன. ஆறு வடிந்தும் மீண்டும் பெருகுவது போல் இவற்றின் நிலை; ப்ரவாஹநித்யம் என்பர். கூற்று—யமன். 8. நாராயணன் என்பதற்குக் கருத்துக்கள் இரண்டு. நாரங்களுக்கு உறைவிடம்; நாரங்களில் உறைபவன்; தாய் போல் பரிவுடையவன், குருவைப் போல் ஆன்மாவுக்காவான், 9. தந்தையைப் போல் நலனே நாடுவான். மனத்துள்: அந்தர். யாமியாகி. 10. மாகம்—ஆகாயம்; இங்கு ஸ்ரீவைகுண்டம். நாகம்—ஸ்ரீவைகுண்டம். நாடி பயன் எதுவோ?—அங்கு உன்னோடு கூடிப்பெறும் இன்பம் இங்குப் பெறுவதால்: காரணம்; ஆகத் திருந்தனை—என்னுடைய மனத்தில் உறைந்தாய்.

## 9. நம:—பொருள்

அன்னையு மத்தனு மாகிய வச்சுதன்
மின்னு முடியன் விரும்பி நமையெல்லாம்
பொன்போல் புரக்கும் புண்ணிய னன்னவற்
கன்பே அடியே னளிக்கும் பொருளே. 1

தன்மடி யுய்த்துத் தன்சேய் குலவிடு
மன்னையு மத்தனு மன்ன வுயிர்களைத்
தன்னகத் துய்த்துக் குலவுந் தகையினன்
இன்பென நம்முரை யேற்ப னுகந்தே. 2

''எந்தா யிறைவா!'' என்று நாம் கூவிடச்
சிந்தை குளிரும், ''சிறந்தே'' னெனுமிவன்
''அந்தமி லின்ப மாமிதே'' என்பனால்
கொந்தார் துளவத் தாரான் குறிப்பிதே. 3

தேட்டமாய்த் தண்ணீர் தேடிப் பருகி
வாட்டமே மாற்றுவ வொப்பத் திருமால்
நாட்டம் நமதிடம் நட்டுத் தனதாம்
வேட்கை தணிவன் வியப்பிது வன்றோ? 4

பசியினுக் கன்னமே பாரிப் பதுபோல்
நசையிலே நம்பன் நமையே நோக்குவன்
பசையுற நெஞ்சிற் பரனைநாம் கூட்டியே
அசைவிலா வார்வத் தனுதின மேத்துவாம். 5

---

1. நம: என்பதன் கருத்து: நான் எனக்கல்லேன், நீ எனக்கு உபாயம். எல்லா வகையாலும் பெருமான் நம்மைக் காப்பான்; இவனுக்கு நாம் அளிப்பது அன்பே. 3. நாம் இவனை ''எந்தாய்'' என்று விளித்தால், இவன் காப்பான். 4. இவன் விரும்புவது: நம்முடன் கூடிக் களிப்பு. இந்த விருப்பம் இவனுக்குத் தண்ணீர் வேட்கை போல. நாட்டம்—குறிப்பு. 5 இந்த விருப்பம், பசியால் அன்னம் விரும்புவது போல. நசை—ஆசை. பசை—அன்பு. அசைவு—இளைப்பு.

வள்ளலாம் மாலோன் மலரடி தன்னில்
கள்ளமே காணாக் கருத்தின ராகியே
உள்ள முறைசெயல் மூன்று மொருங்குறத்
தெள்ளியார் தோய்வர் சீரிய தொண்டிலே. 6

அரிதாம் பொருளென வாருயிர் காக்குநம்
இறைவ னுகப்பினுக் கேயெனத் தொண்டில்
முறையினில் தோய்வர் முதுவோர் தமைத்தாம்
இறையும் நினையா ரெதுவுந் தமக்கென. 7

நம்ப னுறைவினை நாம்வலஞ் செய்தவன்
செம்பொற் கழல்மிசை சென்னி பொருத்தியே
அன்ப ரடியா ரருளிய பாவினம்
இன்பத் திசைத்து வாழ்வோம் மகிழ்விலே. 8

திருமா லுறைவிலைச் சீருறச் செய்துநாம்
வருமா தரத்து மலரடி தன்னிலே
விரையார் மலருந் துளவமுந் தூவுவோம்
நிரையெனத் தீப மேத்துவம் களித்தே. 9

கண்ண புரத்துறை கண்ணவென் மாலே!
நண்ணி யுனைநான் நாளுந் தொழுவேன்
எண்ணி லெனக்கென யாதுங் கருதேன்
அண்ணால்! அடியே னடிமையே யேற்பாய். 10

---

6. தெள்ளியார்—அறிவாற் சிறந்தோர். 7. முதுவோர்—பெரியோர். இவர் செய்வது: தம்மைக் கருதாமல் இறைவனுக்கே யாவது. 8. நாம் செய்யக் கூடியன: திருக்கோயிலை வலஞ் செய்வது, அவன் திருவடிகளை வணங்குவது, அடியார் அருளிய பாசுரங்களை ஓதுவது. 9. மேலும் செய்வன: திருக்கோயிலைச் சீருறச் செய்வது; புஷ்பம், தீபம்—இவை அளிப்பது. நிரை—வரிசை. இவை பதினாறு வகைப்பட்ட உபசாரங்களுக்கு உபலக்ஷணம். 10. நம: என்பதன் கருத்து: எனக்காக ஒன்றும் வேண்டேன்; உன்னையே தொழுவேன்.

## 10. ஒன்பானுறவு

அன்னையு மத்தனுமே யாயினை யச்சுதனே!
என்னை யுனக்குயிரா யெந்தாய்! படைத்தனைநீ
உன்றன் வயிற்றினிலே யுய்த்துயிர் காப்பாயால்
பின்னு மிவற்றுள்ளே பேணிப் புகுந்தளிப்பாய்! 1

படைப்பவர் காப்பதுதான் பாரினில் நேருவதோ?
படைப்பவை நீகாப்பாய் பரனே! பரிவினிலே
நொடிப்பொழு தோய்வதிலை நுவலரு மார்வத்தால்
விடத்துணி யாயெமைநீ மேவலிற் காப்பாயால். 2

காரண மாவாருங் காப்பினி லூன்றுநரும்
ஓருந் தலைவரென உலகிதிற் காண்பதிலை
நாரண னேநீதான் நங்கட் குரியபுகல்
யாரு முனக்குரியர் யானு முனக்கடிமை. 3

குலமகள் கொழுநனையே கோருவள் தெய்வமென
குலங்குல மாவுயிர்கள் கோவல! நிற்காவ
நலனென நின்கழலே நாடுவ னோர்புகலா
நிலனிதில் வேறொருவன் நினைத்தில னெற்குயிரா. 4

---

திருவெட்டெழுத்தால் தேறுவது: நமக்கும் இறைவனுக்கும் ஒன்பது வகைத் தொடர்பு. அ என்பதால், 1. தந்தை, 2. காப்பவன்; ஆய என்பதால் சேஷி (தலைவன்); உ—என்பதால் பர்த்தா (கொழுநன்); ம—என்பதால் அறியப்படுவோன்; நம: என்பதால் ஸ்வாமி; நாரம்: சரீரம். அயநம்:—ஆதாரம்; மூன்றாம் பதத்தில் ஆய—போக்தா, நம்மைப் பெற்றுக் களிப்பவன். 1. பெருமான் காரணம். பெற்றதாய், பிறப்பித்த தந்தை. 2. காப்பவன் நீயே. ஓய்வின்றிக் காப்பாய். 3. நீயே தலைவன், நீயே புகல். 4. வைணவ சமயத்தின் அரிய கருத்து: உயிர்கள் பெருமானையே நாடுவன. எவ்வாறெனில், குலமகள் தனது கொழுநனையே புகலாகக் கொள்வதுபோல். வைணவர், "மறந்தும் புறந்தொழார்."

அரிதொரு ஞானத்தா லான்மா சிறந்ததுவாம்
அறிவதோ வுன்றனையே ஆதர மாகவிது
அறிவருங் காரணமே யாயினை நாரணனே!
மறைபுகழ் மாண்பினன்நீ வானவர்க் காந்தலைவன். 5

எனக்கிலை யானென்ப தெனக்கெலாம் நீயாவாய்
நினைக்கிலன் வேறெதுவும் நேரு முபாயமென
எனக்கிலை யாதரவா மாலனே! என்சுற்றம்
உனக்கென வேயென்னை யுகந்தினி தேற்பாயே. 6

பரிவினில் வெள்ளத்திற் பண்டி தனிலுய்த்தே
அரிதினி லெனைக்காத்தாய் நீயெனக் காதாரம்
பரம்பொரு ளாயினுநீ பதிந்தென துள்ளத்தில்
பிரிகிலை பெருமானே! பெருங்கடல் துயின்றவனே! 7

என்னுயிர் தனிலுறைந்தே என்நலம் நீயாவாய்
என்னுடை வாழ்வினொடு மென்றன் முயற்சிகளும்
அன்பனே! நியந்தாவா முனதா மருந்துகையோய்!
நின்னருட் கெல்லையிலை நேமியங் கையவனே! 8

என்னை யுனக்காக்கி இறைவநீ இன்புறுவாய்
நின்னுடை வானுறைவில் நீகொளும் பேரின்பந்
தன்னிலு மெனைக்கொண்டே தக்கதாய் நீமகிழ்வாய்
இன்னன வின்பமெலாம் இறைவனே! நின்பேறே! 9

---

5. இயல்பான ஞானத்தால் ஆன்மா இறைவனை உணரும் வகை. 6. நான் உனக்கு ஸ்வம் (பொருள்), நீ எனக்கு ஸ்வாமி (என்னை யுடையவன்). 7. பண்டி—வயிறு. பிரளயத்தில் என்னை வயிற்றில் வைத்துக் காத்தலால் நீ ஆதாரம். அன்றியும் உயிர்களுள் உறைவாய்: பஹிர் வ்யாப்தி, அந்தர் வ்யாப்தி; உள்ளும் புறமும் உறைதல். 8. உயிர்களை இயக்குமவன் நீ; நியந்தா. 9. உயிர்களை உனக்காக்கிக்கொண்டு நீ களிப்பாய்; அதாவது உயிர்களோடு கூடி மகிழ்வாய். நீ போக்தா, “அஹம் அந்நம்” என்பது குறிப்பு. பெருமான் என்னுடன் கூடி அன்னம் உண்பவன் மகிழ்வதுபோல் மகிழ்வான்.

கன்னிநன் மாமதிள்சூழ் கண்ண புரத்திறைவா!
உன்னுட னுயிர்கொள்ளு மொன்பா னுறவுதனை
உன்னுடை மந்திரத்தி லூறும் பொருளாகச்
சொன்னவில் மூத்தோர்தஞ் சொல்லால் வகுத்தனனே!
10

## 11. வராக சரம ச்லோகம்

உள்ளம் வலிவுற வுன்னும் பொழுதினிலே
வள்ளல் வராகனின் தாள்பணிவோம்
வள்ளல் வராகனின் தாள்பணிந்தால்—அவன்
உள்ளுவன் நம்மை யுவந்தேற்க. 1

காயம் வலிவி லியங்குங் காலையிலே
மாயன் வராகனை வணங்குவமே
மாயன் வராகனை வணங்கிடினோ—அவன்
ஆயும் நமக்காம் நலனெல்லாம். 2

தாது வனைத்தும் தடமுறும் போதினிலே
ஆதி வராகனை யடிபணிவோம்
ஆதி வராகனை யடிபணிந்தால்—அவன்
ஓதில் நமக்கே யுளனாவான். 3

---

10. *பெருமான் காரணன், காப்பவன், சேஷி, பர்த்தா, அறியப்படுவோன், நம்மை யுடையவன் (ஸ்வாமி), நமக்குச் சரீரம், ஆதாரம், நம்மைப்பெற்றுக் களிப்பவன்—என்ற ஒன்பது கருத்துக்கள்—ஆன்றோர் வகுத்த வகையில் அமைத்தேன்.*

1. *பெருமானை அடைவதற்குச் சரமமான (இறுதியான) உபாயத்தைக் கூறுவது சரம ச்லோகம். வராகப்பெருமான் பூமி தேவிக்கு ஓதியது: மனம் நிலையுற்று, உடல் திடமாக இருந்து, தாதுக்கள் சமமாக இயங்கும்போது, எவன் என்னை எங்கும் நிறைந்தவனாய்ப் பிறப்பிலியாக நினைப்பானோ, அவன் கல்லும் கட்டையும் போலிருக்கும் காலத்தில் அவனை நான் நினைப்பேன்; பரமான கதிக்கும் அழைத்துச் செல்வேன். 1,2,3,- மனம், உடல், தாது இவற்றின் நிலை.*

எங்கு முறைதரு மீசனை யிப்போதே
தங்க மனந்தனுள் வைப்போமே
தங்க மனந்தனுள் வைத்திடினே—அவன்
பொங்கும் புரிவினிற் காத்தருள்வான். 4

பிறவாப் பெருமான் வராகனை யிப்போதே
உறநம் முளத்தி லடர்ப்போமே
உறநம் முளத்தி லடர்த்திடினே—அவனும்
குறையறக் காப்பான் குறிக்கொண்டே. 5

மூப்பு முதிர்ந்து முயங்கிடும் போதினிலே
காப்பான் கருணையாற் காரனையான்
காப்பான் கருணையாற் காரனையான்—யாதும்
நீப்பே யிலனாய் மனத்துறைந்தே. 6

கல்லெனக் கட்டையாய் மாழ்கிடுங் காயமிதே
அல்லுறுங் காலை யவன்காப்பான்
அல்லுறுங் காலையிற் காத்திடுமோர்—வகையோ
சொல்லுவ தாவதோ துப்புறவே? 7

இன்றோர் பரிவில் நினைக்கி லிவன்றன்னை
நன்றென நம்மைப் புரந்தளிப்பான்
நன்றென நம்மைப் புரந்தளிக்கும்—வகைதான்
என்றும் நமையவ னேற்றகத்தே. 8

---

4. நாம் நினைக்கவேண்டியது; இவன் எங்கு முறைபவன்; ஆதலால் நம்மிடம் சேர்ந்து காப்பான். 5. மேலும் நினைக்க வேண்டியது: இவன் பிறவாதவன். 6. முயங்கும்—பொருந்தும். கார் அனையான்—மேகம் போல் தரம் பாராது உபகரிக்கும் பண்புடையவன். 7. மரண தசையில் நினைவற்றிருப்பது கூறப்படுகிறது. அல்லுறும்—துன்பப்படும். துப்புற—அறிந்து, முயன்று; நன்றாக. 8. புரந்து அளிப்பான் காத்து அருள்செய்வான். ஏற்று அகத்தே—நினைவில் கொண்டு. பரிவு—அன்பு.

ஆவி பிரிதருங் காலை யருள்கொண்டே
ஆவலில் நம்மை யவன்காப்பான்
ஆவலில் நம்மை யவன்காக்கும்—வகையோ
ஓவா துறைந்தே நமதருகே. 9

கண்ண புரத்துறை கண்ணா! முனம்நீயோ
மண்மகட் கோதிய வாசியிதே
மண்மகட் கோதிய வாசியிதை—வைகலும்
எண்ணினிற் கொண்டுநா மின்புறுவோம். 10

## 12. ராம சரம ச்லோகம்

மேவலன் தம்பி மேவின னென்றிதுவே
காவல! நெஞ்சங் கலங்குவை நீயந்தோ!
ஆவலில் வந்தா னரக்கனே யாயினும்
கூவியே நின்றான் குறித்தொரு நட்பொன்றே. 1

கள்ளமே காணுங் கருத்தின னென்றிதுவே
உள்ளமே கொள்வா யுரியது கேட்பாய்நீ
நள்ளல னேலும் நவின்றனன் நட்பொன்றே
எள்கலே காணே யிவனுழி நானன்பா! 2

---

9. நம்மிடம் உறைந்து நம்மைக் காப்பான்: "பார்த்திருந் தங்கு நமன்றமர் பற்றாது." 10. வாசி—அளவு; அன்பின் வகை.

*கடற் கரையில் விபீஷணன் ராமனைச் சரண மடைந்த போது, சுக்ரீவன் முதலான வானர வீரர்கள் அவனை ஏற்றுக் கொள்ளப் பெரிதும் அஞ்சினர். தன்னைச் சரணமாகப் பற்றியவர்களைக் காப்பது தனது குறிப்பென்றான், ராமன்; தன்னிடம் நட்பை வாயால் ஓதி வந்தால் போதும்; காப்பேன் என்றான். இப்பதிகம் ராமன் சுக்ரீவனுக்குக் கூறியதாக அமைந்தது. 1. மேவலன்—பகைவன். 2. கள்ளம்—வஞ்சகம். நள்ளலன்—பகைவன்.*

நம்முடை நட்பினை நைத்திடு வானென்றாய்
இம்மையு மின்றி யெழுமையுந் திண்ணெனவே
செம்முறும் நட்போ சிதறுமோ கூறுவைநீ
அம்மநீ யஞ்சே லவனை யழைப்பாயால். 3

வேவினை நாடியே மேவின னிவனென்றாய்
யாவனே யாகுக அஞ்சவோ நானிறையும்?
தேவரே யின்றியெத் தெய்வமே யாயிடினும்
யாவரு மென்றன் கணையினுக் காளாவர். 4

சிறுவிரல் தன் முனையால் தெவ்வினம் நான்வீய்ப்பன்
கருகிய வுள்ளமே காவல! கொள்ளேல்நீ
அருகினி லன்பன் தனையிங் கழைப்பாயால்
அருகுறை நால்வ ரவரொடும் மன்னவனே! 5

புறவுமுன் கொண்ட புரிவினை நீயாய்வாய்
சரணென வந்த சபரனைக் காத்ததது
பொருவில தாகும் புள்ளினும் நாமரிதாம்
அறிவினைக் கொண்டோ மறிவா யிதையன்பா! 6

---

3. *சுக்ரீவனது அச்சம்: தனக்கும் ராமனுக்குமுள்ள அன்பைக் குலைக்க விபீஷணன் போந்தான் என்பது. இந்த நட்பு நிலைநிற்கும் என்கிறான் ராமன். 4 வேவு காண வந்தான் என்று சுக்ரீவன் அஞ்ச, ராமன் சொல்லியது: நீ அஞ்சாதே; தேவர்களையும் அவர்களது தலைவர்களையும் நான் மாய்ப்பேன். கணை—அம்பு. 5. சிறுவிரல் நுனியாலேயே நான் பகைவரை மாய்ப்பேன்—என்கிறான், ராமன். "அங்குள்யக்ரேண" என்றார் வான்மீகி. 6. புறவு: ஒரு வேடன் குளிரால் நடுங்கி மரத்தடியில் தங்கினான். அம் மரத்தில் இருந்த புறா குளிர் காய அவனுக்காக நெருப்பை மூட்டியது. அவன் பசியால் வாடியது கண்டு, நெருப்பில் விழுந்து அவனுக்கு உணவாகியது. சபரன்—வேடன், பொரு—ஒப்பு.*

நண்பனென் றென்பால் நணுகி லெவனேலும்
கண்ணெனக் காப்பே னவனைக் கருத்துடனே
எண்ணலா வின்ன லெவரெவர் தம்மாலே
அண்ணலே! நேரி னவரெலாம் வீழ்ந்தொழிவர். 7

நுவலுவன் நண்பனே! நோன்பிது நான்கொண்டேன்
துவளுற வேண்டா சொல்லுவ நீகேட்பாய்
நிவர்பதின் நீண்முடி நேரல னேயெனினும்
அவனையு மேற்கு மவாவினன் நானறிவாய். 8

விரைவினி லன்பா! விபீடணன் தன்னையென் றன்
அருகினிற் சேர்ப்பா யவன்றனை யென்றனக்கோர்
அரிதா முயிரென் றனைப்பதுங் காண்பாயால்
அரியனென் தம்பியே யாவ னவன்றானே. 9

கடிகமழ் சோலைக் கணபுரக் கார்முகிலே!
கடற்கரை தன்னிற் காவலர் தம்மிடையே
திடமுற முன்நீ விரிவினிற் செப்பியவை
படியினி லெங்கும் பரவுமால் சீருடனே. 10

---

7. "உனக்கு நண்பன்" என்று சொல்லிக் கொண்டு எவன் வந்தாலும், அவனை நானேற்று, எல்லாத் துன்பங்களி லிருந்துங் காப்பேன் – என்றான் ராமன். "மித்ரபாவேந" என்ற ச்லோகம் இங்குக் குறிப்பு. "அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம" (வான்மீகம்) 8. நுவலுவன்—கூறுவன். நோன்பு—ஏற்றுக்கொண்ட உறுதி. நிவர்பதின் நீண்முடி—ஓங்குகின்ற பத்து முடிகளை யுடைய. நேரலன்—பகைவன். "யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்பது குறிப்பு. 9. அரியன்... ஆவன்—எனது தம்பி லக்ஷ்மணன்போல் எனக்கு உயிராவான். 10. கடி—பரிமளம். கார்முகிலே—மேகம்போல் தராதரம் பாராது அருள்புரியும் இயல்பினனே! காவலர்—சேனைத் தலைவர். படி—பூமி. சீருடன்—சிறப்புடனே.

## 13. க்ருஷ்ண சரம ச்லோகம்

மாற்றாரினம் வீய்க்குந்திறல் வரிவெஞ்சிலை கொண்டாய்
ஏற்பாயித முள்ளத்துற என்னாருயிர் நண்பா!
தோற்றுந்திறல் வீரர்தமைத் தோற்பிக்கிலை யென்னில்
தோற்றானிவ னென்னேயெனுஞ் சொல்லோங்குவ
தன்றோ? 1

நிற்காமொரு கன்மம்மென நெகிழ்வேயிறை யின்றி
உற்றாரென மூத்தோரென தாசானென நோக்கா
தெற்றேயிவண் நின்கார்முக மேந்திச்சமர் செய்வாய்
மற்றோரொரு கவலைதனை மனத்துக்கொள லாமோ? 2

நிலையாதொரு காயந்தனில் நேயந்தனைக் கொள்வாய்
நிலையேபெறு மான்மாவிது நிற்கா முயர் செல்வம்
குலையாதிது புனலாரெரி கொடுவாளினாற் கேதம்
உலைவேகொள வுனதாம்பணி யுணர்ந்தேசெயல்
புரிவாய். 3

என்நண்பனு மென்சுற்றமு மென்னாவியு மாவாய்
என்சொல்லிது கேட்பாயுனக் கிதமாமிது கண்டே
முன்சொல்லிய ஞானத்தொடு முகிழுஞ்செயல் பக்தி
அன்பாவிவை தம்மின்மிக வரிதாமிது கேட்பாய். 4

---

ஸ்ரீகீதையில் வரும் சரம ச்லோகத்தின் கருத்து இப்பதிகத்தில் உள்ளது. கர்மம், ஞானம், பக்தி இவற்றால் பெருமானைப் பெறுவது எளிதன்று என்று கலங்கிய அர்ஜுனனுக்கு இறுதி உபாயம் சரணாகதி என்று பெருமான் கூறினான். 1. மாற்றார்—பகைவர். போர் செய்யாவிடில், "இவன் தோற்றான்" என்று பகைவர் ஏசுவர் என்கிறான் கண்ணன். 2. அர்ஜுனன் கலங்கியதற்குக் காரணம்: உற்றார், பெரியோர், குரவர் இவர்களை எதிர்ப்பதே என்று. இவண்—இப்போது 3. உடல் அழியும்; அதற்கு நீ வருந்துகிறாய்; ஆன்மா அழியாது. கேதம்—துன்பம். உலைவுகொள—போமாறு. 4 முன்பு உபதேசித்தவை: கர்மம், ஞானம், பக்தி—இவற்றிலும் அரியது சரணாகதி. முகிழும்—அரும்பும், குவியும்.

எல்லாவகை நலனுந்தரு மெல்லாவகை யறனும்
நல்லாயிவை யுன்னாலிலை நான்செய்வன கண்டாய்
வல்லோயிது வலியேயுற மனத்திற்கொடு நின்னை
எல்லாம்வல னெனக்கேயென வின்பேகொடு சேர்ப்பாய். 5

நானோவுனக் காமோர்துணை நலனாயின செய்வேன்
நானேயுனக் கென்றுஞ்சயம் நாடும்வகை கொண்டேன்
ஆனாதொரு மாசாமெனக் கந்தோகுறை நேரின்
நானேயிது நாடாவகை நன்னர்மனங் கொண்டேன். 6

எனையேயுன தரிதாம்புக லென்றேமனங் கொள்வாய்
இனியேயொரு குறையேயிறை யேலாவணஞ் செய்வேன்
உனதாமொரு வாழ்வுக்குறு மின்பந்தனை யுன்னி
எனதாமரும் பேறேயென இதமாயின செய்வேன். 7

யாவைசில பாவச்செய லாலேவரு மின்றி
யாவைசில வோராவகை யாலாவன வெல்லாம்
மாய்வேயுறச் செய்வேனினி மகிழ்வேயுறக் காப்பேன்
நீயோவிறை யேனுந்துயர் நேராவணம் வாழ்வாய். 8

---

5. எல்லா வகை: நீ செய்வனவாகக் கருதுவ யாவும் நானே செய்விக்கின்றேன். வல்லோய்—சிறப்புடைய வீரனே! நின்னை......சேர்ப்பாய்—என்னைப் புகலாகப் பற்றுவாய. 6 ஆனாதொரு...நேரின்—நான் உன்னைக் காக்கவில்லையெனில், இது எனக்கு அழியாத மாசாகும். என் மாசை நானே கழித்துக் கொள்ள வேண்டுமன்றோ? ஆனாத—அழியாத. 7. இனி ஒரு குறை (சிறிதேனும்) ஏலாவணம் செய்வேன்—இவ்வாறு செய்வது எனக்கு அரிய பேறாகும். 8. கண்ணன் கூறியது: ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி. பாவங்கள் பேற்றுக்கு விரோதமாவன. யானவ சில....எல்லாம்—அறிந்து செய்த பாவங்கள்; போய பாவங்கள்; சில அறியாமற் செய்தன: ''புகுதருவான் நின்றனவும்'' மாய்வேயுற: மோக்ஷயிஷ்யாமி.

சோகந்தனைக் கொள்ளேலினிச் சோர்வோவுனக் கில்லை
யாகும்வகை யடல்கார்முக மங்கைத்தல மேந்தி
நாகத்தமர் நண்ணாரினம் நலிவேயுறச் செய்வேன்
மாகம்புக மாற்றல்வல மாவீரனே! இன்றே. 9

பாரோர்புகழ் புரமாங்கண புரத்தாய்முனம் நீயே
தேரூர்ந்தமர்க் களத்திலுன தன்பற்கெனச் செப்பும்
சீரார்நெறி சிந்தைக்கணி யாமேயெனு மன்பில்
ஏராருஞ் சந்தந்தனி லேற்பேயுற வுய்த்தேன். 10

## 14. த்வயம்

இன்பந் தழைக்கும் வைகுந்தத்
திமையோர்க் கிறையாய் வீற்றிருப்பாய்
அன்பே வடிவா மலர்மங்கை
தன்னோ டுயிர்கள் நீகாப்பாய்
செம்பொன் மதிள்சூழ் கண்ணபுரச்
செல்வா! உன் றன் திருவடியே
என்பற் றாகச் சென்னியிலே
யேற்பன் சூடும் மலரெனவே. 1

---

9. சோகம் கொள்ளேல்: மாசுச:. அடல் கார்முகம்—துன் புறுத்தும் வில், காண்டீபம். நாகம்—ஆனை, மாகம், ஆகாயம், ஆகாயத்திலுள்ள தேவர்கள். 10. இப்பெருமானே கண்ணனாய் சரம ச்லோகம் வெளியிட்டான். சீரார் நெறி—சரணாகதி ஒன்றே புகல் என்று பெருமானைப் பற்றுவது.

த்வயம்; இரண்டு வாக்கியங் கொண்ட மந்திரம். இது : பிராட்டியோடு கூடிய நாராயணனைச் சரணமாகப் பற்று கிறேன்; பிராட்டியோடுகூடிய நாராயணனை வணங்குகிறேன் பெருமானாலே நமக்குப் பேறு என்பன சரம ச்லோகங்கள்; பிராட்டியாலே பேறு என்பது த்வயம் திரு வெட்டெழுத்திற் குறித்துள்ள உபாயம், பலம்—இவை இரண்டையும் த்வயம் விவரமாகக் காட்டும். 1. பெரிய பிராட்டியோடு கூடிய பெருமான் நம்மைக் காப்பான்—என்பது.

நின்னைப் பிரியா மலர்மங்கை
நினையே வாழ்வுக் கேயாக்கி
நின்னை யணைந்து நீப்பின்றி
நேர நலன்கள் நல்குவளால்
நின்பா லுயிர்க ளினஞ்சேர்த்து
நெகிழ்வே யின்றி யுய்விப்பாள்
நின்பா லடியார் குறையெல்லாம்
நீக்கும் வகையி லோதுவளே. 2

அடியார் செய்யுந் தீவினைகள்
அன்பா! ஞாலத் தாலாமே
மிடியே விளைக்கும் மேதினியில்
வீணாம் நலமே யாய்தலிது
படர மணலார் சோறுதனை
ஆய்ந்து பார்ப்பா ரெவருண்டோ?
இடரா லிவரோ வுனைமறந்தார்
இனியுன் னருளால் திருந்துவர்காண் 3

நெறியிற் பிழன்ற மன்னுயிரை
நீச ரென்றே நினைக்காமல்
உரியே னுனக்கே யென்றடைந்தால்
காப்பது கண்டா யுன்கடனே.

---

2. பெரிய பிராட்டியாரின் இயல்பு; உயிர்களுக்கு அருள் புரிவது. இவள் ஸ்ரீ:; இதன் கருத்து: இவள் பெருமானைப் பிரியமாட்டாள். உயிர்களது குறைகளைப் பெருமானிடம் விண்ணப்பஞ் செய்வாள் 3. அடியார்களது குறைகள் தீர்ப்பதற்காக இவள் கூறுவது: இவர்களது தீமை உலக வாழ்க்கையால் விளைந்தது. இவரிடத்து நலம் எதிர்பார்ப்பது, மணலாலான சோற்றில் மணலை ஆய்ந்து அகற்றுவது போலாம். இவர்கள் உன்னை மறந்தது, தங்களது துன்பத்தாலேயாம் உன்னுடைய அருளால் இவர்கள் திருந்துவர். 3. நீ கருணை வாய்ந்தவனன்றோ? நெறி தவறி நடப்பவர்களை, உனக்கேயாகும்படி செய்வது, உனது கடமையாகும்.

மறைக ளுன்னைப் பலவாக
 மங்காக் கருணைக் கடலென்ப
குறையே காணா திவர்தம்மை
 யேற்றுக் கூவிப் பணிகொள்வாய். 4

அன்பர் தமக்கோ ரருள்செய்வா
 னபயக் கரத்தை யிவள்காட்டித்
தன்பொற் கழல்கள் புகலென்று
 தன்பாற் சேர்க்குந் தகையுடையாள்
தன்பா லன்பர் விண்ணப்பஞ்
 சாற்றுங் குறைகள் நீக்கவென
நின்பாற் கூறும் நேமத்தாள்
 நெடுமால்! உயிர்க்காப் புகலிவளே. 5

அன்ப ரிழைக்கு மபராத
 மறவே மறக்கு மருந்தகையாள்
அன்பர் புரியும் நலந்தானு
 மற்ப மெனினு மரிதாக
நின்முன் பரக்க நவிலுமிவள்
 நிலத்தா ருய்ய நும்முடைய
செம்பொற் பாத மிணையிதனைச்
 சிந்தை கொள்வர் முதுவோரே, 6

---

5. அடியாரைப் பெருமானிடம் சேர்க்க இவள் செய்வது. ஒரு கையால் அபயம் காட்டி, மற்றதால் தன்னுடைய திருவடிகளைப் பற்றக் குறிப்பது. அடியார் தன்னிடம் கூறுவதைப் பெருமானிடம் விண்ணப்பஞ் செய்வாள். நேமம்—மனவுறுதி. 6. மிகச் சிறந்த குணம்: அன்பரது அபராதத்தை ஒன்றாகக் கருதமாட்டாள். அவர் புரியும் நலம் அற்பமேயாயினும், அதைப் பெரிதாகப் பெருமானிடம் விவரிப்பாள். ஸ்ரீ என்பதன் கருத்துக்கள்: அடியாரைக் காப்பதற்கு இவள் பெருமானைப் பற்றுவாள், அடியாரால் பற்றப்படுவாள்; அவர்களது குறையைக் கேட்பாள், இதைப் பெருமானிடம் விண்ணப்பஞ் செய்வாள். செய்த நலன் அற்பமேயாயினும் பெரிதாக்கிப் பாராட்டிக் கூறுவாள்.

நின்பால் தேவி யடியார்பால்
நிகழச் சிதகொன் றுரைத்தாலும்
என்பாற் சாரு மன்பரெலா
மேத மெதுவுஞ் செயகில்லார்
அன்பே! காண்பா யதுதானும்
நலனே யாகு மென்பாய்நீ
நம்பீ! நும்முள் ளெவரோதான்
நலத்தால் மிக்கார் நவிலுவதோ? 7

நாரா யணனே! என்னிறைவா!
நாலா வகையாங் குணங்களிலே
சீரார் நீர்மை யெளிமையொடும்
ஞான சக்தி வாத்சல்யம்
ஆரா தடர்வ பெருமானே!
அன்பர்க் குயிரே நீயாவாய்
ஆரோ வுனைப்போ லுலகினிலே
அன்புக் கடலே யாவாரே? 8

மலர்மா தணையும் மணிமார்பா!
மன்னுயிர் காக்கு மருந்தகையே!
சலியா துன்றன் தாள்போற்றிச்
சாற்றி யுன்றன் நாமங்கள்

---

7. பெருமானிடம் அவனது பண்பை ஓதுவது; பிராட்டி தான் பெருமானிடம் சேர்த்த அன்பரிடம் பெருமான் எவ்வாறு அன்பு கொள்வான் என்று ஆராய்வதற்கு, அடியாரிடம் சில குறைகள் கூறுவாள். பெருமான் கூறுவது: என் அடியார் அது செய்யார்; செய்தால் நலமே யாகும். சிதகு—சிதைவு, கேடு. நும்முள்—உங்கள் இருவருள். 8. பெருமானிடம் பின்னும் கூறுவது: உனது பெருமைக்குக் காரணம்: நீர்மை—நம்மோடு நீரோடு நீர் சேருவதுபோல் கலப்பது; எளிதில் பெறப்படுவது. ஞானம், சக்தி, வாத்சல்யம் (பேரன்பு—தாய் அன்றீன்ற கன்றிடம் காட்டும் அன்புபோல். 9. முதல் வாக்கியத்தின் கருத்து.

உலவாப் பத்தி நித்தியரோ
　　டுரவோர் மூத்தோ ரின்புறுவர்
குலவி யுன்றன் குரைகழலிற்
　　கொள்வ னடியேன் பேரின்பம். 9

எம்மான்! நீயுந் திருமகளு
　　மென்பாற் கொண்ட பரிவாலும்
செம்மா பாதப் பற்பத்திற்
　　சென்னி சேர்த்து நுமக்காகுஞ்
செம்மைத் தொண்டில் நான்தோய்வன்
　　சிறிதும் பிறிதே கருதேனால்
நன்மை யிதுவே நான்கண்டேன்
　　நல்லா சிரியன் பேரருளால். 10

## 15. பெற்ற பேறு

கண்காள்! என்ன தவஞ்செய்தீர்?
கண்ணன் கண்ண புரத்தான்றன்
வண்ணமே மாந்தும் வளனுடையீர்
கண்காள்! என்ன தவஞ்செய்தீர்? 1

செவிகாள்! என்ன தவஞ்செய்தீர்?
புவியிற் கண்ண புரத்தான்றன்
அவிவில் குணங்கள் பலகேட்பீர்
செவிகாள்! என்ன தவஞ்செய்தீர்? 2

---

*சலியாது—தயங்காமல். உலவா—நீங்காத. உரவோர்—அறிவுடையோர். 10. இரண்டாவது வாக்கியத்தின் சாரம். செம் மா பாத பற்பத்தில்—சிவந்து, சிறந்து, தாமரை போன்ற திருவடிகளில். "உனக்கே நாமாட் செய்வோம்; மற்றை நங் காமங்கள் மாற்று."*

*1. வேதமயமான பெருமானின் திருவெட்டெழுத்தின் கருத்தை உணர்ந்த பிறகு நமது கரணங்கள் பெருமானுக்கே யாகும் என்பது கூறப்படுகிறது. வண்ணம்—திருமேனி நிறம். இவன் "ஸர்வாங்க ஸுந்தரன்." மாந்தும்- ஆர்வோடு அனுபவிக்கும்.*

நாவே! என்ன தவஞ்செய்தாய்?
தேவன் கண்ண புரத்தானை
ஓவா தேத்து முரனுடையை
நாவே! என்ன தவஞ்செய்தாய்! 3

தலையே! என்ன தவஞ்செய்தாய்?
நலனார் கண்ண புரத்தான்முன்
நிலனிற் றோயும் நெறியுடையை
தலையே! என்ன தவஞ்செய்தாய்? 4

நெஞ்சே! என்ன தவஞ்செய்தாய்?
மஞ்சார் கண்ண புரத்தானைத்
தஞ்ச மெனக்கொள் தகையுடையை
நெஞ்சே! என்ன தவஞ்செய்தாய்? 5

கால்காள்! என்ன தவஞ்செய்தீர்?
சீலன் கண்ண புரத்தான்தன்
கோலக் கோயில் வலஞ்செய்வீர்
கால்காள்! என்ன தவஞ்செய்தீர்? 6

கைகாள்! என்ன தவஞ்செய்தீர்?
ஐயன் கண்ண புரத்தான்முன்
மொய்யார் மலர்கள் தூவுவீரே
கைகாள்! என்ன தவஞ்செய்தீர்? 7

உயிரே! என்ன தவஞ்செய்தாய்?
நயனார் கண்ண புரத்தாற்கே
அயர்வி லடிமைகள் நீசெய்வாய்
உயிரே! என்ன தவஞ்செய்தாய்? 8

---

3 ஓவாது—இடைவிடாமல், உரன்—வலிமை. 4. நெறி—நியமம்; வணங்கியே யாக வேண்டும் என்பது. 5. மஞ்சு—மேகம். தஞ்சம்—புகல். 6. சீலன்—குணங்கள் வாய்ந்தவன்; சில குணமுடையவன். 7. ஐயன்—ஸ்வாமி; இறைவன் மொய் ஆர்—நெருங்கிய. 8. உயிர்—ஆன்மா. பெருமான் ஆன்மாவில் உறைந்திருப்பான். நயம்—நலம். அயர்வு இல்—தளராமல்.

மெய்யே! என்ன தவஞ்செய்தாய்?
மெய்யன் கண்ண புரத்திறைவன்
வைகு முறைவாய் மகிழுவைநீ
மெய்யே! என்ன தவஞ்செய்தாய்? 9

அடியீர்! என்ன தவஞ்செய்தீர்?
படிவீர் கண்ண புரத்தான்றன்
கடியார் கமலப் பதங்களிலே
அடியீர்! என்ன தவஞ்செய்தீர்? 10

---

9. மெய்—உடல்: "மார்வ மென்பதோர் கோயிலமைத்து, மாதவ னென்பதோர் தெய்வத்தை நாட்டி" (பெரியாழ்வார்.) உறைவு—திருக்கோயில். 10. கடி—பரிமளம்.

## 1. மங்கல தீப நிரை

வாழிய மாதவ! வாமனனே!
வாழிய நின்னெழில் நின்புகரும்
ஆழியங் கையனே! அச்சுதனே!
வாழிய ஊழிதொ றூழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 1

விரிகதிர் விண்ணினுக் காமிறைவா!
திரைகடல் சார்ந்தனை தேவியுடன்
அரிதரி தாமுன சோதியிதே
வரையிலா வூழிநீ வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 2

மின்னவிர் நீண்முடி மேலவனே!
பொன்னொளிர் பூந்துகில் வேய்ந்தவனே!
மென்தளி ராயொளிர் வாயினிடைப்
புன்னகை வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை 3

தாமரை போலொளிர் கண்ணிணையோ
மாமணிக் குண்டலக் காதுகட்குன்
காமரு சோதியைச் சொல்லுவதோ?
மாவுறை மார்பனே! வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 4

---

திருநாளுக்காகக் கூடிய பெண்பாலர் பெருமான் திருமுன்பு மங்கல தீபம் ஏந்துவதாகப் பாடுவது. 1. புகர்—திருமேனியின் ஒளி. 2. விண்—பரமபதம். திரைகடல்—திருப்பாற்கடல். 3. மின் அவிர்—ஒளிவீசுகிற. 4. காமரு—அழகிய, விரும்பத் தக்க. மா—பிராட்டி.

வரையென மாணுடை மார்பினிலே
மரைமகள் பொன்னென மன்னியிட
விரைகமழ் தண்டுள வத்தொடுநின்
நிரைமணி யாரமும் வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 5

மன்மகள் தானமா யேற்றவனே!
இன்னுமென் னேந்துவை கையினைநீ?
பொன்னென அன்பினைப் போற்றுவையோ?
மன்னனே! வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 6

ஒருமலர் பூத்ததொ ருந்தியிடை
அரையி லசைத்ததொ ராடையுற
வரியென மன்னிய கச்சொடுநின்
சுரிகையும் வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 7

மன்னவர் தாழ்ந்து வணங்குதலும்
பொன்முடி சிந்திய பன்மணியால்
மின்னிடுந் தாமரைத் தாளிணையாய்!
நின்னெழில் வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 8

விண்ணவர் நல்கிய பொன்மலரின்
கண்ணியோ டன்ப ரளித்தனவாம்
எண்மல ரேந்தி யிலங்கிடுமுன்
திண்கழல் வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 9

---

5. வரை—மலை. மரை மகள்—பெரிய பிராட்டியார். 6. மன்மகள்— பதுமினித் தாயார். பொன்னென. பொன்னெனப் போற்றும் அன்பே வேண்டுமென்று கரம் ஏந்துகிறாயோ? 7. கச்சு—ஆடையின் மேல் வளையப்படும் பட்டை. சுரிகை—உடைவாள். 9. பொன் மலர்—கற்பக மலர் எண்மலர்—எட்டு வகை மலர்கள். விண்ணவர்—நித்திய சூரிகள்.

மண்ணொடு வானு முனக்கெனவே
விண்மிசை மேவுமுன் நீண்முடியோ
பண்ணவர் வாழ்த்துமுன் பாதவிணை
கண்ணனே! வாழிய வாழியென
ஏந்துவம் மங்கல தீபநிரை. 10

## 2. கோலங்கள்

மின்னிடை மானொடு மேவியோ ராதரவில்
மன்னிடு மாதவன் சந்நிதியில்
பொன்னொளிர் மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
மென்னடை யீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 1

ஆயிரம் பேருடை யச்சுதன் வந்துறையும்
கோயிலின் வாயிலிற் கூடுவமே
வாய்தர மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
ஆயிழை யீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 2

அடியவர்க் கன்புடை மாதவன் தானுலவும்
கொடிமர மண்டபங் கூடுவமே
வடிவினில் மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
துடியிடை யீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 3

---

10. மண்ணோடு வானும் பெருமானு துடைமை. இதைக் காட்டுவது நீண்முடி. பண்ணவர்—முனிவர், தேவர்.

திருக்கோயிலில் எங்கும் கோல மிழைப்பதாகப் பெண்பால் பக்தர் தங்களுக்குள் கூறிக்கொள்வது. 1. மான்—பெரிய பிராட்டியார். சுண்ணம்—சூர்ணம், பொடி. மென்னடையீர்—அழகாக அன்னம்போல் நடப்பீர். 2. ஆயிழையீர்—சிறந்த ஆபரணகள் பூண்டவர்களே! 3. துடியிடையீர்—மெல்லிய இடை வாய்ந்தவர்களே. துடி—உடுக்கை.

கைத்தலச் சேவையில் கண்ணன் கவினுருவன்
அத்தன் நடைபயி லங்கணத்தில்
மொய்த்துநாம் மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
மைத்தொளிர் மென்குழலீ ரிழைப்போம்
பலபல கோலங்களே. 4

பூசனைக் காமொரு பொன்னொளிர் மண்டபத்தில்
தேசினில் சேர்பெரு மான்முன்னர் நாம்
ஆசையால் மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
ஆயிழை யீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 5

அன்பொளிர் மான்விழி யன்னையொ ரார்வினிலே
மன்னிடுஞ் சன்னிதி வாயிலிலே
மன்னிட மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
பொன்னனை யீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 6

வில்லி புதுவையில் வேயர் குலத்துதித்த
செல்வியின் சேர்வினிற் சீர்த்தொளிர
வில்லவிர் மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
மெல்லிய லீரிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 7

---

4. கவின்—பேரழகு. அங்கணம்—முற்றம். மைத்து—கறுத்து. 5. தேசு—ஒளி. ஆயிழையீர்—சிறந்த ஆபரணங்கள் பூண்டவர்களே! 6. அன்பொளிர்...அன்னை—அன்பேவடிவாய், மான்போல் இனிய நோக்குடைய கண்ணபுரத் தாயார். பொன்னனையீர்—பொன் போல் சிறந்தபெண்களே! பொன்—பெரிய பிராட்டியார். பொன்னனையீர்—பெரிய பிராட்டியார் போல் சிறந்த பெண்களே! 7. செல்வி—ஆண்டாள், சேர்வு—சந்நிதி. வில் அவிர் ஒளிவாய்ந்த. மெல்லியலீர்—பெண்டிர்களே! வேயர் குலம்—பெரியாழ்வார், ஆண்டாள் அவதரித்த குலம். பெருமானைப் பெறுவதற்காக முன் ஆண்டாள் சிறுமியருடன் கோலமிழைத்தாள்; இவள் உகக்கும் வண்ணம் கோல மிழைப்போம்.

தேவனின் சீர்நடை காணிய வீடணனோர்
ஆவலில் நின்றிடுஞ் சந்நிதியில்
வாய்தர மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
பாவையர்! நாமிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 8

பரிவில் பரமனுக் காமென ஓதனமே
அரிய தளித்தவன் சந்நிதியில்
விரிவுற மங்கலச் சுண்ணமிதால்—வாரீர்
அரிவையர்! நாமிழைப்போம்—வண்ணப்
பலபல கோலங்களே. 9

செந்தமிழ் பாடுவார் செல்வ ரொருபதின்மர்
வந்துறை மண்டபத் தின்முனர் நாம்
கொந்தலர் வண்ண மலர்கொண்டு—வாரீர்
மந்திர மோதியே நாமிழைப்போம்
பலபல கோலங்களே. 10

## 3. பொற் கும்பம்

பரவு முயிர்தமுட் பற்றுடன் தோயும்
பரமன் கணபுரக் கண்ணன் பரிவில்
அருகினில் தேவியர் நால்வ ரணைந்து
பரிதிப் பரப்பினி லூர்வான்முன்
பாவையரே! ஏந்துவிர் பொற்கும்பம். 1

---

8. பெருமானுடைய நடையழகைக் காணும் ஆசையில் விபீஷணன் இங்கு உறைகின்றான். அமாவாசை நடுப்பகலில் இந்த நடையழகைப் பெருமான் அருளுகிறான். 9. ஓதனம்—முனையதரையர் அளித்த பொங்கல். அரிவையீர்—பெண்களே! 10. செந்தமிழ்பாடுவார். ஆழ்வார்கள். கொந்தலர்—கொத்துக் கொத்தாக அலர்கின்ற.

1. வைகாசித் திருநாளில் பெருமான்முன் பொற் கும்பம் ஏந்துவது. முதல் நாள்—சூரியப் பிரபை வாகனம். பரிதி—சூரியன்.

மனுவின் குலஞ்சிறக்க வந்த பரமன்
கனியுங் கருணையன் காகுத்த னின்று
குனிவில் கரங்கொண்டு கோடாத வன்பன்
அனுமன் முதுகமர்ந் தூர்வான்முன்
ஆயிழையீர்! ஏந்துவீர் பொற்கும்பம். 2

வாடாத ஞானத்தால் வற்றாப்பே ரின்பத்தால்
ஈடோ டெடுப்பிலா வீசன் நமக்காகக்
தோடார் துளவத்தார் தோளி லசைந்துலவச்
சேடன் மடியமர்ந் தூர்வான்முன்
சேயிழையீர்! ஏந்துவீர் பொற்கும்பம். 3

பொருளோ பரமன் புகழெனப் போற்றுந்
தெருளர் மனந்தனிற் சேர்வெனச் சேரும்
புருடன் புவியோர் புரிவில் வணங்கக்
கருடன் மிசையமர்ந் தூர்வான்முன்
காரிகையீர்! ஏந்துவீர் பொற்கும்பம். 4

மின்னிடையார் தம்மை விளித்துக் குழலூதும்
பொன்னுருவன் முன்னுறையும் பூவையர் பத்திதனை
என்னிதுவென் றேநோக்கு மீசன் நமக்காகப்
புன்னை மரமமர்ந் தூர்வான்முன்
பூவையரே! ஏந்துவீர் பொற்கும்பம். 5

---

2. கோடாத—குறையாத. அன்பன் : அனுமான். இரண்டாவது நாள் ஊர்தி. மனுவின்....பரமன்—ராமன். 3. வாடாத ஞானம் : சங்கல்ப ஞானம், பெருமானது பெருமை: சங்கல்ப ஞானம், ஆனந்தம் இவற்றால். ஈடு—ஒப்பு. எடுப்பு—ஏற்றம் 4. தெருளர்—ஞானம் வாய்ந்தோர். புரிவு—அன்பு. 5. பெண்களின் பேர்களைச் சங்கேதத்தால் குழலிலமைத்து ஊதுவான் கண்ணன். "நாமஸமேதம் க்ருதஸங்கேதம் வாதயதே ம்ருது வேணும்" (கீத கோவிந்தம்): தன் முன் நிற்கும் பெண்களின் பக்தியைப் பாராட்டுவான் பூவையரே!—பெண்காள்! மின்னிடையார்— மின்போல் இடையுடைய பெண்கள். விளித்து—பேரைக் குழலோசையால் குறித்து அழைத்து. என்னிது என்று—வியப்புடனே.

வெஞ்சின வேந்தரினம் வீய்த்துத் திருவனைய
மஞ்சினி தோள்புணர்ந்த வெற்றி வளனுக்கா
மஞ்சடர் மாளிகைசேர் மாநகரி லூர்ந்தானால்
குஞ்சரத் தின்றேறி யூர்வான்முன்
கோல்வளையீர்! ஏந்துவிர் பொற்கும்பம். 6

திருநாள் வசந்தத்துத் தேவிமார் நால்வர்
அருகணையக் குங்குமப் பொற்சுண்ணம் பூசி
மருகனாங் கோலத்தில் வாசமுடி வேய்ந்து
தெருவினி லூர்வா னவன்முன்னர்
தேன்மொழியீர்! ஏந்துவிர் பொற்கும்பம். 7

விரையார் குழலி விறல்மன்னன் செல்வி
பெருகும் பிரேமத்தாள் தன்னொடுங் கூடி
அருகிலா வானந்தத் தாழ்ந்தே பவனி
பரிமாவின் மேலூர் பரமன்முன்
பான்மொழியீர்! ஏந்துவிர் பொற்கும்பம். 8

பாரோர் பவக்கடலைப் பாற்றப் பலகாலும்
சீரார் திருவடிவில் தோன்றிடுஞ் செங்கண்மால்
ஆரா வமுத னடியார் தொழுதேத்தத்
தேரூரும் பெம்மான் திருமுன்னர்
தெரிவையரே! ஏந்துவிர் பொற்கும்பம். 9

---

6. மஞ்சினி—பெண்; ருக்குமணிப் பிராட்டி. மஞ்சு—மேகம். மாநகர்—துவாரகை. குஞ்சரம்—யானை. 7. ஏழாந் திருநாள்—மாலை வசந்தோத்ஸவம்; சூர்ணாபிஷேகம். இரவு திருமணக் கோலத்தில் சவரிமுடி புனைந்து, பெரிய திருவாசிச் சப்பரத்தில் எழுந்தருள்வது. 8. எட்டாந் திருநாள் பதுமினித் தாயார் திருமணம். விறல் மன்னன்—உபரிசரவசு. பான் மொழியீர்—பால்போல் இனிக்குமாறு பேசவல்லீர். 9. திருத் தேர். பவம்—பிறப்பு. பாற்ற—வற்றச்செய்ய. ஆரா அமுதன்—அனுபவிக்க அனுபவிக்க பின்னும் அனுபவிக்க விரும்புமாறு திருவுருவம்வாய்ந்தவன். தெரிவையர்—பெண்கள்.

அன்ப ரளிக்கு மவபிரத மாடிப்பின்
வம்பார் வனமாலை மார்பி லசைந்தாட
இன்பப் பெருக்கினி லெங்கு மெழில்பரப்பிச்
செம்பொன் விமானத்தி லூர்வான்முன்
செல்வியரே! ஏந்துவீர் பொற்கும்பம். 10

## 4. மாசித் திருநாள்

கருதியுன் னன்பர்க் காகக் கணபுரம் வந்த கோவே!
அரியதா முன்றன் சோதி யணைந்துநின் தேவி தம்மை
விரிதரு மன்பே யாகும் விழியினாற் குளிர நோக்கி
உரியதோ ரூர்தி தன்னில் தோய்ந்துநீ பவனி யூர்வாய். 1

உனையரும் புகலாய் நாடி யுன்கழல் சென்னி தன்பால்
புனைதரும் பத்தர் வாழப் புரிவினிற் காப்பாய் துன்பக்
கனைகடற் காய்வா னாகிக் கார்முகங் கையி லேந்தி
அனுமனின் முதுகி லேறி யரியதோர் பவனி யூர்வாய். 2

கேடிலா விண்ணு மின்றிக் கீழடர் நிலங்க ளோடு
தேடரு முயிர்க ளெல்லாம் தேவனா முன்னை நாடச்
சேடியாய்ச் செங்கோ லோச்சிச் செம்மணிப் பணங்கள் வாய்ந்த
சேடனின் மடியில் தோய்ந்து செல்வநீ பவனி யூர்வாய். 3

இருடியர்க் கின்னல் செய்யு மேதலர் குலங்கள் வீய்த்தாய்!
அருடனை நின்பாற் கோரு மன்பர்தாம் வேட்ப நல்கும்
புருடனே! புவன மெல்லாம் புரிவினிற் காக்குந் தேவா!
கருடனின் முதுகி லேறிக் களித்துநீ பவனி யூர்வாய். 4

---

10. *அவபிரதம்: திருநாள் முடிந்ததும் திருமஞ்சனம்.*

*இப்பதிகம் பெருமானிடம் விண்ணப்பம் செய்யும் வகையிலுள்ளது 2. துன்பக் கனைகடல் காய்வான்—வற்றுவிக்க. கார்முகம்—வில். 3 கேடிலா விண்—வைகுந்தம். சேடி—சேஷி; தலைவன். 4. ஏதலர்—பகைவர். வேட்ப—விரும்புவன. அருள் தனை நின்பால் கோரும் அன்பர்—இருடியர்: கிருஷ்ணாரணியத்தில் தவஞ்செய்தவர்.*

பரிதியிற் சோதி பொங்கப் படர்ந்துறை பரமா! உன்றன்
அரியவாங் குணங்கள் பாடி யாடியுன் பாதந் தம்மை
மருவிவா ழன்பர் தங்கள் மனமெனும் மரைய லர்த்தப்
பரிதியா மூர்த்தி தன்னிற் படிந்துநீ பவனி யூர்வாய். 5

ஆனையின் கொம்பொ சித்து மல்லரி னடல்கு லைத்தாய்
ஆன்விடை யேழ டர்த்தன் றாயிழை யணைந்த பேறால்
ஆனதோர் வென்றி தோன்ற அன்பனே! இன்று நீயோ
ஆனையின் மீது றைந்தோ ராவலிற் பவனி யூர்வாய் 6

பாரடர் பாரந் தீர்ப்பான் பாண்டவர்க் காக முன்னம்
தேரினி லூர்ந்து தெவ்வப் படையெலாஞ் செற்ற தேவா!
பாரெலாம் பரனே! உன்றன் பரிவினுக் காக்கி யின்று
தேரினில் நீய மர்ந்து செல்வனே! பவனி யூர்வாய். 7

அரிவைய ரளைந்த வெண்ணெ யரிதென வுண்டு கானில்
பரிவினிற் கன்று மேய்த்துப் பாவையர் தம்மை யீட்டிக்
குரவையிற் களித்த கோவே! குவலயங் காப்பா னாகிப்
பரிமிசை யமர்ந்து மன்றிற் பரமனே! பவனி யூர்வாய். 8

கீழ்த்திசைக் கடலி லாழுங் கிரிதனக் கருளே செய்வான்
கேழ்த்தசீர்க் கருடன் மேலே கேசவா! பவனி யூர்வாய்
வாழ்த்திமா பரவை யுன்னை மலரடி தன்னி லோதம்
தாழ்த்திநித் திலங்க ளாலே தக்கதாம் பரிவி லேற்கும். 9

---

5. பரிதி—சூரியன். சூரிய மண்டலத்தில் பெருமாள் உறைந்துள்ளான். மருவி—அடைந்து, மனம் எனும் மரை அலர்த்த—மனமாகிய தாமரையை அலர்த்த. 6. ஆனை—குவலயாபீடம். ஆன் விடை—ரிஷபங்கள். ஆயிழை: நப்பின்னைப் பிராட்டி. 7. தெவ்வப் படை—பகைவர்களது சேனை. 8. அரிவையர்: ஆய்ச்சியர்: பரி—குதிரை 9. கிரி—கருட பர்வதம். இதனுக்குக் காட்சி யளிக்கப் பெருமான் கருட வாகனத்தில் எழுந்தருளுகிறான். மா பரவை—பெருங்கடல். ஓதம்—அலை. தாழ்த்தி நித்திலங்களாலே—முத்துக்களைச் சேர்த்து.

சப்தபுண் ணியமி தென்று தவத்தினர் தங்க ளுள்ளத்
துய்த்தசீர் வாயு மிந்தத் தலத்தினி லுறையுந் தேவா!
மைத்தொளிர் மேனி காட்டி மண்ணவர் வாழ்த்த வூர்வாய்
உத்பலா வதக மேறி யின்றுநீ பவனி யாக. 10

## 5. திருக்கைத்தலச் சேவை

கண்டல் மருங்கலரும் கண்ண புரக்கோமான்
கொண்டற் குலவண்ணன் கொள்ளுங் குதுகலத்தில்
தொண்டர் குலங்குலமாச் சூழத் திருநாளிற்
கண்டு நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 1

வானின் பரப்போடு மண்ணும் புரந்தளிக்கும்
கோனாம் மதுசூதன் கொள்ளும் வரையில்லா
ஆனந்த வாரிதியி லன்பர் தமக்காக
நானா நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 2

கறங்குந் திகிரியொடு கையில் வலம்புரியும்
பிறங்க மணிமேனி பெய்யும் புகரினிலே
வரங்கொள் முடியிலங்க வாம முகில்வண்ணன்
தரங்கொள் நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 3

---

10. *சப்த புண்ணியம்—ஏழு புண்ணியங்கள் வாய்ந்த தலம். தவத்தினர் உள்ளத் துய்த்த—தவத்தினர் சிறந்ததாகக் கருதிய. மைத்து—கறுத்து. உத்பலாவதகம்—வாகனத்தின் பெயர்.*

1. *திருநாளில் நாள்தோறும் வாகன மண்டபத்திற்குத் திருக்கைத்தலத்தில் பெருமான் எழுந்தருளும் சேவை. கண்டல்—தாழை, கொண்டல்—மேகம். அடியார்களைக் கண்டு பெருமான் குதூகலம் கொள்ளுகிறான். 2. அன்பரைக் கண்டு பெருமான் ஆனந்தங் கொள்ளுகிறான். வாரிதி—கடல். நானா—பலவகைப்பட்ட: முக்கியமாக, சிங்கம், ஆனை, புலி, ரிடபம் இவற்றின் நடை. 4. திருமேனியிற் காண்பன. கறங்கும்—சுழல்கின்ற; சக்கரம் வீசி எறிகின்ற நிலையில் உள்ளது.*

விழிக ளருள்பெய்ய மேனி வளனோடும்
பொழியப் பரிமளமும் முரற் பொலிவென்னே!
அழியா வளர்ஞானத் தன்பன் தமர்கட்கா
விழும நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 4

மல்லல் வனமாலை மார்வி லசைந்துலவ
வில்லா ரணிகலன்கள் மேனி நிலவிடையே
எல்லே பொழிந்தடர எந்தை மணிவண்ணன்
செல்வன் நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 5

பொன்னம் பலகையிலே பூசகர் கரம்பற்ற
மன்னி மகிழ்பொங்க வானின் வளன்மறந்து
துன்னும் பகவற்காத் தூய நகையிலங்க
நம்பன் நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 6

வேத மயமாகும் பொன்னார் விரிப்பேந்தித்
தாத ரொருநால்வர் பெமமான் தனைநோக்க
ஆதிப் பரம்பரனா யண்டக் குலங்கட்கு
நாதன் நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 7

அன்பர் மருங்கினிலே ஆலவட் டம்வீசி
இன்பச் சுழலினிலே எந்தா யெனநோக்கச்
செம்பொற் கரமேந்திச் சீமான் திருமார்வன்
தம்பி நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 8

---

4. திருக்கண்களின் அழகு, திருமேனி அழகு, பரிமளம், புன் முறுவல். 5. திருமேனியில் வனமாலை, திருவாபரணங்கள். மல்லல்—அழகிய, எல்—ஒளி. 6. பொற் பலகையில் பெருமான் எழுந்தருள, அர்ச்சகர் திருக்கை பற்றுவர். துன்னும்—அடர்ந்துள்ள. பகவர்—அடியார். 7. மேலே பட்டு விரிப்பை நான்கு அன்பர் ஏந்துகின்றனர்: இது வேதமயம்; கருட பகவானைக் குறிப்பது; கருடன் வேதமயன். ஆண்டாள் "விநதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ்வருவான்" என்றாள். 8. ஆலவட்டம்—விசிறி. செம்பொன் கரம் ஏந்தி: வலது திருக்கை ஆதாந ஹஸ்தம்; ஏற்கும் நிலையிலுள்ளது. ஏற்பது அடியார்களது அன்பு.

ஏமத் திருளிடையே ஏந்திழை முன்கண்ட
வாமத் திருவுருவ னென்றடியார் வாழ்த்தோதக்
காமன் தனைப்பயந்த கண்ணன் கணபுரக்கோன்
காமர் நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 9

தேனார் மலர்வந்த தெய்வத் திருமகளும்
வானார் போகமென மன்னுந் திருமார்வன்
ஆனாப் புகருருவ னன்பர் குலங்கண்டு
நானா நடைபயிலுங் கைத்தலச் சேவையிதே. 10

## 6. பொற்சுண்ணம்

மேவான் விகடாக்கன் வீய வளையேந்துந்
தேவன் கணபுரச் செல்வன் திருநாளில்
தேவர் திசைபாலர் தெய்வத் தலைவரொடு
மேவும் மறுகினிலே தூவுவமே பொற்சுண்ணம்
மெல்லியலீர்! பொற்சுண்ணம். 1

மகவான் துனியெல்லாம் வாட்டிக் குலைத்த
பகவான் கணபுரப் பாலன் திருநாளில்
பகவர் குலங்குலமாப் பாடி மகிழ்ந்தாடப்
புகரார் மறுகினிலே தூவுவமே பொற்சுண்ணம்
பூவையரே! பொற்சுண்ணம். 2

---

9. இவன் கண்ணபிரான் என்று அடியார் ஏத்துவர். ஏந்திழை : தேவகி. 10. தேனார் ... திருமகள் — பெரிய பிராட்டியார். ஆனாத—அழியாத.

திருநாளில் வீதிகளில் மங்கல கரமாகப் பொற்சுண்ணம் தூவுவோம் என்று பெண்பாற் பக்தர்கள் தம்முள் கூறிக் கொள்வது. பொற்சுண்ணம்—கந்தப்பொடி, சுண்ணம்—சூர்ணம். 1. மேவான்—பகைவன். வளை—சக்கரம்; மறுகு—வீதி; மெல்லியலீர்—பெண்காள். 2. மகவான்—இந்திரன். துனி—துன்பம்; பாலன்—காப்போன். பகவர்—அடியார். புகர்—ஒளி.

தண்டக மோனன் தவத்தினில் தன்முன்னே
கண்ட கணபுரக் கண்ணன் திருநாளில்
தொண்ட ரினமினமாத் தோத்திரம் தாம்பாடி
மண்டும் மறுகினில் தூவுவமே பொற்சுண்ணம்
மானினியீர்! பொற்சுண்ணம். 3

பொன்னின் வணமேனிப் புள்ளூரும் பொன்மலையாம்
நம்பன் கணபுர நம்பிக்கா முற்சவத்தில்
இன்பப் பெருவெள்ளத் தெங்கு மடியார்கள்
துன்னும் மறுகினில் தூவுவமே பொற்சுண்ணம்
தோழியரே! பொற்சுண்ணம். 4

பாலின் மொழியாள் பதுமினியைத் தானணைந்த
சீலன் கணபுரச் சீமான் திருநாளில்
மாலி லடியார்கள் மண்டி மகிழ்ந்தாடும்
கோல மறுகினில் தூவுவமே பொற்சுண்ணம்
கோல்வளையீர்! பொற்சுண்ணம். 5

விண்ணூர் மகிபற்கு மேலாம் மனுவோதும்
கண்ணன கணபுரக் காவலற்கா முற்சவத்தில்
எண்ணி லடியார்க ளெங்கு மிசைபாடித்
துன்னும் மறுகினில் தூவுவமே பொற்சுண்ணம்
தூமொழியிர்! பொற்சுண்ணம். 6

ஊனுலரும் மெய்ய ருளந்தனி லூறுமுயர்
தேனாங் கணபுரத் தேவன் திருநாளில்
நானா மறையோத நல்லடியா ரார்வமுடன்
தானூரும் வீதியிலே தூவுவமே பொற்சுண்ணம்
தாழ்குழலீர்! பொற்சுண்ணம். 7

---

3. மோனன்—முனிவன். 4. பொன்னின்...புள்—கருடன். 5. மாலில்—அன்பாலே. கோல—அழகான. 6. விண்ணூர் மகிபன்—உபரிசர வசு. மனு—மந்திரம், திருவெட்டெழுத்து. துடியிடையீர்—உடுக்கைப் போல் இடையுடையவர்களே! 7. ஊன் உலரும் மெய்யர்—தமது உடலைப் பேணாது பெருமானையே ஏத்துவதால் மாமிசம் வற்றி எலும்பு மயமாக இருப்பவர்.

சிந்து தனிலோங்கல் காணத்தன் சீர்காட்டும்
மைந்தன் கணபுர மாலோன் திருநாளில்
சந்தம் படர்காவில் தாதணையுந் தண்காலால்
கந்தங் கமழ்மறுகில் தூவுவமே பொற்சுண்ணம்
காரிகையீர்! பொற்சுண்ணம். 8

வங்கக் கடல்கடைந்து வானோர்க் கமுதீந்த
செங்கட் கணபுரச் செல்வன் திருநாளில்
பொங்கும் குதுகலத்திற் பூவையர் தாம்பாடி
எங்கு மடர்மறுகில் தூவுவமே பொற்சுண்ணம்
எந்திழையீர்! பொற்சுண்ணம். 9

வாட்டும் பவந்தீர வாலறிஞர் தம்மனத்திற்
கூட்டுங் கணபுரக் கோமான் திருநாளில்
நாட்டில் நலம்பொங்க நம்பி மகிழ்ந்தூர
நாட்டம் படர்மறுகில் தூவுவமே பொற்சுண்ணம்
நங்கைமீர்! பொற்சுண்ணம். 10

## 7. மலர்கொய்தல்

பண்டரவிற் பாலிற் படிந்து துயிலின்பங்
கண்ட பரமன் கணபுரத் தான்சூட
வண்டு படிந்து மதுவெள்ளம் பாயுஞ்சீர்த்
தண்டுளவங் கொய்வோமே வாரீர்
தருணியரே! கொய்வோமே வாரீர். 1

---

8. சிந்து—கடல். ஓங்கல்: சுருட பர்வதம், சந்தம்—அழகு. தாது—மலர். 9 பூவையர்—பெண்கள். 10 பவம்—பிறப்பு வாலறிஞர்—சிறந்த அறிவுடையோர். நாட்டம்—திருக்கண் நோக்கு.

1. பெருமானது திருவடிகளில் தூவ மலர்கொய்வோம் என்று பெண்கள் தமக்குள் கூவி யழைப்பது. பால்—திருப்பாற் கடல். தருணியரே—பெண்களே!

ஆமருவி மேய்த்த வமலன் திருமார்பன்
காமருசீர்க் கண்ணன் கணபுரத் தான்சூடத்
தேமருவு பொய்கையிலே செவ்வி வளங்கொண்ட
தாமரைப்பூ கொய்வோமே வாரீர்
தகையுடையீர்! கொய்வோமே வாரீர். 2

அங்கயற்க ணாய்ச்சிய ரோடிரவில் தான்கூடுஞ்
செங்கமலக் கண்ணன் கணபுரத் தான்சூட
எங்குமடர் வாவி யினமணிந்து தேசொளிருஞ்
செங்கழுநீர் கொய்வோமே வாரீர்
தெரிவையரே! கொய்வோமே வாரீர். 3

கோலச் சிலையேந்திக் கூடார் குலங்குலைத்த
காலன் கடியன் கணபுரத் தான்சூட
மாலை மலர்ந்தெங்கும் வாச வளம்பரப்பும்
நீல மலர்கொய்வோம் வாரீர்
நெறிகுழலீர்! கொய்வோமே வாரீர். 4

மல்லர் தமைமாய்த்து மாயன் றுணைவீய்த்த
வல்லவர் கண்ணன் கணபுரத் தான்சூட
மல்ல லிளங்கொடியில் வாய்ந்து மணம்பரப்பும்
மல்லிகைப்பூ கொய்வோமே வாரீர்
வனிதையரே! கொய்வோமே வாரீர். 5

அரியா மிரணிய னாகத்தைக் கீண்ட
அரியா மமலன் கணபுரத் தாற்கு
நிரையாப் பொழில்களிலே நீடுமணம் பாய்ச்சும்
இருவாட்சி கொய்வோமே வாரீர்
இளம்படியீர்! கொய்வோமே வாரீர். 6

---

2. தேமருவு—தெய்வத் தன்மை பொருந்திய. 3. தேசு—ஒளி. 4. கோலச்சிலை— அழகிய வில். கூடார்—பகைவர். கடியன்—கடினமான சித்த முடையவன். வாசம்—பரிமளம். 5. வல்லவர்—இடையர். கண்ணன்—முதல்வன். மல்லல்—அழகிய. 6. அரி—பகைவன். அமலன்—தூயவன்; நிரை—வரிசை. நீடு — நெடுந்தொலைவில். இளம்படியீர் — பெண்களே!

அரக்கர் விறலவிய வெஞ்சிலை யேந்துந்
திருக்கைத் திறலன் கணபுரத் தாற்கு
மருக்கமழ் சோலையில் மண்டிமணம் வீசுங்
குருக்கத்தி கொய்வோமே வாரீர்
குவிமுலையீர்! கொய்வோமே வாரீர். 7

உருமுகத் தைவர்க் கொருநெறி யோதிக்
குருமுகமாய்க் காத்த கணபுரத் தாற்கு
நறுமணம் பரவி நகரடர வீசும்
கரு முகைப்பூ கொய்வோமே வாரீர்
கருங்குழலீர்! கொய்வோமே. வாரீர். 8

நாத வடிவாய் நயங்கொ ளொருநாலாம்
வேதம் விரித்த கணபுரத் தான்சூட
மாதிரங்க ளெங்கும் மணம்பெய் தலர்கின்ற
பாதிரிப்பூ கொய்வோமே வாரீர்!
பணை முலையீர்! கொய்வோமே வாரீர். 9

அம்பக மூன்றுடையார்க் கன்றிரவைத் தான்தீர்த்த
செம்பவள வாயான் கணபுரத் தான்சூடப்
பம்பு கதிர்பரப்பிப் பாய மணம்பரப்புஞ்
செண்பகப்பூ கொய்வோமே வாரீர்
தெரிவையரே! கொய்வோமே வாரீர். 10

## 8. பொன்னூசல்

அன்பாம் பலகையிலே நாமுறைந் தாராத
இன்பமெனும் நாண்பற்றி யெங்கு மிசைபரவ
அன்பன் கணபுரத் தண்ணல் புகழோதிப்
பொன்னனைய பூவையரே! பொன்னூச லாடாமோ. 1

---

8. உருமுகம்— போர்க் களம். 9. மாதிரம்—திசை. 10. அம்பகம்—கண். இரவு—கபாலத்தில் பிச்சை எடுத்தல், பம்பு—பரவுகிற.

1. திருநாளில் கூடிய பெண்கள் பெருமானது புகழை ஓதிப் பொன்னூசல் ஆடுவது, நாண்—கயிறு.

யாவு மெவருந் தனக்காம் பொருளாகி
மூவர் முன்னவனாய் மூவாத தேவர்க்குந்
தேவாங் கணபுரச் செல்வன் குணம்பாடிப்
பூவலரும் மொய்குழலீர்! பொன்னூச லாடாமோ. 2

சுடர்க ளிரண்டாகிச் சோர்வில்லாக் காலப்
படர்வாய்ப் பரவு முயிர்கட் குயிராம்
நெடுமால் கணபுர நேசன்தாள் வாழ்த்திப்
புடைமுலையீர்! போதுமீரே பொன்னூச லாடமோ. 3

உலகைப் படைப்பவனை யுந்திமலர் தன்னில்
அலகிலா ஞானத் தயன்றனை யீன்ற
புலவன் கணபுரப் பூமானைப் பாடிப்
பொலனார் வடிவுடையீர்! பொன்னூச லாடாமோ. 4

கல்விச் சிலையாலே காதிசுதன் வேள்வியிலே
வல்லரக்கர் மாள்வித்து மைதிலியைத் தாரபுணர்ந்த
செல்வன் கணபுரச் சீலனைத் திறலைப்பாடிப்
புல்லக நன்னுதலீர்! பொன்னூச லாடாமோ. 5

எங்கும் பரவி யிருநிலத்து மன்னுயிருள்
தங்கித் தனக்கோர் சலிப்பின்றி யாளுஞ்சீர்
நங்கள் கணபுர நாதனை நலம்பாடிப்
பொங்குங் குறுநகையீர்! பொன்னூச லாடாமோ. 6

ஆன்விடை யேழுடர்த்து ஆயருக் காருயிராம்
மான்விழியாள் தோள்புணர்ந்த மாலோன் மணிமார்பன்
காணார் கணபுரக் கண்ணன் திறல்பாடிப்
பூணார் முலையீர்காள்! பொன்னூச லாடாமோ. 7

---

2. மூவாத—மூப்பில்லாத. 3. சுடர்கள்—சந்திர சூரியர். காலப் படர்வு: சிருஷ்டி முதல் கற்பம் வரையில். 4. புலவன்—தேவன், அறிஞன் பூமான்—பூமிக்கிறைவன். 5, காதிசுதன்—விசுவாமித்திர முனிவன். புல்லகம்—துதலணி. 6. உயிருள்—ஆத்மாவில். குறுநகை—முறுவல். 7. மான் விழியாள்—நப்பின்னைப் பிராட்டி. 8. விறல்—வல்லமை. பூண்—ஆபரணம்.

தெவ்வன் சிசுபாலன் தேசழியத் தேரூர்ந்து ணர்ந்த
கொவ்வைக் கனிவாய்க் கொடியிடையைத் தோள்பு
செவ்விக் கணபுரச் செல்வன் திறல்பாடி
நவ்வி நயனத்தீர்! பொன்னூச லாடாமோ. 8

முந்நீர் மறைத்த புவியை முன்னிடந்து
தன்கோட் டிடைச்சேர்த்த தாமத் துளவத்தான்
நங்கோன் கணபுர நம்பி நலன்பாடிப்
புன்முரற் பூவையரே! பொன்னூச லாடாமோ. 9

தேவிமா ரெண்ணிரண் டாயிரவர் சிந்தையிலே
மேவிக் களிக்கும் விறலரியை விண்ணணவும்
காவார் கணபுரக் கண்ணனை நாம்பாடிப்
பூவார் கருங்குழலீர்! பொன்னூச லாடாமோ. 10

## 9. உந்தி பறந்நல்

மீனாய்க் கடலில் மறைநான்கும் மீட்டானாய்த்
தானோர் பெருவடிவில் தாழாத் தலைந்தானைத்
தேனார் துளவத்தார்த் தேவன் கணபுரக்
கோனை நம்பாடி உந்தீபற!
கோ ருமுகிலைப் பாடிப்பற! 1

விண்ணோர்க் கமுதளிப்பான் வேலையில் வெற்பொன்றத்
திண்ணார் முதுகேற்ற தெய்வக் கமடத்தைப்
பண்ணார் மறைவல்லார் பாடுங் கணபுரக்
கண்ணன் தனைப்பாடி உந்தீபற!
காரார் திருவுருவைப் பாடிப்பற! 2

---

8. தெவ்வன்—பகைவன் நவ்வி—அழகு. 9. முந்நீர்—கடல். முரல்—முறுவல், 10. விறலரி—விஷ்ணு.

1. பெருமானின் மேனி அழகையும் குணங்களையும் பாடிப் பெண்கள் களித்து ஆடுதல். அவதாரங்களைப் பாடுகின்றனர். 2. வேலை—கடல். வெற்பு—மலை. கமடம்—ஆமை. கவின்—பேரழகு.

வாரி தனிலாழ்ந்த மண்மகளை மேலேற்றுச்
சீரார் மருப்பினிலே சேர்த்துகந்த கேழலைப்
பேரா யிரமுடைய பெம்மான் கணபுரச்
சீரான் தனைப்பாடி உந்தீபற!
    தேவர் தலைவனைப் பாடிப்பற! 3

ஏமப் பெயரா னிகலழியத் தம்பத்தில்
வாம நரசிங்க மாவுருவில் வந்தவனைக்
காமற் பயந்த பரனைக் கணபுரக்
கோமான் தனைப்பாடி உந்தீபற!
    கொந்தார் குழலாளைப் பாடிப்பற! 4

மாணிக் குறளாகி மண்ணிரந்து வானோங்கும்
மாணார் மணியுருவாய் மற்றெவர்க்கு மொப்பாகக்
காணாக் கருமணியாம் கண்ணன் கணபுரப்
பூணார மார்வனை உந்தீபற!
    பொன்னார் முடியானைப் பாடிப்பற! 5

மோனன் மகனாகி மூவெழுகால் மன்னரினம்
வானத் தடர வளங்குலைத்த வீரனைத்
தேனைக் கருப்பினைச் சீரார் கணபுரக்
கோனைப் புகழ்பாடி உந்தீபற!
    குன்றாப் புகர்தன்னைப் பாடிப்பற. 6

ஏறு ரரன்சிலையை யேந்தி முறிந்தாங்கே
வாரார் முலையாள் மணங்கவர்ந்த மாலோனாம்
காரார் வணமேனிக் கண்ணன் கணபுரச்
சீரான் திறன்பாடி உந்தீபற!
    செல்வன் திருநாமம் பாடிப்பற. 7

---

3. வாரி—கடல். மருப்பு—தந்தம். 4. ஏமப் பெயரான்—இரணியன். வாம—அழகிய. இகல்—பகை, வலிமை. 5. பூணார மார்பன்—ஆரம் பூண்ட திருமார்பு. 6. மோனன்—முனிவன்; ஜமதக்நி. மோனன் மகன்—பரசுராமன். வானம்—வீரச் சுவர்க்கம் குன்றா—குறையாத. 7. ஏறு—ரிஷபம். வாரார் சீதை. மாலோன்—பெரியோன்.

பாலின் வணங்கொண்டு பாடி தனில்வளர்ந்து
கோலக் குரிசிற்கு மூத்த குயவரியை
ஏலக் குழல்முடி யெந்தை கணபுர
மாலினைப் பாராட்டி உந்தீபற!
மன்னும் புகழ்தன்னைப் பாடிப்பற! 8

ஆயர்க் குயிரா யடவியி லானினங்கள்
வேயின் குழலூதி மேய்த்த விரிசுடரைக்
காயா வணனைக் கவினார் கணபுர
மேயானைப் பாராட்டி உந்தீபற!
மேனிப் புகழ்தன்னைப் பாடிப்பற! 9

கற்கியாய்க் காலக் கடுமை தனைக்காய்ந்த
பெற்றியை மேலோர் பரவும் பெருமானைக்
கற்றார் கருதி வணங்குங் கணபுர
முற்றானைப் பாராட்டி உந்தீபற!
மூவா முதல்வனைப் பாடிப்பற. 10

## 10. புகழிசைத்தல்

மான்விழி யீரின்று வந்துநங் கண்ணபுரக்
கோனுறை கோயிலிற் பாடுமினோ
தேன்மொழி வாயவன் சீருஞ் சிறப்புமெலாம்
மானவ ரீண்டு மகிழ்வுறவே. 1

பான்மொழி யீரின்று பாடிக் குலவுமினோ
பாவனன் பாற்கடல் நீத்துலகில்
தேமொழித் தேவகிக் காமருஞ் செல்வனென
மாணுரு காட்டி மகிழ்ந்ததுவே. 2

---

8. பாலின் வணங்கொண்டவன்: பலராமன். குயவரி—புலி. ஏலம்—பரிமளம், 9. அடவி—வனம் 10. பெற்றி—பெருமை யுடையவன்.

1. பெண்பாலர் ஒன்றுசேர்ந்து பெருமானது குணங் களைப் பாடுவது. கண்ணபிரானது சரிதையை இசைக் கின்றனர். மானவர்—மாந்தர். 2. பாவனன்—தூயோன். தேமொழி— இனிய பேச்சு.

மின்னிடை யீரின்று மேவி யிசைப்பீரே
பன்னல வல்லவர்க் காருயிராம்
முன்னவன் றன்னொடும் முற்றிலா வின்பத்தில்
பன்னரும் லீலைகள் செய்ததுமே. 3

வாச மலர்க்குழல் மங்கைமீர்! பாடுமினோ
மாய னளைவெண்ணெய் மாந்தியதும்
தேசிளங் கோவியர் சிந்தையி லேயுறவே
கூசறத் தீம்புகள் செய்ததுமே. 4

பணைமுலை யீரின்று வந்திவண் பாடுமினோ
இணைமரு திற்றிட மேவியதும்
பணிமிசைப் பல்நடம் பாடியே யாடியதும்
பணைத்த விளங்கனி வீய்த்ததுமே. 5

மானினி யீரின்று வந்திசை பாடுமினோ
தேன்மலர்த் தாரிவன் சூடியதும்
கூனியின் கூனொரு மூன்று நிமிர்த்ததுவும்
மானதோர் வில்லை முறித்ததுவும். 6

பாடக மெல்லடி யீரிவண் பாடுமினோ
தேடருந் தேவனாங் கண்ணனிவன்
நாடலன் மாமனை நாடி நலிந்ததுவும்
நாடியோர் தூது நடந்ததுமே. 7

புன்னகை யீரின்று போந்துநீர் பாடுமினோ
மன்னர்தம் மன்னனாம் மாலனிவன்
கொன்னவில் மால்விடை யேழு குலைத்ததுவும்
பின்னைதன் தோள்கள் புணர்ந்ததுமே. 8

---

3. வல்லவர்—இடையர். முன்னவன்—பலராமன். 4. கூசு—கூச்சம். 5. பணி—நாகம்; காளியன். 6. மானினியீர்—பெண்களே. தேன்மலர்த்தார்: மாலாகாரரிடம். மான—பெரிய. 7. பாடகம்—காலுக்கு ஆபரணம். நாடலன்—பகைவன். மாமன்-கஞ்சன். 8. கொன்னவில்—கொலை செய்தலே வாய்ந்த. மால்விடை—பெரிய ரிஷபங்கள், குலைத்தது. கொன்றது.

யாழினு மின்மொழி யாயிழை யீரின்று
கேழிலன் கேசவன் சந்நிதியில்
ஆழிசங் கேந்திய அன்பனே! அச்சுதனே!
வாழிய என்றுநீர் வாழ்த்துமினோ. 9

செம்பொன் வணநல்லீர்! சேர்ந்திவண் பாடுமினோ
அன்பா! அடியேற் காருயிரே!
இன்பப் பிழம்பே! எழிலார் கருமணியே!
நம்பனே! வாழ்கென வாழ்த்துவிரே. 10

## 11. அம்மானை

எத்தகை ஞானியரு மேத்தருங் கீர்த்தியினன்
அத்தனுங் கண்ணு ளடங்குவனால் அம்மானை!
அத்தனுங் கண்ணு ளடங்கவென முன்னமிவன்
சித்தங் கவர்ந்தனனாற் செங்கண்ணால் அம்மானை!
சித்தம் திருமகள்பால் தோற்றவன்காண் அம்மானை! 1

தன்வயிற்றுள் மூவுலகுந் தானொடுக்கும் நாரணனாம்
பொன்னுருவன் கண்ணுட் பொருந்துவனால் அம்மானை!
பொன்னுருவன் கண்ணுட் பொருந்துவதும் தன்னரிய
புன்முறுவல் காட்டிப் புகலென்றே அம்மானை!
பூமகளின் புன்முறுவல் மாந்துமிவன் அம்மானை! 2

---

9. கேழ்—ஒட்பு. 10. பிழம்பு—திரட்சி.

1. அம்மானை ஆடும் இரண்டு பெண்கள் பெருமானது பெருமை எளிமைகளைப் பாடுவது. முதல் இரண்டு அடிகள் ஒரு பெண் பாடுவது; பின் இரண்டு அடிகள் இரண்டாவது பெண் பாடுவது. ஐந்தாவது அடி, முதலாவது பெண் பேசியதை ஆதரித்துப் பாடுவது: எத்தகை... அத்தன்: பெருமை. கண்ணுள் அடங்குவன்: எளிமை. கண்ணுள் அடங்குவது செங்கண்ணால் சித்தம் கவர்ந்து. 2. கண்ணுள் பொருந்துவது புன்முறுவலால். புன்முறுவலின் தரத்தை இவன் அறிந்தவன்.

பேராமை யொன்றாய்ப் பெருங்கடலில் வெற்பேந்துந்
தாராளன் கண்ணுள்ளே சாருங்காண் அம்மானை!
தாராளன் கண்ணுள்ளே சார்வதுவும் உள்ளத்துப்
பேராமை நோக்காகக் கொண்டானால் அம்மானை!
பேராத பாசத்துப் பெம்மான்காண் அம்மானை! 3

பார்மகளைக் கோட்டில் பரிவுடனே வைத்துகந்த
சீருருவன் கண்ணில் திகழுங்காண் அம்மானை!
சீருருவன் கண்ணில் திகழ்வதுதான் நம்மைத்தன்
ஆருயிரா யாகத் தணைக்கக்காண் அம்மானை!
அலர்மகளை யாகத் தணைத்தானால் அம்மானை! 4

பொன்பெயரோன் முன்தோன்றிப் பொங்குஞ் சினங் கொண்ட
அன்புருவன் கண்ணு ளடங்குங்காண் அம்மானை!
அன்புருவன் கண்ணு ளடங்குவதும் நம்பாலே
முன்படர்ந்த மோகத்தின் மோழையினால் அம்மானை!
முன்னமர்ந்த பிள்ளையென முன்னுமிவன்அம்மானை!5

வாயுள்ளே வையமெலாங் காட்டும் மழவுருவன்
மாயோனுங் கண்ணுள் மடங்குங்காண் அம்மானை!
மாயோனுங் கண்ணுள் மடங்குவதும் நம்முள்ளந்
தோய்வானா யென்றென்றுஞ் சோர்வின்றி அம்மானை!
தோய்ந்ததோர் தோயந் துறந்தானால் அம்மானை. 6

---

3. தார்—வனமாலை. பேராமை—நீங்காமை, பாரத்தால் பேராமை என்பது குறிப்பு. 4 கோடு—கொம்பு. வராக மூர்த்தியாய். ஆகத்து அணைப்பதற்கு: இவன் அணைக்கும் சுவையை உணர்ந்தவன். அலர்மகள்—பெரிய பிராட்டியார். 5. பொன்பெயரோன் — இரணியன். மோகம் — பாசம். மோழை—பெருக்கு. முன்னமர்ந்த...—நம்மைப் பிரகலாதன் என நினைத்தான். முன்னினன்—நினைத்தான். 6. வையம்... காட்டும்—யசோதைப் பிராட்டிக்கு. மடங்கும்—அடங்கியிருப்பான். தோய்வதற்காக இவன் செய்தது: திருப்பாற் கடலைத் துறந்தான். தோயம்— நீர்; இங்குக் குறிப்பது கடல். “நாக-பர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்” என்பது ஒப்புநோக்கு.

மல்லடர்ந்த பொய்யறையில் மாலுருவில் தான்வளர்ந்த
தொல்லுருவன் கண்ணுள்ளே தோன்றுங்காண் அம்மானை!
தொல்லுருவன் கண்ணுள்ளே தோன்றுவதோ நம்மெய்யே
கல்லறையாய்க் காப்புக்காக் கண்டனனால் அம்மானை!
கள்ளரையும் மெய்யரையுங் காணுமிவன் அம்மானை! 7

வல்லவியர் பேரோதி வேயூதும் மன்மதனாஞ்
செல்வனுங் கண்ணுள்ளே சேர்வன்காண் அம்மானை!
செல்வனுங் கண்ணுள்ளே சேர்வதுவும் நம்பாலே
சொல்லரிதாய் மேலோங்கும் காமத்தால் அம்மானை!
துவள்வின்றி நம்பால் விழிப்பன்காண் அம்மானை! 8

மாமலையைக் கையேந்தி மாமழையை முன்தடுத்த
கோமானுங் கண்ணுட் குடிகொள்ளும் அம்மானை!
கோமானுங் கண்ணுட் குடிகொள்வான் நம்மைத்தன்
மேவரிய மாமணியாய்க் கண்டான்காண் அம்மானை!
மெய்த்தவத்தால் தேடரிய வித்தமிதோ? அம்மானை! 9

காமற்குங் காமனாங் கட்டழகன் கண்ணபுரக்
கோமானுங் கண்ணுட் குலவுவன்காண் அம்மானை!
கோமானுங் கண்ணுட் குலவுவதுதான் என்தோழி!
வாம வடிவில்முன் மண்கொண்டே அம்மானை!
வாமனிவன் பெண்கொள்ள வந்தானால் அம்மானை!10

---

7. பொய்யறை; துரியோதனன் கண்ணனைக் கொல்ல அமைத்தது. மெய்—உடல். கல்லறை—அச்சமின்றி வாழும் இடம்; கள்ளர்—கபட நெஞ்சினர். மெய்யர்—மெய்யான அன்பர். 8. காமம் எவ்வாறு அறியலாம்? நம்பால் விழிப்பான். வல்லவியர்—இடைச்சியர். 9. மேவரிய மாமணி—தன்னுடைய மார்பிலுள்ள கௌத்துவ மணி. மெய்த்தவத்தால்... —நம்மைக் காண்பதற்கு இவன் மெய்வருந்தித் தவஞ் செய்தானோ? நம்மைக் காண்பது தனக்குப் பேறே என்று நினைப்பான் வித்தம்—பாக்கியம், செல்வம். 10. மண் கொண்டதால் நம் மனத்தையும் கொண்டான். கையேந்தியிருப்பதைப் பார்த்தால் பதுமினித் தாயாரை நீரேற்றுக் கொண்டமை தோன்றும்.

## 12. அடியார் குழு

நாரா யணன்றன் நாமங்கள்
நாவின் நலனாய்ப் பாடுவீர்காள்!
பாரின் திலத மெனப்பெரியோர்
பாடிப் பரவும் பதியிதுவாம்
சீரார் கண்ண புரத்துறையும்
சீமான் தாள்கள் நாம்பரவி
ஆரா வமுதா யவன்நாமம்
பாடி யாடிக் களிப்போமே. 1

புனிதப் புனலிற் குடைந்தாடிப்
பூவுந் துளவுங் கரங்கொண்டே
இனிதா மிசையி லிவன்புகழ்கள்
இசைத்துக் கழலிற் சேர்விப்போம்
கனிவே படருங் கண்ணிணையுங்
கமல முகத்தின் பொலிவினிலே
புனையும் முறுவல் தனைமாந்திப்
புலவீர்! வந்து புகுவீரே. 2

நாலாங் கவிகள் வல்லவனாம்
நண்ணார் சீயம் பரகாலன்
மாலோ னெழிலில் தானாழ்ந்து
மாழ்கி வழங்குங் கவியமுதை
ஆலித் தார்விற் பாடுவமே
அன்பீர்! வாரீர் திரண்டிங்கே
கோல வடிவன் திருமுன்னர்
கூடிப் பாடிக் களிப்போமே. 3

---

1. திருநாளுக்காகத் திரண்டு வந்துள்ள தொண்டர்களை அழைத்துக் கூறுவது. பெருமானின் நாமங்கள் பாடுவோம். 2 பெருமானது திருக்கண்கள், திருமுகம், முறுவல் இவற்றைக் கண்டு இவன் புகழ்களைப் பாடுவோம். 3. திருமங்கையாழ்வார் பெருமானைப் பற்றிப் பாடிய பாடல்களை இசைப்போம். நண்ணார்—பகைவர். பரகாலன்— திருமங்கை யாழ்வார்.

மறையின் சுருக்காம் மந்திரத்தின்
　　வடிவாய் நிற்கும் மாலோன்றன்
னுறைவில் திரண்டு பெருமான்றன்
　　னுருவு மெழிலும் நாம்பருகி
உரியோ மடியோ முனக்கென்றே
　　ஓதி யோதிப் பணிவோமே
நெறியில் தோயும் நேமத்தால்
　　நெகிழாப் பத்தி நிறைவுற்றீர்! 4

தமிழ்வாய் மறையின் தரங்கண்டீர்!
　　தாதர் திரட்டிப் பரிவினிலே
அமிழ்தாம் மாறன் மறைப்பொருளை
　　யமுதின் தெளிவா விரிப்பீரே
குமிழு மன்பன் கொங்கர்கோன்
　　குலசே கரன்முன் தானளித்த
இமிழ்தா மமுதை யிசைப்பீரே
　　இன்பப் பெயலே இதுவன்றோ? 5

பண்ணி னின்பம் பயில்வீர்காள்!
　　பரவி மறுகில் நீர்குழுமிக்
கண்ணன் கண்ண புரத்தான்றன்
　　காதை பலவும் பாடுவிரே
எண்ணற் கரிதாம் பேரின்ப
　　மெங்கும் பெருக்கிப் படர்வீரே
மண்ணி லிதுபோல் மகிழ்வெங்கும்
　　வாய்ப்ப திலையாற் கண்டீரே. 6

---

4. மறையின்....மந்திரம்— திருவெட்டெழுத்து. உரியோம் ...என்றே; திருமந்திரத்தின் கருத்து. நெகிழா—குறையாத இதுவே. 5. அமிழ்து-அமுதம். தாதர்-அடியார். குமிழும்— ஊறிப் பெருகும். இமிழ்தாம்—ஒலியால் சிறந்த. பெயல்— பொழிவு. 6. குழுமி—கூடி. காதை—கதை, தோத்திரம். படர்வீர்—போவீர்; நடப்பீர். பயில்வீர்—ஒலிப்பீர், ஒலியுடன் பாடுவீர். மறுகு—வீதி.

மங்காப் பரிவில் மாவோர்க்கும்
பல்லாண் டிசைக்கும் மரைத்தாரான்
துங்கத் தமிழுஞ் சோலையிலே
துளவம் பயந்த குழற்கோதை
நங்கை நவின்ற தமிழமுதும்
நாவுக் கமுதா யிசைப்பீரே
எங்குந் திரளும் மெய்யடியீர்!
இவையே இணையில் லமுதாவ. 7

மகவற் கன்பன் மகிபதியின்
மனத்து ளமுதா யூறியவன்
மகளை யமுதா வுகந்தேற்ற
மாலோன் சரிதை யமுதாக
மிகுமோ ரன்பில் நீர்பாடி
மேவுந் தமர்கட் கோதுவீரே
பகவற் குயிராம் பத்தர்காள்!
பணிவே னும்மைத் தேவரென. 8

உறவு முயிரு முறவோரு
மொருவ னிறைவ னெனத்துணிந்த
உரவோ னிலங்கைச் செல்வற்கா
முயிரா யவற்கோர் நடைபயிலும்

---

7. மாலோன்—பெரியோன்; ஞானம் சக்தி இவற்றால். துங்க—தூய. துளவம் பயந்த...கோதை—துளவச் செடியின் கீழ் தோன்றிய ஆண்டாள். மரைத் தாரான்—தாமரை மாலை சூடியவன். "பைங்கமலத் தண்டெரியல் பட்டர் பிரான்" (ஆண்டாள்). 8. மகவன்—இந்திரன். மகிபதி—வேந்தன்; உபரிசரவசு. ஊறி, அவன் என்று பிரிக்க. மகள்—பதுமினித் தாயார். தமர்—அடியார், பகவற்கு உயிராம்—பகவானால் தனக்கு உயிரென்று பாராட்டப்படுவோர். பணிவேன்...—நீங்கள் தேவர்களே என்று வணங்குவேன். 9. உறவோர்—சுற்றத்தார். விபீஷணன் துணிந்தது; யாவும் பெருமானே என்று, நடைபயிலும்: அமாவாசை தோறும் தனது நடை யழகைக் காட்டும்.

திருவன் பரிவின் திறம்பாடித்
தெருவி லெங்குந் திளைப்போமே
தெருளாற் சிறந்த சான்றோரே!
தேவ ரடியேற் காவீரே. 9

பூசைக் குரியாற் கருள்செய்யப்
புனைந்தான் முன்னம் குழற்கற்றை
மாசே காணா முனையரையன்
மாண்பு காத்த மணியுருவை
பூசித் தென்றும் வாழ்வீர்காள்
பூசைக் குரியீர் நீராவீர்
வாசத் துளவத் தார்முடியான்
மாலோன் புகழ்க ளிசைப்பீரே. 10

---

தெருள்—சிறந்த அறிவு. அடியேற்கு தேவர் ஆவீர்—உம்மைத் தேவரென வணங்குவேன். 10. அர்ச்சகனைக் காப்பதற்காகத் தலையிலே குழற்கற்றையுடன் சேவை அருளினான் பெருமான். மாசே காணா முனையரையன்: குற்றமே இல்லாத இவன் சிறைப்படவே, பெருமான் மன்னனுடைய கனவில் தோன்றி இவனை விடுவித்தான். வாசம்—பரிமளம்.

அடியார் துதி

## 1. கருடன்

உனக்கே யாகுந் தொண்டி லூன்று மடியேனும்
உனக்கே யன்பி லுற்றார் மேன்மை யுணரேனாய்
எனக்கோ ரிழிவு கொண்டே னிழந்தேன் திறனெல்லாம்
தனக்கோ ரொப்பே காணாத் தலைவா! பெருமானே! 1

அன்னைக் கான வடிமைத் தளையைக் களைந்தேனாய்
என்னை மறந்தே னூறுமாந் தேயுன் நகரின்பால்
முன்னிப் பறந்தேன் மொய்ம்பை யிழந்தேன் சிறகின்றித்
துன்னுந் திரைவாய் கடலில் தோய்ந்து துவளுவனே. 2

உலகிற் கிறைவற் கூர்தி யென்றே யுலப்பில்லா
வலனே கொள்வேன் வல்லா னென்போ லெவனென்றே
சலமே கொண்டேன் தாதர் தம்மை யிகழ்ந்தேனாய்
நலிவே கொண்டேன் நழுவிற் றென்றன் நலனந்தோ! 3

---

திருக்கண்ணபுரத்துப் பெருமானது குணங்கள் சிலவற்றை இவனது அடியார் அனுபவித்த வகையில் கூறுவது இப்பகுதி யாகும். முதற் பதிகத்தின் கருத்து: பாகவதரிடம் காட்டும் அபசாரம் மிகக் கொடிது; இதைப் பெருமானும் பொறுக்க மாட்டான். தனது அகங்காரத்தால் கருடன் திருக்கண்ண புரத்தின் மேலே பறந்தபோது, அந்த நகரின் காப்பாளரை அவமதித்தான்; சிறகுகளை இழந்து கடலில் விழுந்து, பின்பு தவஞ் செய்தான்.

1. உனக்கே யன்பில் உற்றார்—உனது அடியார். இழிவு—தாழ்வு. 2. என்னை மறந்தேன்—எனக்கு ஸ்வரூபம் யாது என்பதை மறந்தேன். (நான் உனக்கும் உன் அடியார்க்கும் உரியேன் என்பதை மறந்தேன்). முன்னி—விரும்பி. மொய்ம்பு—பறக்கும் வலிமை. துன்னும்—அடர்ந்த. 3. உலப்பில்லா—குறையாத. வலன்—வலிமை. வல்லான்....என்றே—என்னைப் போல் வலிமை வாய்ந்தவன் எவன் என்று. சலம்—கபடம்.

உன்னோ டுடனே யிந்தா ளுறைந்து முளமிதுவோ
என்னே யிழிவு கொண்ட தெளியே னறியேனே
பன்ன வரிதா முன்றன் பாதம் பணிவேனும்
மன்னி மண்ணில் வாழ வலனோ பணியின்றி? 4

உன்ற னடியா ரென்றன் நிழலை யுலைத்தனரே
பின்ன முற்ற பறவை யானேன் பிணியுற்றேன்
என்னே யெந்நா னெளியே னேற்ப னுனதருகே
மன்னி யுன்முன் வாழும் வாழ்வே? பெருமானே! 5

விண்பால் விரியும் நலனோ மேவ லரிதென்றே
மண்பா லிகழ்வே கொண்டேன் மாலே! இழிவுற்றேன்
அண்ணா லுன்றன் தலமோ வன்ன தெனத்தேர்ந்தேன்
எண்ண லானே னுன்ற னடியா ரிமையோராய். 6

வேதக் கடலி னமுதாய் விளங்கும் பெருமானே!
போதக் கடல்நீ யுன்பாற் பொருவிற் புரிவாலே
கோதி லடியார் தாளிற் குனிந்து பணிவதுவே
நாதா வுனக்காம் விருப்பம் நன்னர் தெளிந்தேனே. 7

நலங்கொள் விண்ணில் நாளும் மகிழு மடியேனும்
விலங்கல் மீதே விழுந்து மெலிவே மிகக்கொண்டேன்
அலங்கல் துளப முடியோய்! அடியேன் நிலையிதனால்
கலங்கா வண்ணங் கருதிக் காப்பாய் கருமணியே! 8

---

4. உன் முன் என்று முறைந்தும் இந்த இழிவு நேர்ந்தது. உனக்குத் தொண்டு செய்யாமல் எவ்வாறு மண்ணில் வாழ்வேன்? 5. அடியார்—நகரக் காவலர். 6. கலங்கியதற்குக் காரணம்: வைகுந்தத்து வாழ்வை நினைத்து, மண்பால் இகழ்வு கொண்டேன். உன் தலம் வைகுந்தத்தை யொக்கும்; உன் அடியார் நித்திய சூரிகள் போல்வர். 7. உன்னுடைய அடியார்களது திருவடிகளில் அன்பர் பணி செய்வதே உனக்கு விருப்பம் என்பது தெளிந்தேன். 8. நலன் கொள் விண்—பரமபதம். விலங்கல்—மலை. கடலிலுள்ள ஒரு மலையில் அமர்ந்து கருடன் தவஞ் செய்தான், பெருமானைக் குறித்து. இது கருட பர்வதம் எனப் பெற்றது.

பொன்னா டதனை நீத்துப் போந்தாய் புரமிதனுள்
மன்னு முயிர்கள் வாழ வென்றே மணிவண்ணா!
என்னை யுனக்கா ளூர்தி யாக்கி யெனைநாளும்
மன்னி யுன்முன் னுன்னை வாழ்த்த வருளாயே. 9

அங்கே யொப்ப வடியே னுன்றன் னருகினிலே
இங்கே யுறைந்துன் னொளியார் மேனி யெழிலதனைப்
பங்கங் காணாப் பத்துடை யன்பர் தமைநோக்கும்
மங்காப் பேறே மாலே! அளிப்பாய் மகிழ்வுறவே! 10

## 2. இந்திரன்

பொன்முடி பூணுஞ் சிரத்திற் பொருந்தும்
துன்பமே யென்பர் துவளு மெளியேன்
இன்னலே தீர்த்தா யிறைவனே! எந்தாய்!
உன்னுடைச் சேர்விதோ உத்பலா வதகமே. 1

அசுரர் கணங்க ளமரர்க் குலைவே
நசையி லடர்ப்பன நம்பியே! என்பால்
கசிவுறும் பாங்கினில் காத்தனை பல்கால்
வசிசெய் யுனதுறை வுத்பலா வதகமே. 2

---

9. பொன்னாடு—வைகுந்தம். உன் முன் மன்னி வாழ்த்த அருள்வாய்: இப்போதும் கருட பகவான் பெருமானது திரு முன்னர் நிற்பது குறிப்பு. பங்கம்—குறைவு.

1. இப்பதிகத்தின் கருத்து: பெருமான் நம்மைக் காக்கும் இயல்பினன். இந்திரனது துன்பங்களை இவன் தீர்த்தான். ஆதலால் இந்திரன் பெருமான் விஷயமாக ஓதியது: உத்பலாவதகே திவ்யே விமாநே புஷ்கரேக்ஷணம், சௌரிராஜ மஹம் வந்தே ஸதா ஸர்வாங்க ஸுந்தரம். உத்பலாவதம். பெருமானது விமானத்தின் பெயர். 2. உலைவு—துன்பம்: நசை—விருப்பம். கசிவு—ஈரம், இளகிய மனம். வசி—இருப்பிடம்.

முனிவே வலனாம் முனிவன் மொழியால்
துனியே வளரத் துறந்தேன் மகிழ்வே
கனியுங் கருத்தினிற் காத்தனை கண்ணா!
இனிய நினதுறை வுத்பலா வதகமே. 3

பேயின் வடிவாற் பெரியதோர் தோடம்
சாயை யெனவெனைச் சார்தரும் போதோ
ஆய பரிவினி லன்பனே! காத்தாய்
மாயா! நினதுறை வுத்பலா வதகமே. 4

என்பதந் தோற்றோ ரிகழ்வினி லாழ்ந்து
துன்புறா வண்ணமென் தோற்ற மொளித்தேன்
நின்பதம் வாய்ந்ததோர் பத்தியால் நிமிர்ந்தேன்
அன்பனே! நின்னுறை வுத்பலா வதகமே. 5

அண்டுமோ ராபதங் கண்டோர் முளரியின்
தண்டினில் தோய்ந்தேன் தகைந்தேன் துனியெலாம்
அண்ட முதல்வனே! என்பா லருளினை
கொண்டனை தானமா யுத்பலா வதகமே. 6

என்மனை கண்ட விகழ்வெலாந் தீர்த்தனை
என்பதந் தன்னை யெனக்குமீட் டளித்தாய்
இன்பமே கொண்டே னினியோர் குறைவிலேன்
அன்ப! நின் னுறைவிட முத்பலா வதகமே. 7

---

3. முனிவு—கோபம். முனிவன்: துர்வாசன். துனி—துன்பம் மூவுலகங்களையும் ஆளும் செல்வம் இழந்தது. கனியும்—இரங்குகிற. 4. பிரம ஹத்தி என்ற தோஷம் பேயின் வடிவு கொண்டு இந்திரனைத் தொடர்ந்தது. சாயை—நிழல் 5. என் பதம்—எனது பதவி. இந்தப் பேய்க்கு அஞ்சி ஓடியதால் பதவி இழந்தேன். நின்பதம்—உனது திருவடி; திருவடியில். நிமிர்ந்தேன்—உயர்ந்தேன். 6. அண்டும்—சேர்ந்த. ஆபதம்—துன்பம். தான் பெற்ற துன்பத்தால் இந்திரன் இமய மலைக்கு ஓடி, அதனருகில் ஓர் ஏரியில் தாமரைத் தண்டில் ஒளிந்து கொண்டான்.

நின்திற லோர்ந்திலன் நீசனேன் நீக்குறாக்
கன்மழை யேவின னென்னைக் கடிந்திலை
என்மனச் சுடரே! எனக்காந் தலைவனே!
உன்னுடைத் தானமோ வுத்பலா வதகமே. 8

என்குடை நீழ லிலங்கு முலகெலாம்
வன்மமே வல்லவன் மாவலி கொள்ளவே
அன்பினால் யாவுமே மீட்டளித் தாயால்
நம்பனே! நின்னுறை வுத்பலா வதகமே. 9

என்று மொளிரு மேரா ருருவொடும்
பொன்னங் கழலும் பொலியுமுன் மூரலும்
அன்பனே! என்றுமே காண வருளுவை
மன்னனே! நின்னுறை வுத்பலா வதகமே. 10

## 3. விபீஷணன்

பிறந்தே னரக்கன் பிறவியே பேதைமை
துறந்தே னெனக்காந் துணைநீ என்றிதே
அறிந்தே னிதுவுன் னடியே நினைத்துச்
சிறந்தேன் திருமால்! நீயே சரணம். 1

---

8. உன்னுடைய திறமையை அறியாமல் கல் மழை பெய்வித்தேன்; நீ என்னிடங் கோபங் கொள்ள வில்லை. 9. என்பொருட்டாக மாவலியிடஞ் சென்று என்னுடைய மூவுலகங்களையும் மீட்டு அளித்தாய். 10. ஒளிரும்—விளங்குகின்ற. ஏர் ஆர் உருவம்—திருமேனி யழகு.

1. விபீஷணன் இப்பெருமானது நடையழகு காண ஆசைப்பட்டான்; இதைக் காணப் பெறுகிறான். இப்பதிகத்தின் கருத்து: பெருமான் "தனது அன்பர்க்கு அன்பன்" என்பது. விபீஷணன் ராமனிடம் விண்ணப்பஞ் செய்வது போல இப்பதிகம் அமைந்துள்ளது. இவன் கூறுவது: பிறந்தது அரக்கர் குலம், உன்னருளால் பேதைமை போயிற்று. எனக்கு நீயே துணை.

நீசன் பிறந்த வயிற்றில் நெகிழ்விலா
ஏசுக் கெனவே யெளியேன் பிறந்தேன்
ஆசெலாம் போற்று மரும்புக ழாழியே!
நேசனாய் நின்னை யடைந்தேன் சரணம். 2

அறனே யறியா தவருட னென்றும்
உறவெதுங் கொள்ளே னுணர்ந்தே னுனதாம்
உறவே எனக்கா முறுதுணை நீயே
இறைவா! நினையே யேற்றேன் சரணம். 3

ஒல்லடர் வெய்யோன் குலத்தி லுதித்தாய்
எல்திரி வோர்குலத் துற்றே னெளியேன்
செல்வனே! என்னையுன் செல்வனாந் தம்பியாய்
நல்லாய்! நவின்றனை நீயே சரணம். 4

சுற்றமுந் தாரமுஞ் சூழ்தரு நட்பும்
பற்றெனக் கொள்ளேன் பரம! நினையே
பற்றிய வென்னையுன் னாவியாய்ப் பற்றினை
பெற்றே னுனதருள் பெம்மான்! சரணம். 5

அன்பே வடிவா மருப்பெறால்! என்றுந்
துன்பே முயன்றிடுந் துட்டர் குலத்தின
னென்னை யுனதா மிணையிலாக் கருணைக்
குன்னியே யேற்றனை நீயே சரணம். 6

---

2. ஏசு—இகழ்ச்சி, குற்றம். ஆசு—திசை. 3. நீயே உறவெனக் கொண்டேன்....துணைவனும் நீயே. 4. ஒல்—ஒளி. ஒல்...உதித்தாய்—சூரிய குலத்தில் உதித்தாய். எல்திரிவோர்—இரவில் திரியும் அரக்கர். என்னை... நவின்றனை—என்னை உன் தம்பியே என்றாய், 5. தாரம்—மனைவி. நட்பு—நண்பர். ஆவி—உயிர். பெருமானது திரு நாமங்களுள் ஒன்று; பத்தராவி. என்னுடைய சுற்றத்தார், மனைவி எல்லாமும் நீயே என்று பற்றிய என்னை உன் ஆவியாய்ப் பற்றினை. 6. இழிந்த குலத்தில் பிறந்த என்னை, உனது கருணைக்கு இலக்காக்கி ஏற்றாய்.

காவிரி நடுவிற் கவைநா வணையில்
தேவநீ தென்திசை நோக்கித் துயில்வாய்
ஆவலி லுன்றன் சயனத் தழகினை
மேவலிற் கண்டே விரும்பினன் சரணம். 7

நின்னடைச் செவ்வியே நேர்ந்திடிற் காணவே
என்மன முன்னிட வென்னை யுகந்துன்
முன்னரே கொண்டாய் முகுந்தா! கணபுர
மன்னனே! மாதவ! நீயே சரணம். 8

நாலா வகையாம் நடையே பயின்றுன்
கோல வடிவிற் குழகியென் முன்னரே
சீலனே! தோன்றித் திருவருள் செய்வாய்
வாலவிர் மாண்பனே! நீயே சரணம். 9

முன்னழ கின்மிக மோகந் தருவதுன்
பின்னழ கென்னே! பெருமநின் னன்பால்
என்குலம் பெற்ற தெழுமையும் சீரே
என்னுயிர்ச் செல்வனே! நீயே சரணம். 10

## 4. தவத்தினர்

நைமிசந் தன்னில் தவஞ்செயும் நாங்கள்
மைவணன் மாலோன் மந்திர சித்தி
கைபுகுந் தலமெனக் கண்டது பாரில்
செய்யணை புரமாம் சப்தபுண் ணியமே. 1

---

7. திருவரங்கத்தில் உன் கிடையழகு கண்டேன். 8. உன்னுடைய நடையழகு காண விரும்பினேன்; அதை அருளினாய். 9. நாலு வகையான நடையைக் காட்டுவாய் நீ. 10. உன்னுடைய பின்னழகு, முன்னழகை விடச் சிறந்தது.

1. இத்தலம் சப்த புண்ணியத் தலம்; தவத்திற்கேற்றதாக நைமிசாரணியத்து முனிவர் கருதினர். இப்புண்ணியங்கள்: க்ருஷ்ண க்ஷேத்ரம், க்ருஷ்ணாரண்யம், க்ருஷ்ண புரம், உத்பலாவதக விமானம், நித்ய புஷ்கரிணி, காவிரி, கிழக்குக் கடல்.

சத்திர வேள்வியில் சாத்திரம் வல்ல
வித்தக ராய்ந்தனர் வேள்வியாற் கோருஞ்
சித்தியே நல்குஞ் சிறந்ததோர் பதியே
சத்துவர் சார்தருஞ் சப்தபுண் ணியமே. 2

தக்கணந் தன்னில் திகழுமோர் கானிற்
புக்க புகரால் பொலிவுறுஞ் சீரால்
தக்க தவத்தினர் சார்ந்தார் தவஞ்செய
மிக்க புகழுடைச் சப்தபுண் ணியமே. 3

ஊறு விளைத்தவ ரோடி மடியவே
வீறு மிளிர்வளை வீசிய மாதவன்
நாறு துளவத் தெரியலன் நாடாம்
தேறிற் சிறப்புடைச் சப்தபுண் ணியமே. 4

மேவான் விகட விழியனை வீய்த்த
தேவன் சிலைகைக் கொண்டு திரிந்தோர்
ஆர்வினில் காத்தா னடியரை யத்தலம்
ஆவத் தனமதமாம் சப்தபுண் ணியமே. 5

மறையின் முடிவதாம் மந்திர மேனியன்
இறைவ னமையோர் முதல்வன் தனதெழில்
விரிய விளங்கிடும் மேலாம் பதியிதோ
விரைமலி சோலைசூழ் சப்தபுண் ணியமே. 6

மந்திர சித்தி வளம்பெறு தற்கோ
தந்திரம் வேண்டா தவறா திதனைச்
சிந்தனை செய்வார் சீர்பெறுஞ் சேர்வோ
இந்திர னேத்திய சப்தபுண் ணியமே. 7

---

2. வித்தகர்—அறிஞர். 3. தக்கணம்—தெற்கு. தெற்கில் ஒரு தலத்தில் புகர் மண்டியது; அது உத்பலாவதகம். 4. ஊறு—துன்பம் : ஊறு செய்தவர் அசுரர்கள்; இவர்கள் விலங்குகளின் வடிவில் முனிவர்களைக் கொன்று தின்றனர். வளை—சக்கரம். 5. மேவான்—பகைவன். விகட நயனன்—விகடாக்ஷன் என்ற அசுரர் தலைவன். 7. மந்திரசித்தி; திருமந்திரம் சித்திபெற இத்தலத்தில் சிந்தனை செய்தலே போதும்.

ஓங்கா ரந்தனுள் ளூறும் பொருளாய்
ஓங்கும் முடியு முதரமும் பாதமும்
பாங்குறக் காட்டும் பரம னுறைவிடம்
கோங்கலர் சோலைசூழ் சப்தபுண் ணியமே. 8

கலைவலர் காட்டிய மந்திரச் சாரமாய்
உலர்தரு மூனின ரோர்ந்து புகழ்ந்திட
நிலவு புகரின் நெடுமா லுறைவே
நலனார் நகரதாம் சப்தபுண் ணியமே. 9

பவத்திரள் பாற்றிப் படியினர் தம்மைத்
திவத்தினிற் சேர்க்குந் திருமால் தேவன்
துவட்டித் துனியெலாந் வீய்த்திடுந் தூயோன்
உவப்பதா முறைவதோ சப்தபுண் ணியமே. 10

## 5. தண்டக முனிவன்

தண்டக வனத்தில் தவந்தனி லுற்றேன்
தமியனே னுன்னடி காண
அண்டினை யென்பா லாழிசங் கேந்தி
யரியதோர் புன்னகை பூத்து
தொண்டனே னானே னுன்கழற் கின்றுன்
தோய்வினில் நின்னொளி கண்டேன்
கண்டவ ருள்ளங் கவர்தருங் காளாய்!
கண்ண புரத்துறை மாலே!

---

8. ஓங்காரம் குறிப்பது: காப்பவன், காரணம், உபாயம். இவற்றைக் காட்டுவன முடி, வயிறு, திருவடிகள். 9. மந்திர சாரம்: பெருமானுக்கு அன்பு செய்பவர், அவனையே நினைந்திருப்பர். இவ்வாறு இருப்பவர் உத்பலர். உலர் தரும் ஊனினர் —உலர்ந்த மாமிசம் கொண்ட உடலுடையவர். என்பெழும் யாக்கையர் 10. பவம்—பிறப்பு. படி—பூமி. துவட்டி—குலைத்து.

1. தண்டக முனிவன் தவஞ் செய்த போது பெருமான் தனது திருமேனியை அவனுக்குக் காட்டினான். இந்த மேனியை அனுபவித்து இன்றும் திருக்கோயிலில் பெருமான் திருமுன்பே இம்முனிவன் வணங்கி நிற்கின்றான். தோய்வு—உறைவு, கோயில். பெருமான்: மெய்யர்க்கு மெய்யன்.

காணதில் நின்றேன் கடுந்தவ முன்னிக்
காணிய நின்மலர்த் தாள்கள்
ஆனதோ ரன்பி லென்முனம் நின்றாய்
அன்பொளிர் விழியிணை காட்டி
நானுனக் கானேன் நாளுமுன் றுறைவில்
நாடியே நின்னொளி கண்டேன்
கானமாஞ் சாமம் வல்லவர் வாழ்த்துங்
கண்ண புரத்துறை மாலே! 2

கருமுகி லொன்று காஞ்சனந் தாங்கிக்
கவினெழ நிற்பதே யொப்ப
வரைநிகர் மார்பில் மலர்மகள் தோய
மன்னினை யென்முன ரன்பா!
விரிகதிர் வேய்ந்த நின்னுடை யுறைவில்
மேவிநின் றிவ்வெழில் கண்டேன்
கருவுடைச் செந்நெல் மலிதரும் வயல்சூழ்
கண்ண புரத்துறை மாலே 3

விரைமலர் மங்கை விழியினால் விரியும்
மேதகு மார்பினில் மறுவும்
குரவமே கமழுங் குல்லையின் தாருங்
குலவிடு மாரமுங் கண்டேன்
விரிதருங் கதிரில் விளங்கிடு முன்றன்
மேனியே யிவ்விடங் கண்டேன்
கரியினைக் காத்த கருணையங் கடலே!
கண்ண புரத்துறை மாலே! 4

---

2. என்முன் திருக்கண் எழிலைக் காட்டி நின்றாய். உன்னை நாடி நான் இங்கு உன் ஒளியைக் கண்டேன். சாமம்—சாமவேதம். 3. நான் கண்ட வகை: மேகம் ஒன்று பொன் பூண்டு நிற்பது போல். காஞ்சனம்—பொன்; இங்கு பெரிய பிராட்டியார். வரை—மலை. கருவுடைச் செந்நெல்— முற்றிய செந்நெல் 4. விரைமலர் மங்கை—பெரிய பிராட்டியார். நான் மேனியில் கண்டவை: மறு, திருத்துழாய் மாலை, ஆரங்கள். குரவம்—பரிமளம். குல்லை—திருத்துழாய்.

கருமுகி லொன்று கஞ்சமே பூத்துக்
காஞ்சனம் பூண்டதே யொப்பக்
கரியநின் மேனி கண்ணிணை கைகால்
கனியனை வாயிவை கண்டேன்
அரிதொரு பேறா அன்ப! நின் னுறைவில்
அடருநின் செவ்வியே கண்டேன்
கருதினே னுன்னை யெனக்குயி ராகக்
கண்ண புரத்துறை மாலே! 5

மணியினந் திரட்டி மலையினின் றிழியும்
வாரியி னருவியே யென்ன
அணிவளர் மார்பில் நித்திலத் தாரம்
அரும்புகர் பாய்ச்சிடக் கண்டேன்
மணியிதாங் கௌத்துவச் சோதியி லிங்கே
மயங்கிநான் நின்றுள னெந்தாய்!
கணைமுனந் துரந்து சாலமேழ் சாய்த்த
கண்ண புரத்துறை மாலே! 6

தளிரென மிளிருஞ் செவியினில் தாழுங்
குண்டல மசைந்தசைந் தாட
ஒளியிடை மின்னுங் கண்டிகை யோடு
முரந்தனில் மறுவிது கண்டேன்
அளிமய மாகி யமர்தரு முன்றன்
னருகினில் நின்றிடும் பேறே
களிமிகக் கொண்டேன் கடிவளர் சோலைக்
கண்ண புரத்துறை மாலே! 7

---

5. மேகத்தில் தாமரை பூத்ததுபோல் எழில். கஞ்சம்—தாமரை. மேனி, கண், கை கால், வாய்—யாவும் தாமரை போல்வன காஞ்சனம்—பொன்; திருமார்பில் பிராட்டி. 6. வாரி—நீர். நித்திலம்—முத்து. முத்தாரங்கள் மலையருவி போல் விளங்குகின்றன. கௌத்துவம்—பெருமான் திருமார்பின் மணி. கணை—அம்பு. சாலம்—சால மரங்கள் (ராமாவதாரத்தில்). 7. மிளிரும்— விளங்குகிற. கண்டிகை— கழுத்துக்கு ஆபரணம். அளி—கருணை, அருள்.

மைவரை யொன்று வனைந்தடர் செக்கர்
மாணுற நிற்பதே யெனநின்
மெய்வள ரொளியில் வேய்ந்தபொற் பட்டின்
சோதியே பாய்தரக் கண்டேன்
ஐயறி வோடென் னுள்ளமுங் களித்தேன்
அடியனே னிங்கிவை கண்டேன்
கைதைசேர் வேலிக் காவலை செய்யுங்
கண்ண புரத்துறை மாலே! 8

நூற்றிதழ் மலரில் நுவலருஞ் செவ்வி
மரையிணை தோய்ந்ததோ வென்னுந்
தோற்றமே கண்டேன் சோதியா முன்றன்
தூயதொன் மேனியுங் கண்டேன்
ஏற்றதோ ரின்ப மிங்குறக் கண்டேன்
எந்தையே! நின்னரு ளாலே
காற்றொடு காய்ந்த கடுமழை வீய்த்த
கண்ண புரத்துறை மாலே! 9

அலகிலாச் சோதி யடர்தரத் தோன்றி
யங்கையா லபயமே காட்டி
நிலவிடு நேமி சங்கமு மேந்தி
நீண்முடிச் செவ்வியி னோடும்
குலவுமோ ரன்பாம் விழியிணை மலரக்
குழகனே! என்முனம் நின்றாய்
கலைவலர் போற்றுங் கண்ணனே! கண்டேன்
கண்ண புரத்தினில் மாலே! 10

---

8. மைவரை—கறுத்த மலை. செக்கர்—செவ்வானம். சிவப்புப் பட்டு உடுத்திருப்பது. மலையினில் செவ்வானம் படிந்தது போல. கைதை—தாழை. 9. நூற்றிதழ் மலர்—ஒரு வகைத் தாமரைப்பூ. திருவடிகள் தாமரை போல்வன; ஒரு தாமரையில் தோய்ந்தனபோல் விளங்குவன. 10. நான் தவஞ் செய்தபோது என்முன்னே நின்ற செவ்வியை இங்கே கண்டேன். குலவும் ஓர் அன்பு ஆம் விழி யிணை—அன்பே பொழியும் திருக் கண்கள். குழகன்—இயல்பினில் பழகும் குண முடையவன்.

## 6. உபரிசரவசு

போக மொன்றே புந்தி பொருத்து மெளியேனைத்
தாகம் பசியுந் தாக்கக் காட்டிப் பரிவினிலே
ஆகத் தணைப்பா னழைத்த பெருமான் திருநாமம்
மாகத் திமையோர் மனத்து ளூறிடும் நாரணமே. 1

மதியிற் கொண்டேன் மகவான் நட்பே அடியேனுக்
கிதமே காட்டித் தன்பா லேற்றுப் பெறற்கரிதாம்
பதமாம் பக்தி விளைத்த பரமன் திருநாமம்
நிதமுஞ் சான்றோர் நெஞ்சுள் நிலவிடும் நாரணமே. 2

நானே நிலத்தின் நாத னென்றே யிறுமாந்தேன்
தானோ ரன்பிற் றன்பா லென்னை யழைத்துப்பின்
மானந் தவிர்த்து வாழ்வுக் கானான் திருநாமம்
ஆனா மறையு ளாழும் பொருளதாம் நாரணமே. 3

வென்றி யொன்றே மேவி வாழ்ந்த எளியேன்முன்
நின்று தன்னை யெற்காம் நியந்தா வெனக்காட்ட
இன்று நானு மேற்றுக் கற்குந் திருநாமம்
நன்று கண்டேன் நாவுக் கருஞ்சுவை நாரணமே. 4

---

இப்பதிகத்தில் விவரிப்பது பெருமானின் குணம். தானே நமது உள்ளத்தில் தோன்றித் தனக்கே ஆக்கிக் கொள்வது. இதற்குச் சான்று, உபரிசர வசு இவ்வேந்தன் வானிலிருந்து கீழே தனது விமானத்தில் இறங்கும்போது, இவனுக்குப் பசியும் தாகமும் தோற்றுவித்துத் தன்பாலேற்றுக் கொண்டான், பெருமான். பின்பு திருமந்திரத்தையும் உபதேசித்தான். 1. ஆகத்து அணைப்பான்—அணைப்பதற்காக. மாகம் வைகுந்தம் 2. மதி—புந்தி. மகவான்—இந்திரன். நிலவும்—அமைந்துள்ள பதம்—பக்குவம், 3 இறுமாப்புக் கொண்ட என்னைத் திருத்தியவகை. மானம்—அபிமானம், அகங்காரம், ஆனா—அழிவில்லாத. 4. வென்றி—வெற்றி. எற்கு—எனக்கு நியந்தா—ஆள்பவன், தலைவன்.

நீதி யுரைத்தேன் நேமத் துற்றார் கதங்கொண்டார்
கோதி லெளியேன் பாலே குலவிப் பரிவாலே
தீதே சேரா வண்ணங் காத்தான் திருநாமம்
வேத மூலப் பொருளாய் விளங்கிடும் நாரணமே. 5

இருளார் நிலத்தி லேக்க முற்ற வெளியேனைக்
கருடன் தன்னாற் கடப்பித் திங்கே அழைத் துகந்தோர்
அருளே பொழிந்த வமலற் காகுந் திருநாமம்
தெருளர் சிந்தை சேர்க்குஞ் செல்வமாம் நாரணமே. 6

தன்னா லொன்றுந் தானே கொள்ளா னெனவேகொல்
என்னாற் தனக்கா மிருக்கை யேற்றே மகிழ்வுற்றான்
என்னைத் தொண்டிற் கேற்ற வெந்தை திருநாமம்
பன்னிப் பெரியோர் பண்ணி லிசைத்திடும் நாரணமே. 7

மருந்து வேண்டில் வாழ்வு வேண்டில் மகிழ்வுக்காம்
விருந்து வேண்டில் மேலும் வேண்டில் நயனெல்லாம்
அருந்த வேண்டி லனைத்து மளிக்குந் திருநாமம்
விரிந்த தெருளின் மெய்யர் விரும்பிடும் நாரணமே. 8

எந்தாய்! கண்ண புரத்தாய்! உன்னை யெனக்கெனவே
தந்தா யென்றன் தனையை காணக் கனவினிலே
வந்தாய் மணந்தே யுகந்தாய் மாலுன் திருநாமம்
சிந்தை யடரச் சேர்க்குந் தேனதாம் நாரணமே. 9

---

5. வேள்விக்கான பசு உயிர்ப்பசு என்று நான் உரைக்க முனிவர் கோபித்தனர். நேமத்து உற்றவர்: வேள்வியில் நியமத்தோடு அமர்ந்தவர்; இவர்கள் கருத்து: உயிர்ப் பசு வேண்டாம், மாவாலானதே போதும்—என்பது. பசு: ஆடு முதலிய நாற்கால் சீவன். இவர்களது சாபத்தால் வசு பாதாளத்தில் ஆழ்ந்தான். 6. இருளார் நிலம்—பாதாளம். கருடனை ஏவிப் பெருமான் இந்த வசு மன்னனைப் பூமிக்கு அழைத்துவரச் செய்தான். இவன் வெளிவந்த இடம் முக்தாகாரம் என்ற தடாகம்; திருக்கண்ணபுரத்தில் வடக்கு வீதியி லுள்ளது. 7. உமரிசர வசுவைக் கொண்டு திருக்கோயில் ஏற்றுக் கொண்டது. 9. யாவும் அளிக்க வல்லது நாராயண நாமம். தனையை—வசுவின் மகள் பதுமினித் தாயார்.

என்ற னுள்ளம் நீயே யேற்றுன் னுறைவாக்க
உன்ற னுள்ளத் தடியே னுறைந்தே னுயிராக
என்ற னிதத்துக் காகி யிம்மை யெழுமையுமே
நன்று நாளும் நவிலும் நாமமாம் நாரணமே. 10

## 7. பாண்டியன்

புனலி லாடப் பொருநையிலே
புக்கேன் புதல்வி தன்னோடும்
எனையே மறந்தே னிமையளவில்
எழுந்தே னிங்கே பதுமநிரை
புனையும் பொய்கைப் புனலிடையே
பொருந்தி நின்றேன் வியப்புற்றே
கனிவாய் மரையாள் வனைமார்பா!
கண்ண புரத்தென் கருமணியே! 1

உத்தரப் படர்வா மிந்நாளில்
உத்தம மாகு மோரையிலே
பத்த ரொன்பது படித்துறையிற்
படிந்து புனலிற் குடைந்தாட

10. நீயே என்னுள்ளத்துள் வந்து உறைந்தாய்; நான் உன் உள்ளத்துள் உறைந்து உனக்கு உயிரானேன்.

1. இந்தப் பதிகம் பாண்டியன் பெருமான் முன் விண்ணப்பஞ் செய்வது. இது பெருமானது பரத்துவத்தை விளக்குவது. உத்தராயண புண்ணிய காலத்தில் தாமிர வருணியில் நீராடச் சென்ற பாண்டியன் நீரில் ஆழ்ந்து மறைந்தான். பின்பு திருக்கண்ணபுரத்தில் புஷ்கரிணியில் நீருள் நின்றான். புனையும்—ஆபரணம் போல் அடர்ந்துள்ள; கனிவாய்—கோவைக் கனிபோல் சிவந்த வாயுடைய. 2. உத்தராயண புண்ணிய காலத்திலே அடியார் ஒன்பது துறைகளிலும் மண்டி நீராடினர்.

மொய்த்து விண்பா லும்பரொடும்
முனிவ ரினங்கள் வாழ்த்தியவே
சித்தங் குளிரக் கண்டேன்நான்
தேவர் முதல்வா செம்மணியே! 2

இதுவோ கங்கை வரநதியாம்
இதுவோ யமுனை தானாகும்
இதுவோ கோதா வரியாகும்
இதுவோ துங்க பத்திரைகாண்
இதுவோ பொருந லென்றென்றே
இமையோ ரிப்பால் நோக்கினரே
இதுவோர் விந்தை யெனக்கண்டேன்
இமையோர் தலைவா! நாரணனே! 3

கூடி வானோர் ககனத்தே
கூறக் கேட்டே னிவ்வணமே
தேடித் திரிந்தோம் திசையெங்கும்
சேரும் புனல்கள் காணாமல்
நாடி யிங்கே வந்தோமால்
நலனே யாக விதுகண்டோம்
தேடற் கரிய புனலெல்லாம்
சேர்ந்த விந்தப் பொய்கையிலே. 4

நின்பால் தேவர் நிரைநிரையா
நேடி யின்பம் பெறுவதுபோல்
நின்சார் பருகே பொலிகின்ற
பொய்கை நீரும் நெகிழ்வின்றி

---

3. வானில் தேவர், முனிவர் யாவரும் வாழ்த்தே ஓதினர். வானில் நின்று தேவர் கூறியது: இந்தப் புஷ்கரிணி கங்கையோ...? தாமிர வருணியோ? எல்லாப் புனல்களும் இந்தப் புஷ்கரிணியில் சார்ந்துள்ளன. 4. வானோர் கூறியது : இந்தத் தீர்த்தங்களை எங்கும் தேடினோம்; காணவில்லை; யாவும் இங்குள்ளன. 5. தேவர் உன்னிடம் சேர்ந்து இன்புறுவது போல் இப்புனல்கள் உன் திருக்கோயிலின் அருகேயுள்ள புஷ்கரிணியில் படிந்து மகிழ்கின்றன.

தன்பாற் சாருந் தீர்த்தங்கள்
தமக்கும் புகலா யாகியதால்
அன்பா! உன்னோ டுன்னுடைய
தடமும் புனித மாயதுவே. 5

விண்ணோர் தங்கள் தலைவருடன்
விரும்பிப் புகுந்தார் நின்னுறைவில்
எண்மர் வசுக்க ளெண்டிசையுங்
காக்கு மிமையோ ரெல்லோரும்
எண்க ணீச னிருக்கோதி
மலர்க ளேந்திப் புகுந்தனனே
எண்ண கில்லேன் நின்பெருமை
இமையோர் தலைவா! என்னுயிரே! 6

பொன்னின் புகரே யெங்கெங்கும்
பொங்கு முன்றன் னுறைவினிலே
துன்னுந் தேவர் கணங்களிடை
தோய்ந்த வுன்றன் மணிமுடியோ
மின்னின் மிக்கு விளங்கியதால்
உன்றன் மேன்மை தனைக்கண்டேன்
பன்ன வரிதாம் பேரின்பம்
படர்ந்த திங்கே பரம்பரனே! 7

பிரமன் நின்முன் சிரஞ்சாய்த்துப்
பெரிதாம் வியப்பி லிதுகூறும்:
"பெருமான்! முன்னம் புனல்படைத்துப்
பெற்ற பேரோ நாரணமாம்

---

6. விண்ணோர் கோயிலுட் புகுந்தனர்; வசுக்கள் எண்மர், திசைபாலகர், பிரமன். இருக்கு—வேதங்கள். 7. கோயிலிலுள்ளே பொன் ஒளி. தேவர் கணங்களுக்கிடையில் கிரீடம் மிக விளங்கியது. தேவர்கள் உன்னை வணங்கி இன்புற்றனர். 8. பிரமன் ஓதியது : பெருமானே! உனக்குப் பெயர் நாரணன், நீ புனலைப் படைத்து, அதில் துயில்வதால். இந்தப் புஷ்கரிணியாகிய தீர்த்தம் உன்னுடையதாகையால். இந்தத் திருநாமம் திண்மையுறும்.

பரவி யுன்றன் பாதத்திற்
பணியுந் தீர்த்தம் பலபலவே
புரிவா லவற்றுக் கருள்செய்வாய்
புலவர் போற்றும் புண்ணியனே! 8

ஆயிர நயனன் நின்முன்னர்
அடியில் தாழ்ந்து மொழிந்தனனே:
ஆயிரம் பணங்கொ ளரவின்பால்
ஆயிரங் கைகால் முடிபரப்பி
ஆயிரந் திரைவா யார்கலியில்
அன்று துயின்றா யின்றிங்கே
ஆயிரம் புனல்க ளடிபரவ
நின்றா யண்டர்க் கதிபதியே! 9

நின்னை நினையா வெளியேனை
நின்முன் சேர்த்தாய் நெடுமாலே!
என்ன கைம்மா றிதற்காகும்
எந்தாய்! எண்ண கில்லேனே
என்னோ டென்ற னுடைமையெலாம்
இறைவா! உனக்கா மென்றோதி
நின்முன் நின்றேன் நினையண்டி
நேடேன் வேறு புகலாக. 10

## 8. பூசகன்

ஏழினேழ் பிறப்பு மிறைவா! உனக்காம்
கேழிலாத் தொண்டே புரியுங் குலத்தில்
ஏழையேன் பிறந்தேன் இழிவிதே செய்தேன்
தாழ்விது தீர்ப்பாய் தமியனேன் வாழவே. 1

1. இப்பதிகத்தில் கூறப்படும் குணம்: பெருமான் தன்னைப் பற்றியவர்களது குற்றத்தைக் காணாமல் ஆபத்திற் காப்பது. பூசகன் ஒருவன், வேசி ஒருத்தியிடம் காதல் கொண்டான். அவள் தலையில் அணிந்த சரத்தைச் சோழ மன்னனிடம் பெருமானது அருளாக அளித்தான். அதில் கேசமிருந்ததால் சீற்றங்கொண்டான், சோழன்.

பூசனைக் காவ பொன்னெனக் கூறும்
மாசில் நெறியோர் வாயுரை கேட்டும்
தூசனங் கொண்டேன் சூழ்வினை யாலே
ஈசனே! எந்தாய்! காப்பா யெனைநீ. 2

நின்னருஞ் செவ்வியும் நின்விழி மாண்பும்
புன்னகை யின்னன புந்தியிற் கொள்ளேன்
மின்னென நின்றாள் விழியா லழிந்தேன்
என்பிழை காணா திறைவனே! காப்பாய். 3

உனதருஞ் சோதியே யுண்ணுமிக் கண்ணால்
இனிதென வேற்றே னிழிதகை யாளை
துனியிதே கொண்டேன் துவளுவ னந்தோ!
நனிநடுக் குற்றேன் நாதனே! காப்பாய். 4

உலகெலா மேத்து முனதடி நீத்துச்
சலமுடைப் பேயின் தாளிலே சார்ந்தேன்
நிலமனன் சீற்றத் திழிந்தனன் நீசனேன்
நிலமெலாங் காக்கும் நிமலனே! காப்பாய். 5

விரையே விரவும் நின்குழற் காவ
நறுமலர்த் தார்கள் நாயினேன் காம
வெறியினால் வேசிக் காமெனத் தந்தேன்
இறைவனே! ஈதே பொறுத்தெனைக் காப்பாய். 6

---

2. வாயுரை—செய்த உபதேசம். தூசனம்—பழி; மூத்தோர் சொல் கேட்கவில்லை. 3. உன் அழகைக் கண்டும் நான் மயங்கி அவளிடம் சேர்ந்தேன். மின் என: என் கண்களைக் கவர்ந்தாள். 4. கண்கள் உனது சோதியைக் காண்பதற்கு. இக் கண்களால் இழிதகையாளைக் கண்டேன். நடுக்குற்றேன்; பூசகன் மன்னனிடம் கூறியது: பெருமானுக்குத் தலையில் கேசம் உண்டு—என்று. மறுநாட் காலையில் கேசத்துடன் பெருமானைக் காட்டாவிட்டால் பூசகனின் கையைத் துண்டிப்பதாக மன்னன் கூறினான். 5. நில மனன்—வேந்தன். 6. விரை—பரிமளம். தார்கள்—சரங்கள். காம வெறியால் விளைவு இதுவாம்.

இன்பமே காட்டி யென்னை மயக்கிய
துன்பச் சுழலாந் தொழுத்தை யுகந்தேன்
அன்புக் கடலே! அடியேன் புகலா
யுன்கழல் சேர்ந்தே னுகந்தெனைக் காப்பாய். 7

உன்தொண் டினுக்கே வுற்ற வடியேன்
என்கொண் டினிநான் வாழ்வ னினிதே?
மன்கொள் சீற்றம் மாற்றிநீ யென்பால்
அன்புண் டேலெனை அச்சுதா! காப்பாய். 8

பகையே யூறிப் பலவாங் கொடுமை
மிகவே குவித்த மேவல ருய்ந்தார்
இகழ்விதா லேழையேன் வாழ்வ திலையால்
புகலா யெனைநீ புரக்கா விடினே. 9

வளைசங் கேந்தி வல்வினை யேன்முனர்
கிளர்தருஞ் சோதியில் கேசவா! நின்றாய்
விளைவிதே என்றன் துன்பமே வீய்ந்ததால்
அளவிலாக் கருணையி னன்பனே! வாழிநீ. 10

---

7. தொழுத்தை—கீழ்மகள். இவள் என்னைத் துன்பச் சுழலில் ஆழ்த்தினாள். உகந்தேன்—அவளிடம் என் விருப்பம் சேர்த்தது. 8. உன் தொண்டு—உனக்கு ஆராதனம் செய்வது. மன்—மன்னன். அன்பு உண்டேல்—என்னிடம் உனக்கு அன்பு இருக்குமானால். 9. உன்னிடம் பகைமை கொண்டவர் யாவரும் உன் கழலே அடைந்தனர். சிசுபாலன் உன்னைப் பலவாறாக இகழ்ந்தும் நற்கதி பெற்றான். "ஏசினார் உய்ந்து போனார்" (திருமங்கை யாழ்வார்). சரண் புகுவோர் தமது தாழ்வைக் கூறிப் பெருமானே புகலாக விண்ணப்பஞ் செய்வர். 10. மறுநாட் காலையில் பெருமான் கேசத்துடன் சேவை யருளினான். அரசன் சந்தேகங் கொண்டு கேசத்தை இழுக்கு மாறு உத்தரவிட, இரத்தம் பீறிட்டு அவன் மேல் சிந்தியது. அரசன் வியந்து சொன்னது: உன் அன்பனுக்காக அவனது குற்றந் தெரியாமல் காத்தாய்: என்னே உன் பட்சபாதம்!

## 9. முனையதரையர்

அன்பே வடிவா மமரர் குலத்தில்
தோய்ந்து குலவுவதே
இன்பம் பயக்கு மன்ன மெனவே
வுகக்குந் திருமாலே!
தன்ம மறியாத் தமியேன் பாலுங்
கொண்ட தகவாலே
அன்பி னயின்றா யமுதா வடியேன்
நல்கிய பொங்கலிதே. 1

புந்தி புணர்க்கு மன்பே யுருவாம்
புலவன் பொரிதன்னை
அந்த மிலதா மின்ப மளிக்கு
மமுதா யுகந்தாயால்

---

இப்பகுதியில் பெருமானது அரிய குணம் ஒன்று விளக்கம் பெறும்: அன்பர் கரத்தால் அளிக்கும் உணவுப் பொருள் பேரமுதாகக் கொள்வது. இப்பதிகம் முனையதரையர் பெருமான்முன் விண்ணப்பிப்பது. இவர் சோழ மன்னனுக்குக் குடிகளிடத்திருந்து வரிப்பணம் சேர்த்துக் கொடுக்கும் பணியில் தோய்ந்திருந்தார். ஒரு வருஷம் பஞ்சத்தால் பெருமானுக்கு ஆராதனம் குறைவு பட்டதால், வரிப் பணத்தை ஆராதனத்திற் காகச் செலவிட்டார். இவர் சிறைப்படவே, பெருமான் மன்னன் கனவினில் தோன்றி இவரை விடுவித்தான். தமக்காகச் சமைத்த பொங்கலை உண்பதற்குமுன் இவர் பெருமானுக்கு அர்ப்பித்தார்; இந்தப் பொங்கல் பெருமானது வாயிலும் மேனியினும் படர்ந்திருந்தது. முனையதரையர் பெரிதும் வியந்து, பெருமான் நாள்தோறும் இரவில் அமுதுசெய்யப் பொங்கல் கட்டளை ஏற்படுத்தினார்.

1. அமரர்—நித்யசூரிகள். இவர்கள் இசைப்பது: "அஹம் அந்நம்"—நான் பெருமானுக்கு அன்னம்போல் விரும்பப் படுமவன். தன்மம்—நெறி. தமியேன்—அடியேன். பெருமான் உகக்கும் உணவு: அடியார்களது கூட்டத்தில் இன்புறுவது. 2. புலவன்—குசேலன். பொரி—அவல்.

சிந்தை தெளியாச் சிறியேன் பாலுஞ்
    சேர்த்துன் திருவருளை
எந்தாய்! அமுதா யேற்றா யெளியேன்
    நல்கிய பொங்கலிதே. 2

பரிவால் நிகரே பகர லாகா
    வன்னை யமுதாக
அரிதி லளித்த முலைப்பா லுண்டாய்
    அண்டத் ததிபதியே!
கருதி யெளியேன் தனையுங் காத்தற்
    குரியே னெனநிற்கே
உரிதா முகப்பி லுண்டா யடியேன்
    நல்கிய பொங்கலிதே. 3

புல்கு கணவன் பொன்னும் பொருளும்
    நீயென் றுணர்ந்தவராஞ்
செல்வத் தொறுவர் சிறுமியர் கொவ்வை
    வாயமு துண்டனைநீ
எல்லே நலனே காணா வெளியேன்
    பாலும் பரிவினிலே
நல்லாய்! விரும்பி யுண்டாய் நாயேன்
    நல்கிய பொங்கலிதே. 4

மலையின் முன்னர் மலைபோற் குவித்த
    வூணின் வகையெல்லாம்
மலையாய் மன்னி வாரிக் களிப்பா
    லுண்டு மகிழ்ந்தனைநீ.

---

3. பரிவால்: யசோதையைப் போல் பரிவு மிக்கவர் ஒருவருமிலர். அரிதில்—அருமையான. காத்தற்குரியேன்; மன்னனது கனவில் தோன்றிக் காத்தான், பெருமான். 4. ஆயர் சிறுமியர் கண்ணனைத் தமக்கு எல்லாமாகக் கருதினர்; ஒப்பற்ற ஞானத்தால். தொறுவர்—ஆயர். 5. மலை—கோவர்த்தனம். ஊண்—உணவு. மலையாய்—கோவத்தன மலையாகி. வாரி—பேரளவில் ஏற்றுக் கொண்டு.

சலமே கொண்ட தமியேன் பாலுஞ்
சரியாக் கருணையினால்
குலவிக் கொண்டா யுண்ண வடியேன்
நல்கிய பொங்கலிதே. 5

வேத முதல்வன் நீயே யென்று
மேவி நின்பாலே
ஓதி நல்லார் சேர்த்த வுணவே
யுண்டா யமுதெனவே
போத மறியாப் புல்ல னென்பாற்
பொங்கும் புரிவாலே
ஆத ரத்தா லுண்டா யடியேன்
நல்கிய பொங்கலிதே. 6

ஆற்றி னோர மமர்ந்து துணைவர்
தம்மை யணைத்துப்பின்
ஆற்ற வன்பி லன்னை யளித்த
வன்ன மயின்றனைநீ
தோற்றுன் சீலந் தனக்குத் தொண்டே
கொண்ட தமியேன்பால்
ஏற்றோர் பாச மயின்றா யெளியேன்
நல்கிய பொங்கலிதே! 7

தானே சுவைத்துத் தக்க தெனவே
சேர்த்த கனியெல்லாம்
ஆனா வன்பிற் சபரி யளிக்க
வமுதா வயின்றாயால்

---

சலம்—வஞ்சகம். சலியா—மாறாத. குலவி—நட்புக் கொண்டு. 6. ஓதி நல்லார்—சிறந்த குழல் வாய்ந்தவர். முனிவர் பத்தினிமார், கண்ணனுக்கும் மற்றைப் பிள்ளைகளுக்கும் நால்வகை உணவு கொண்டு சென்றனர் போதம்—ஞானம். புல்லன்—அற்பன். 7. யமுனை யாற்றின் கரையில் கண்ணன் நண்பருடன் உணவு உண்டான்; தயிரன்னம், ஊறுகாய்—யசோதை கொடுத்தனுப்பியவை.

வானோர் தலைவா! மனங்கொண் டென்னை
யுனக்கே யடியேனாய்க்
கோனே! உண்டாய் குலவி யடியேன்
நல்கிய பொங்கலிதே. 8

பேருஞ் செவியி லேற்காப் பேதைப்
பேய்க்கு மருளினை நீ
கோரும் பதமே யளித்தாய்
கோடாக் கருணையினால்
ஆர்வே யென்பால் நீகொள் வதுதான்
எவ்வா றதிசயமாம்?
ஆரா வமுதா யுண்டா யடியேன்
நலகிய பொங்கலிதே. 9

புன்கண் பொங்கச் சிறையிற் புழுவாய்த்
துடித்த வெளியேனை
அன்பா லரசன் கனவில் தோன்றி
விடுத்தா யச்சுதனே!
என்பால் கொண்ட பெரிதாம் புரிவா
லென்றன் கரந்தன்னால்
நின்பா லளித்த பொங்க லயின்றாய்
நிகரில் கருணையினே! 10

---

8. சபரி அளித்த கனிகளை உண்டு களித்தாய். 9. பேய்—கண்டாகர்ணன். இவன் சிவ பக்தன்; நாராயணன் நாமம் செவியிற் படாதவாறு மணியைக் கட்டிக் கொண்டிருந்தான் செவியில். இவன் மோக்ஷம் விரும்ப, அளித்தாய்; இவனுடை தம்பிக்கும் அளித்தாய். கண்ணபிரான் அவ்வழிச் சென்ற போது, இவன் ஒரு பிணத்தை அளித்தான். "இதம் சவம், நவம் மேத்யம்" என்றான்; இது புதியது, நீ உண்ணத்தக்கது. 10. புன்கண்—துன்பம். அன்பனது கரம் பட்டதால் பெருமான் உகந்தான். இதேபோல் ஆய்ச்சியர் தம் கரத்தால் அளைந்த வெண்ணெய் உகந்துண்டான்.

ஐவகை நிலைகள்

## 1. பரத்வம்

பொன்னுல கதுவும் புணரியும் நிலனும்
பொருந்துபல் லுயிர்களின் றிரளும்
மன்னுயிர் மனமும் மானவ ரன்பால்
மனந்தனி லுனக்கினி தென்றே
உன்னியே வனையு முறைவொடு முருவும்
பரம்பர னேயுன தாவ
கன்னிநன் மதிள்கள் சூழ்ந்துவிண் ணோங்குங்
கணபுர முறைதருங் கோனே! 1

எண்டிசை யெங்கு பரவிடு நிலமோ
எண்ணில தன்னுளே வைக்கும்
அண்டமு மண்டத் தப்புற மெங்கு
மணைதரு புனலுமோர் கூறா

---

பெருமானது நிலைகள் ஐவகை :(1) பரத்வம்: ஸ்ரீ வைகுண்டத்தி லிருப்பு, (2) வியூகம்; தேவர்களுக்காகக் காட்சி யருளுவதற்காக மூன்று மூர்த்திகளான நிலை, (3) அந்தர்யா மித்வம் : உயிர்களது உள்ளத்தில் உறைதல், (4) விபவம் : அவதாரங்கள், (5) அர்ச்சை : திருக்கோயில்களிலும் இல்லங் களிலும் படிவமாகவோ சித்திரமாகவோ அமைந்திருத்தல், இப்பதிகத்தில் பரத்வ நிலையைப் பெருமான்முன் விண்ணப்பஞ் செய்வது.

1. பொன்னுலகு—வைகுண்டம். புணரி—கடல் மன்னுயிர் மனம்—உயிர்களது உள்ளம். மானவர்—மாந்தர். மானவர் அன்பால்...உன்னியே—உன்னிடமுள்ள அன்பாலே மாந்தர் நீ உகப்பாய் என்று கருதி. வனையும்—அமைக்கிற. உறைவு—கோயில். கன்னி—திண்ணிய,

மண்டிடும் மடங்கில் வரையில தாகி
வளர்தரும் முதுநில முனதாம்
கண்டவ ருள்ளங் கவர்தருங் கண்ணா!
கணபுர முறைதருங் கோனே! 2

சோதிமிக் கடர்ந்து சோர்வில தாகித்
துளிர்த்துமேற் படர்ந்திறை யேனுந்
கோதிலா வின்பப் படர்வதே யாகிக்
குலவிடு நிலமுன தாகும்
கேதமே யறியா நித்தியர் முக்தர்
கேழில ருன்றனக் காவர்
காதல்செய் யன்பர்க் கருநிதி யாவாய்
கணபுர முறைதருங் கோனே! 3

நித்திய மாகி நின்மல மாகி
நெகிழ்வெது மிலதெனப் பெருகி
மொய்த்தடர் நீல நிலவினா லுன்றன்
முகிழ்தரு மேனியி னொளியில்
பைத்தபந் நகமா மணையினில் தோய்ந்து
பரிவினி லுயிரெலாங் காப்பாய்
கைத்துமுன் மாவின் வாய்பிளந் துகந்தாய்
கணபுர முறைதருங் கோனே! 4

---

2. வைகுந்தத்தின் பரிமாணம் : அண்டங்கள், அப்பாற்பட்ட பெருங்கடல் இவை ஒரு கூறானால், இதன் முப்மடங்காகும். இதற்கு த்ரி-பாத்-விபூதி என்று பெயர். விபூதி—செல்வம், உடைமை. 3. வைகுந்தத்தில் சோதி அடர்ந்துள்ள வகை : சோதி அடர்ந்து, சோர்வு இல்லாமல், துளிர்த்துப் படர்ந்து. அங்கு உறைபவர் : நித்தியர் : உலக வாழ்க்கையே அறியாமல் அங்கேயே நித்தியமாக இருப்பவர்; முக்தர்—மோக்ஷம் பெற்றுச் சென்றவர். உன்றனக்கு ஆவர்—உனக்கே தொண்டு செய்பவர்; கேழிலர்—இதனால் ஒப்பில்லாதவர். 4. பெருமானது திருமேனி நிறம். நீலம். முகிழ்தரும் ஒளி—மலரும் ஒளி. பைத்த பந்நாகம்—படங்களுடைய நாகம் (பாம்பு).

உளங்கவர்ந் தொளிருஞ் சோதியின் மேனி
ஓங்குமோர் மலையெனப் பிறங்கக்
களங்கமில் சுடராய்க் கவினொடு தளிர்ப்பால்
காண்டரு மென்மையும் மணமும்
வளம்படர் மழவும் வாமலா வண்யமும்
வளர்தர விளங்குவை மாலே!
களங்கனி வண்ணா! காவணை செய்யுங்
கணபுர முறைதருங் கோனே! 5

நிலவடர் நுதலும் செவ்வரி படர்ந்து
நீண்டொளிர் நயனமுங் காமன்
சிலையெனத் திகழும் புருவமுஞ் செவியும்
செங்கனி வாயிடை முறுவல்
அலகிலா வின்பப் பெருக்கெனத் துய்ப்பர்
அயர்விலர் நித்தியர் முக்தர்
கலைவல ரீண்டு களித்திசை பாடுங்
கணபுர முறைதருங் கோனே! 6

பொன்னொளிர் பட்டும் பொருந்துபொற் கச்சும்
பொன்மணி யாரமும் பூணும்
மன்னுகௌத் துவமும் மறுவொடு விரையார்
மங்கல நல்வன மாலை

---

5. சோதியின் மேனி—சோதிவாய்ந்த திருமேனி. பிறங்க—விளங்க. களங்கம்—குற்றம். சுடர்—சுடர்மயமாக இருப்பவன். கவின்—பேரழகு. மழவு—இளமை. வாம—அழகிய, லாவண்யம் மேனி திரையின்றி மழமழ வென்றிருத்தல், 6. திருமேனியின் உறுப்புகள். நிலவு—ஒளி. நுதல்—நெற்றி, காமன் சிலை—மன்மதன் கையிலுள்ள கரும்பாகிய வில். அலகிலா—அளவிட முடியாத. அயர்விலா—சோர்வில்லாமல் தொண்டில் படியும். 7. பீதாம்பரம், திருவாபரணங்கள் முதலியன. பொற் கச்சு—பீதாம்பரத்தின் மேல் பொருந்தும் பொன்மயமான பட்டு. கௌத்துவம் : கௌத்துவமணி. மறு—மச்சம், ஸ்ரீவத்ஸம் எனப்படும். பூண்—பூணூல்.

மின்னிடு மணிசேர் முடியொடு விளங்கும்
மேனியி னெழில்தனி லுறைந்தாய்
கன்னவில் தோளால் மல்லரை யட்டாய்
கணபுர முறைதருங் கோனே! 7

பங்கயக் கரத்தி னணியெனப் படிந்த
பணிலமும் நேமியுஞ் செவியில்
தொங்கிமா டுலவுஞ் சுடர்மணிக் குழையும்
துன்னுபன் மலர்வனை குழலும்
செங்கதி ரெறியுங் கண்டிகை பிறங்கச்
செவ்வியி லுறைந்தனை பரமா!
செங்கய லுகளும் புனல்வளை செய்யுங்
கணபுர முறைதருங் கோனே! 8

தளங்களா றிரண்டாந் தாமரை மலர்மேல்
தருமமா மிருக்கையில் வெள்ளைப்
பளிங்கெனப் புகர்கொள் பாம்பணை யின்பால்
படருமோர் சோதியின் வடிவாய்
உளங்கவர் மாண்பில் மன்னிவீற் றிருப்பாய்
உலகெலா முனக்கெனக் கொண்டாய்
களங்கொளும் மேனிக் கண்ணனே! எந்தாய்!
கணபுர முறைதருங் கோனே! 9

---

கன்னவில்—கல்போல் திண்ணியதான. மல்லர்—முட்டிக சாணூரர். 8. திருக்கையில் திவ்யாயுதங்கள். பணிலம்—சங்கு. நேமி—சக்கரம். மாடு உலவும்—அருகில் அசைகின்ற. துன்னு பல் மலர் வனை—அடர்ந்து பல மலர்கள் சூடிய. கதிர்—ஒளி. கண்டிகை — திருக்கழுத்துக்கு ஆபரணம். 9. பெருமான் வீற்றிருக்கும் ஆசனம். இதற்கு தர்மாதி பீடம் எனப் பெயர். இது பன்னிரண்டு இதழ்கள் கொண்ட தாமரை மயமாம். இருக்கை-ஆசனம். புகர்—சோதி. பாம்பினணையில் பெருமான் ஒரு சோதியாக விளங்குகிறான். களம் கொளும் மேனி—களங்கனிபோல கறுத்த திருமேனி, களம்—கறுப்பு என்றும் பொருள்படும்.

இருமருங் கமர்ந்து நின்னெழில் மாந்து
மேந்திழை யார்விழி நோக்கால்
ஒருதனி முதலா யும்பரொ டிம்பர்
உன்தன மாமெனக் கொண்டாய்
பெருநிலத் துயிர்க ளுய்வதே நோக்கிப்
பேணி நீ வந்தனை பெம்மான்!
கருமுகில் படியுங் காவிளம் படருங்
கணபுர முறைதருங் கோனே! 10

## 2. கல்யாண குணங்கள்

மூவருள் முதல்வ னாகிக் காரணம் மூன்று மாகி
யாவரு மெவரு மாகி யலகிலா ஞானம் வாய்ந்து [பாய்
சோர்வெதுஞ் சேரா வண்ணந் துவள்வற வுயிர்கள் காப்
காவணைந் தெழிலிற் சூழுங் கணபுரம் வந்த கோவே! 1

நினைவில்நீ கொள்வ வெல்லாம் நெகிழ்வற நேர்வ வெந்
[தாய்!
நினதரும் ஞானத் தாலே நிகிலமும் நேரிற் போல
மனந்தனிற் கொள்ள வல்லை வானவ ரோடு மாந்தர்
அனைவரு முன்றன் நோக்கா லளவிலா வின்பம்
துய்ப்பர். 2

---

10. ஏந்திழையார் : பிராட்டிமார். உம்பர்—வானவர். இம்பர்—இங்குள்ளவர்; வானாடு, அண்டங்கள் என்னுமாம்.

1. கல்யாண குணங்கள் : பகவானுக்கே உரிய குணங்கள். மூவகைக் காரணம் : படைப்பவன், படைப்பதற்குப் பயன்படும் பொருள், உபகரணங்கள். உலகமயமான பெருமான், தானே உலகங்களைப் படைத்தான். துவள்வு—வாட்டம். 2. சங்கற்ப ஞானம் வாய்ந்தவன் பெருமான் : ஒரே காலத்தில் யாவையும் நேரில் காண்பது போல் அறிந்து கொள்ளும் ஆற்றல், நினதரும்...வல்லை—சங்கற்ப ஞானத்தாலே யாவும் அறிய வல்லை. துய்ப்பர்—பெற்று மகிழ்வர்.

ஒப்புயர் விலவே யாகி வுலப்பில வாகி யோங்கும்
செப்புதற் கரிதா மின்பந் தேசொடு சக்தி வீர்யம்
அப்பனே! உனக்கே யாகி யரியதோர்கருணை கொள்வாய்
துப்புற வுயிர்கள் காப்பாய் தொல்லையஞ் சோதி
யெந்தாய்! 3

கருணையே யன்பர் தம்பாற் கனக்கவேகொண்டுகாப்பாய்
மருளினா லன்னார் செய்வ மனந்தனு ளேற்க கில்லை
அருள்பெயுங் காலம் நோக்கி யவர்செயும் நல்ல தொன்றே
வரமென மனத்துக் கொள்வாய் வற்றுமோ
வுன்ற னன்பே? 4

காப்பதே கருத்திற் கொண்ட கண்ணனே! என்று முன்றன்
காப்பினுக் காகா ருண்டோ? கருதலர்தமையு ம காப்பாய்
ஆப்புறு மன்பி னாலே யாவதோர் வடிவில் தோன்றி
வாய்ப்புறுந் தலங்க ளெல்லாம் வந்துநீ தோன்றிக்
காப்பாய். 5

அன்பருக் காக வென்றே அமலனே உள்ளங் கொண்டாய்
நின்பதம் காண வாகும் நீர்மையு மெளிமை யின்றி
இன்பமும் ஞான சக்தி யேற்றவாச் சல்யத் தோடுந்
தென்புறும் பாசங் கொள்வாய் தேவர்தம் தலைவ!
எந்தாய்! 6

---

3. குணங்கள்: ஞானம், பலம், வீர்யம், சக்தி, தேசு. உலப்பிலா— குறையாத. துப்புற—ஆற்றலோடு. 4. கருணையால் செய்வது. மருள்—அறிவின்மை. அருள்...நோக்கி—அருள் செய்வதற்கான காலத்தை ஆராய்ந்து. நல்லது....கொள்வாய்—குற்றங்களை அறமறந்து, நல்ல செயலையே சிறப்புற நினைப்பாய் வரம்—சிறந்தது. 5. உயிர்களைக் காப்பதே கருத்திற் கொள்பவன். கருதலர்—பகைவர். ''ரிபூணாமபி வத்ஸல:'' பகைவரிடத்தும் வாத்ஸல்யம் கொள்பவன். ஆப்புறும்—நீங்காமல் கட்டியுள்ள. உயிர்களைக் காக்க ஏற்ற வடிவில் தோன்றுவாய். 6. உன்னைப் பற்று மன்பர் அனுபவிக்கும் குணங்கள்: ஞானம், சக்தி, வாச்சல்யம். தென்புறும் பாசம்—திண்ணியதான ஆர்வம். ஏற்ற வாச்சல்யம்—காப்பதற்காக அவசியம் வேண்டிய பெரும் பாசம். பதம்—திருவடி; நின் உறைவான ஸ்ரீ வைகுண்டம். அமலன்: தனக்கில்லாமல், அன்பருக்கே தான் ஆவதால்.

உன்னடிக் கன்பு செய்வா ருன்னொடும் சாம்ய மேற்பர்
அன்னவ ருய்வுக் காகு மாதரங் காட்டிப் பின்னும்
உன்னரும் வள்ள லாகி யுன்னையு மவர்க்க ளிப்பாய்
இன்னதோ ரன்பு தானு மெவரிடம் காண லாகும்? 7

வேட்பொடு வெறுப்பு மில்லா மேலனே! அன்ப ரேற்கத்
தேட்டமாக் கொள்வை நீயோ தெள்ளிய பக்தி யொன்றே
நாட்டினுக் கென்றே யாகும் நறுமலர் தென்ற லொப்ப
நாட்டமே நலனுக் காக நம்பிநீ கொள்வை பேறா. 8

பற்றல ரெதிர்ப்ப ராகில் பரவுமுன் சோதி கண்டே
நிற்கில ராகி நைவர் நினைதரும் பரமாம் வீரம்
முற்றுறா மொய்ம்புங் கொற்றம் மொய்க்கவே கண்டு வீழ்வர்
நற்றவ முனிவ ரேத்தும் நாரண! நிற்கே யாவேன். 9

உயிர்களுக் கிறைவ! உன்றன் குணங்மெலா முரைக் கடங்கா
பெயர்களே, பெருகி யென்றும்பெயர்களா யிரங்களாவ
அயர்விலா வமரர் தாமு மறிகில ருன்றன் மாண்பே
நயமுற ஞானம் வாய்ந்த நம்பிநின் பரத்வ மீதே. 10

---

7. உன் அன்பர் உன்னோடும் சாம்யம் ஏற்பர். ஆகும் ஆதரம் காட்டி—ஏற்றவாறு ஆதரித்து. உன்னரும்—நினைக்க இயலாத. உன்னையும்...அளிப்பாய்: ''எனக்கே தன்னைத் தந்த கற்பகம்'' (நம்மாழ்வார்.) 8. வேட்பு—விருப்பம். நீ அன்பரிடம் கோருவது பக்தி யொன்றே. நாட்டினுக்கு...ஒப்ப: மலர், தென்றல் இவை பிறர்க்கே பயன்படுவன: இதுபோல் நீயும் பிறர்க்கே யாவாய். 9. உன் முன் வரும் பகைவரின் நிலை பற்றலர்—பகைவர். உன்னிடம் இவர் காண்பன: வீரம், வலிமை, கொற்றம். மொய்ம்பு -வலிமை மொய்க்க—அடர. உன் சோதியைக் கண்டே முன் நிற்க மாட்டார்கள்; வீரம் முதலியவற்றால் அழிவர். 10. உரைக் கடங்கா—எண்ணற்றவை. பெயர்களோ:— குணங்களால் வந்த பெயர்கள் ஆயிர மாயிர மாவ. அயர்விலா அமரர்—நித்ய சூரிகள். அயர்வு—சோர்வு.

## 3. வியூகம்

மலரவன் றன்னொடு வானவர் தங்குல மாவனவும்
அலகில வுயிர்களு முய்தர வம்பருக் கிப்பாலாய்
நிலனிதில் தோன்றுவை நின்னருஞ் சோதிகு ணங்களுடன்
நிலையிது வியூகமென் றுரைப்பரால் நேமியங்
கையவனே! 1

விண்ணுறை வதுதனில் விரிஞ்சனும் மற்றைய
விண்ணவரும்
நண்ணுதற் கிலரென வுன்னடி நாடிவ ணங்கவெனக்
கண்ணனே! தோய்ந்துளை கருத்தினி லவர்குறை
நீக்கவென
அண்ணலே! மூவுரு வாயினை அமலனே! அச்சுதனே! 2

மன்னுயிர் படைப்பதுங் காப்பதும் மற்றும ழிப்பதுவும்
உன்னதே யாயின யுன்னையு பாசனஞ் செய்யுமவர்
உன்னுரு கண்டிடத் திருமக ளோடுமோர் சோதியிலே
மன்னினை மூன்றரு வடிவினில் நாதனே! மாலவனே! 3

சங்கரு டனெனச் சாருமோர் மூர்த்தியாய்க் காப்பதற்கே
பங்கமில் ஞானமும் வலிமையும்பரமநீ வாய்ந்தொளிர்வாய்
எங்குமி லங்கிட நீதியும் நெறியொடு நல்லறமும்
பொங்குமொ ரன்பினி லோதுவை பூமகள் நாயகனே! 4

---

வைகுந்திற்குப் பிரமன் முதலான தேவர்கள் போகமுடியாது. இவர்களுக்கு அருள் செய்வதற்கே நாராயணன் தோன்றும் நிலை வியூகம் என்பது. இந்த நிலையில் இவன் சங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று மூன்று மூர்த்தியாக விளங்குவான்.

1. மலரவன்—பிரமன். அம்பர்—பரமாகாசம், வைகுநதம். இதற்குக் கீழுள்ளவை பிரமலோகம் முதலியன. 2. விரிஞ்சன்—பிரமன். விண்ணுறைவு—பரமபதம். 3. பெருமான் செய்வன: படைத்தல், காத்தல். அழித்தல். நாம் உபாஸநம் செய்வதற்காக மூன்று மூர்த்திகளாக விளங்குகிறான். ஓர் சோதியொடும்—ஸ்ரீ வைகுண்டத்தில் கொண்டுள்ள சோதி குறையாமல். 4. சங்கர்டணன்: காப்பதே இவனுக்காகும். இதற்காக இவனிடம் முக்கியமாக உள்ள குணங்கள்: ஞானம், வலிமை.

உயிரெலா முனக்குயி ராயின உத்தம மாமொழுக்கும்
உயர்தர வளங்கொள வுத்தம னேயருள் செய்வாய்நீ
துயரினுக் காவதாம் பிறப்பிதைத் துடைத்துநீ மேலாமுன்
நயனுறுந் தானமே நல்குவை நம்பனே! நாரணனே! 5

ஒருரு ப்ரத்யும் னனெனெ வோதிட வாய்ந்தனைநீ
வீரியங் கோன்மையும் வாய்ந்துநீ மேதினிக் கோர்புகலாய்
ஆரியர் போற்றிடு நல்லற மார்வினில் நீயளிப்பாய்
சீரிய நிலையிதிற் தேவர்தந் தேவனே! சீதரனே! 6

மனமிது செய்திடு வகையதே யாயினை மன்னுயிர்க்குத்
தனமெனச் தன்மமுங் கன்மமுந் தக்கதா மோர்பயனாய்
இனமெனச் சத்துவ வர்க்கமே ஈசனே! நீபடைப்பாய்
கனிதரு மனமொரு காசினிக் காமொரு காவலனே! 7

வேறொரு மூர்த்திய நிருத்தனே யாகிநீ மேதினியைத்
தேர்வுறக் காத்திடச் சீர்த்ததொர் சக்தியுஞ் சோதியொடு
சாருமோர் தத்துவ ஞானமுந் தகையுற நீவளர்ப்பாய்
பாரின ருய்வினுக் காகியே பதுமையின் நாயகனே! 8

மூவகைக் காலமும் மூவகைக் குணங்களும் சத்துவமே
ஆவதற் கானதோர் ஞானமு மாயினை யச்சுதனே!
நாவலர் நாவினில் நீயடர்ந் தரியன நன்னூல்கள்
தேவனே! நல்குவை தேறிடப் பாரினர் கேசவனே! 9

---

5. இவன் அருள்வன: உத்தமமான ஒழுக்கம் பரவச் செய்வது; பிறப்பை நீக்குவது. 6. இரண்டாம் மூர்த்தி ப்ரத்யும்னன்: இவனது குணங்கள்: வீர்யம், கோன்மை. நல்லறம் பரவச் செய்வான். 7. இவன் மனத்துக்கு அதிதேவதை: சத்துவ வர்க்கங்கள் படைத்து அறச் செயல்களை ஆதரிப்பான். 8. மூன்றாவது மூர்த்தி: அநிருத்தன். குணங்கள்: சக்தி, சோதி: தத்துவ ஞானத்தை வளர்ப்பவன். 9. இம்மூர்த்தி ஞானமயனாவான். மூவகைக் காலமும் [குணங்களு மாவான். சத்துவம் தழைக்க ஞானமுடையோரிடம் ஆவேசித்து அற நூல்கள் வெளியிடுவான். நாவலர்—புலவர், கற்றோர்.

காசினிக் கோரணி யாகிய கண்ணபு ரத்திறைவா!
வாசுதே வன்னென வானிலு றைந்தனை யவ்வரிதாந்
தேசுடன் மூவுரு வேற்றனை முனைந்துயிர் காக்கவென
வாசந ருந்துள வம்புனை வாமன! மாதவனே! 10

## 4. அந்தர்யாமித்வம்

வானடர் தானமும் மாநில மாமிவற்றின்
கோனெனக் காப்பாய் குறையில னாயினும்நீ
ஆனதொ ரன்பி லனுவெனச் சீர்த்தடரும்
மானவ ருள்ளமும் மன்னுவை மாயவனே! 1

சலமில ராகியுன் தாளிணை சார்ந்தரிதிற்
குலவிடு மன்பர் குலமெலா முன்னுறைவாம்
நிலவிட வன்பே யிவருளம் நீங்காமல்
மலர்தர நாடிநீ மன்னுவை மாயோனே! 2

துன்பமொ டின்பமுஞ் சோகமு மோர்களிப்பும்
மன்னுயிர் கொள்ளும் மடிவில் பிறவிகளில்
மன்னனே! மற்றவர் நெஞ்சினில் மன்னுவைநீ
உன்னுறை வேயெனக் கொண்டுநீ யுத்தமனே! 3

உன்கழ லெண்ண கிலாதவர் தங்கட்கும்
இன்னருள் செய்வான் புகுந்தவர் சிந்தையிலே
நின்னுறை வேயென நீங்கா துறைதருவாய்
பின்னையுங் காப்பா யவர்தமைப் பெம்மானே! 4

---

1. மாந்தர் உள்ளத்தில் உறைந்து அவர்களுக்கு அருள் செய்யும் நிலை, அந்தர்யாமித்வம். வானடர் தானம்—பரம பதம். 2. மெய்யன்பரது உள்ளத்தில் பெருமான் உகந்துறைவான். சலம்—கபடம். உள்ளம் மலர்தர—பெருமானிடம் அன்பாலே சிறப்புற. 3. உயிர்கள் இன்புற்றாலும் துன்புற்றாலும், எப்போதும் துணையாவான் பெருமான். உறைவு—உறையுமிடம்; வைகுந்தம். 4. அன்பு கொள்ளாதவர் மனத்திலும் அமர்ந்து அவரைக் காப்பான்.

வெங்கதி ராழியும் வெண்சங் கினையேந்தி
மங்கல மாய நின் மாணுரு தன்னுடனே
செங்கதிர்ச் சோதியிற் சேர்ந்தவ ருள்ளத்தில்
தங்குவை யென்றும் தகையுடை மாதவனே! 5

மனத்தினில் வைத்துனை மாந்தர் வணங்கிடவே
நினைத்தற் கரிதாம் நினதுரு நீகொண்டு
நினைத்தினை யேனும் பிரிவுறாச் சிந்தையனாய்
அணைத்தவ ராக மமருவை யச்சுதனே! 6

இறப்பொடு சன்மமே காணு மிருநிலத்தின்
பரப்பினில் வாழும் பலவா முயிர்களெலாம்
புரப்பது தனையே புந்தியில் நீகொண்டு
மறப்பறத் தோய்வாய் மனந்தனில் மாலோனே! 7

இன்புதுன் பங்களி லென்றுந் துணையாகி
அன்பே வடிவா மரியதோர் சுற்றமுமாய்
உன்பத மிஃதெனு அன்பரி னுள்ளத்தில்
மன்னுவை மாலே! பரிவிதே மல்கிடவே. 8

இறைவனா யேழுலகினுக் காயினைநீ
குறையறத் தாதர் குலங்களைக் காத்தருள்வாய்
இறையெனும் நீங்கா திவர்தம் முளமென்னும்
மரையது விரிய மகிழ்வினில் மன்னுவையால். 9

பகையொடு நட்பதும் பாரா தரியதொரு
தகையனாய்க் காண்டற் கரியனாய்த் தாயெனவே
மிகுவதோ ரன்பி லுயிர்தமுள் மேவியேநீ
புகுவதே பேறாய் மகிழுவை புண்ணியனே! 10

---

5. அன்பர் உள்ளத்தில் தன்னுரு விளங்குமாறு உறைவான். 6. அவர்களைப் பிரியாமல், அணைத்து நிற்பான். 7. காப்பதே விரும்பி மாந்தர் மனத்துள் உறைவான். உன் பதம்—உனது உறைவிடம்; வைகுந்தம். 9. இவரது உள்ளமாகிய தாமரை மலருமாறு உறைவான். 10. பெருமானுக்குப் பகைவர் நண்பர் என்பதே இல்லை. யாவரும் சமம். அரியதொரு தகையன்—அரியதாம் சிறப்புடையவன்.

## 5. விபவம்

பிறவியே காணாப் பெருமையனே!
இருநிலங் காப்பதா மிச்சையிலே
உருபல வேற்பா யுலப்பிலதாம்
பரிவினில் தோன்றுவாய் பாரினிலே. 1

கன்மமே காரண மாயுயிர்கள்
துன்புறும் பூமியில் தோன்றுவதே
தன்மமா மென்றோர் தகவினிலே
அன்பனே! தோன்றி யுயிர்காப்பாய். 2

தேவர்தங் கோனாந் திருவுருவாய்
மீவரு மேன்மைய னாயினும்நீ
தாவரஞ் சங்கம மேயனைய
யாவகை யாயினு மாகுவையால். 3

தீவிகை தன்னிடஞ் சார்ந்தொளிநந்
தீவிகை போலவே செங்கண்மால்!
யாவகைத் தோற்றமே யேற்றிடினும்
தேவநின் தேசோ மிகுந்தொளிரும். 4

எண்ணில வாயின எம்பிறவி
அண்ணலே யுன்னா லவைநீங்கும்
மண்ணிலே வாய்தரும் நின்பிறவி
எண்ணில வென்றும் வரையிலதே. 5

---

1. மாந்தர் கண்ணாற் காணுமாறு வடிவோடு வரும் நிலை, விபவம். பிறவியே இல்லாத பெருமான் தனது இச்சையாலே பிறப்பான். 2. நம் பிறப்பு நமது கன்மத்தால். 3. ஏற்கும் வடிவத்திற்கு எல்லையில்லை; தாவர சன்மமும், சங்கம சன்மமும் கொள்வான். 4. இதனால் இவனுக்கு இழிவில்லை; பிறக்கப் பிறக்க இவனது புகர் அதிகரிக்கும். தீவிகை —தீவட்டி, தீபம். 5. இவன் பிறப்பதால் நமது பிறவிகள் முடிவடைவன; இவனது பிறவிகளுக்குக் கணக்கேயில்லை. மேலும் மேலும் பிறப்பான், இவன் நமது பிறவியை நீக்க.

ஒருமூன் றுருவில் வியூகத்தும்
உருவோ கேசவ னாம்முதலா
இருமூன் றிரண்டா யிலங்குவைநீ
விரியுங் கதிர்களு மாமுருவில். 6

பிறப்போ பெருமான்! உனக்கில்லை
உறுவ திதுவுன திச்சையதால்
பிறப்பா லுனதாம் பெருமையெலாம்
சிறப்புற மேலுந் திகழ்தருமே. 7

பிறவி யிவற்றால் பெருமாள்நீ
பெறுவதோ சான்றோர் தமைக்காக்கும்
அரியதோர் பேறாம் பிறிதிலையால்
நெறியே வளர்ப்பாய் நிலந்தனிலே. 8

மண்ணினர் வாழும் வகையறிய
விண்ணினை நீத்து விரிகடலில்
நண்ணி யுறைந்தனை நாரணனே!
எண்ணில வாம்பல நின்பிறவி. 9

உபய விபூதியி னொண்சுடரே!
விபவ மிதுவா மிருநிலத்தோர்
விபதமே வீய்க்கும் விருப்பினிலே
அபய மளிக்கும் நிலையிதுவே. 10

---

6. வியூகத்தில் மூன்று மூர்த்தியாய், இம்மூர்த்திகளே பன்னிரண்டாய்க் கேசவன் முதலான பேருடன் விளங்குவன் பெருமான். கதிர்—புகர். 7. பெருமான் பிறப்பதால், அவனது சிறப்பு மிகுதரும். 8. இவ்வாறு பிறப்பதால் பெருமான் செய்வது: சான்றோரைக் காப்பது: "பரித்ராணாய ஸாதூநாம்." இவ்வாறு அவதரித்துப் பெருமான் நெறியை வளர்ப்பான். 9. மண்ணவரைக் காப்பதற்காக முதலில் பாற்கடலில் வந்தான். இவனுடைய பிறவிகள் பலப் பல. 10. உபய விபூதி—வைகுந்தமும் அண்டங்களும். இவை இரண்டு வகையாகிய செல்வம். விபதம்—துன்பம். வீய்க்கும்—அகற்றும்.

## 6. அவதாரங்கள்

திரையே கிளர்ந்து திசையெட் டடர்ந்து
சேண்பா லுயர்ந்த புனலில்
வரையே யிலாத மலைபோல் வளர்ந்து
வரையின்றி யெங்கு முலவி
மறையீ ரிரண்டு வயிற்றுள் ளொடுக்கி
வருமீன மாய வுருவன்
பொருநீர நேமி புயமேந்து கண்ண
புரத்திற் பொருந்து வுருவே. 1

பொலிவே யிழந்த புத்தேளி ருண்ணப்
புனலிற் பொருந்து மமுதம்
அலையிற் கடைந்து பெறுவான் முனைந்தொர்
அசலத்தை நட்டு முதுகில்
சலியாத வாறு தாங்கிச் சுமந்து
தளராது தோய்ந்த கமடம்
புலமே பொலிந்த புரமாய கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 2

கனைத்துக் கிளர்ந்து கடுகிப் பரந்த
கடல்நீரி லெங்கு மலைகள்
அனைத்துங் கடந்து மண்ணை யிடந்து
பரிவோடு கோட்டி லமர

---

1. பெருமான் ஏற்ற அவதாரங்களை விவரிப்பது, இப் பதிகம். திரை—அலை. சேண்—ஆகாயம். பொரு நீர—போர் செய்வதே இயல்பாகிய நேமி — சக்கரம். 2. புத்தேளிர்—தேவர். புனல்: திருப்பாற்கடல். அசலம்—மலை. பெறுவான்—பெறுவதற்காக. சலியாதவாறு—அசையாமல். கமடம்—ஆமை. புலம்—நிலங்கள். 3. கனைத்து—பேரொலியுடன். கடுகி—விரைந்து. கோடு—தந்தம், கோரைப் பல்.

அணைத்துக் களித்த முழுஞான மூர்த்தி
யன்பன் வராக னுருவே
புனத்துத் துழாயின் மலர்சூடு கண்ண
புரத்துப் பொருந்து முருவே. 3

சீரே சிறந்த திருமாலின் நாமஞ்
செவியிற் கொளாத பகையால்
சீறிச் சினந்த தெவ்வன் னறைந்த
தம்பந் திறந்து வெளியே
வீறே பிறங்கு விறற்சீய ரூபன்
வேற்றார் குலங்க ளவியப்
போரில் துணித்த பெருமாயன் கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 4

மழவாற் சிறந்து மறையோது மாணி
வடிவிற் படர்ந்து மகமாம்
விழவில் நிலத்தி லடிமூன்று வேண்டி
விண்பா லெழுந்து மலரோன்
தொழநின்ற சோதி மூதாய வேதந்
துதிசெய்யுந் தூய முதல்வன்
பொழிலே பொலிந்த புரமாய கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 5

பரசொன்று கொண்டு பற்றா ரவிக்கும்
பரன்வீரன் மோனன் மகனாய்
அரசர்த மெச்ச மெழுமூன்று தோற்ற
மழித்துக் கொழித்த வுதரம்

4 தெவ்வன்— பகைவன், இரணியன். வீறு—பெருமை. விறல்—வலிமை. வேற்றார்—பகைவர்; க்ருஷ்ணாரணியத்தில் தவத்தினரைக் கொன்று தின்ற அசுரர்கள், விகடாக்ஷனைத் தலைவனாகக் கொண்டவர். 5. மழவு—இளமை. மகம்—வேள்வி; மாவலி செய்தது. மூதாய— பழையனவான. 6. பரசுராமாவதாரம். பற்றார்—பகைவர். எச்சம்—குலம். எழுமூன்று தோற்றம்—இருபத்தொரு பரம்பரை.

சரசைந்து தோய்ந்து குளித்துக் களித்துச்
சினமே தவிர்த்த தகையோன்
புரிசைக ளோங்கு புரியாய கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 6

எழிலே திரண்டு திறனோடு மெண்ண
கிலவாங் குணங்கள் பலவே
வழுவாத வன்பின் வளனோடு வையம்
புரந்திட்ட மன்ன னொருவன்
அழியாத பேரி னபிராம னென்ன
வண்டம் புகழ்கின்ற சோதி
பொழிலே பொலிந்த புரமாய கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 7

பாரைப் படர்ந்த பணத்திற் சுமந்த
பணிவேந்தன் பல்கு பரிவால்
பாரிற் படர்ந்த சுமைதீர வந்த
பரமன் றனக்கு முனனாய்
சீரில் வளர்ந்த பால்வண்ண மேனி
தேவன் திரண்ட பகையைப்
போரில் துணித்த பெருமாயன் கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 8

பரமாய வானின் வளனே மறந்து
பாரிற் பிறந்து மிடையற்
குறவாக வந்து வெண்ணெய் யுகந்து
கறவைகள் மேய்த்த வொருவன்

---

சரசு ஐந்து— சமந்த (ஸ்யமந்த) பஞ்சகம் என்ற தடாகங்கள். அரசர்களது உதிரத்தை ஏரியாகத் தேக்கி அதில் பரசுராமன் தனது தந்தைக்கான கிரியையைச் செய்தான். 7 இராமபிரான்: அழகாலும், வீரத்தாலும், குணங்களாலும் மிக்கவன். 8. பலராமன்: ஆதி சேஷனின் அவதாரம்; கண்ணபிரானுக்கு மூத்தவன். பரந்த பணத்தில்—விரிந்த படங்களில். பல்கு—மிகுந்த பால் வண்ண—வெளுப்பான. பகை—அசுரர்கள். 9. பரமாய வான்— பரமபதம். தேனில்

திறன்மிக்க தெவ்வ ரினங்காய்ந்த தேசன்
தேனில் திரண்ட வமுதம்
புறமெங்கு மார்ந்த பொழில்சூழுங் கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 9

மறனே மலிந்து நெறியே குலைந்து
மடிவின்றி யெங்கு மடரும்
மிறையாற் கலங்கு முயிர்கள் புரக்கு
மன்போடு மேவி மிகவே
அறனே வளர்க்கு மருஞ்சோதி மூர்த்தி
யரன்கொண்ட வம்பின் நுனியாய்
புரமூன் றெரித்த பரனின்று கண்ண
புரத்திற் பொருந்து முருவே. 10

## 7. பன்னிரு மூர்த்திகள்

கேசவ னாயினை கேசியை மாய்த்துநீ
தேசனாம் நான்முகன் றன்னொடு செஞ்சடை
யீசனைப் படைத்தா யுயிர்கட் கிடரெலாம்
நாசமே செய்திடும் நம்பிநீ முன்னோய்! 1

நாரண நம்பி! நால்வகை யாமுயிர்க்குக்
காரண னாயினை காப்பே கருத்ததாய்
பாரிற் பலவாம் வடிவிலே வந்தனை
ஆரணம் போற்று மமல வடிவனே! 2

---

*திரண்ட அமுதம்: கடலில் திரண்டதன்று. 10. மறன்—பாவம், தீமை. மிறை—துன்பம். அரன்... நுனியாய்; முப்புரம் எரிக்கக் கொண்ட அம்பின் நுனியாக அமைந்தான் பெருமான்.*

*1. கேசவன் முதலாப் பன்னிருமூர்த்திகளாய்ப் பெருமான் விளங்குகிறான். கேசவன் : இதனால் பெறும் கருத்துகள் : கேசியைக் கொன்றவன், அழகிய கேசமுடையவன்; சிவனுக்கும் பிரமனுக்கும் முதல்வன். 2. நாரணன் : உலகுக்குக் காரணன், காக்கும் இயல்பினன்; வேதங்களால் போற்றப்படுவோன்,*

மாதவ! வேரி மலர்மகட் கன்பனே!
கோதிலா விஞ்ஞைச் குலங்கட் கிறைவனே!
மாதவ மோனர் வளந்தனுக் காகியோர்
சோதியாய்த் தோன்றுவை தூமணி வண்ணனே! 3

கோவிந்த நாமனே! கோகுலந் தோன்றிநீ
ஓர்விந்த மாயினை ஒதத் தலைந்தோர்
பாசந் தனால்முனம் பாரை யிடந்தனை
வாசங் கமழ்தரு மாலைநன் மார்வனே! 4

விட்டுணு நாமனாய் வியாபித் தெவணுமே
விட்டகல் கில்லையால் மேதினி தன்னொடு
மட்டில் சராசர மெல்லாம் வலங்கொளும்
வட்டத் திகிரியங் கையனே மாதவா! 5

மதுசூ தனனே! மதுவைமுன் மாய்த்தனை
முதுவராஞ் சூரியர் முன்னவ னாயினை
மதுபோல் மனத்துக் கினியனே! மாயனே!
நிதியே யானாய் நிலத்தி னருக்கே. 6

திரிவிக் கிரமனே! மண்ணுந் திவமும்
ஒருவிக் கிரமத்தா லுனகழற் காக்கினை
அறிவுக் கருநிதி யாரண மாகியும்
மருவித் தொழுவோர் மனத்து ளுறைவாய். 7

---

3. மாதவன்: பிராட்டிக்கு அன்பன், வித்தைகளுக்கு அதிபதி, முனிவர்களுக்குச் சோதியாய்த் தோன்றுவோன். மாதவர்—முனிவர். 4. கோவிந்தன்: கோகுலத்தில் தோன்றியவன்; கடலிலிருந்து பூமியை எடுத்தவன். மணங்கமழும் மாலை வேய்ந்தவன். விந்தம்—சிறந்த மணி. 5. விட்டுணு: எங்கும் உறைபவன்; பூமியையும் உயிர்களையும் விட்டுப் பிரியாதவன்; சக்கரங் கையினுடையவன். 6. மதுசூதனன்: மது என்ற அசுரனைக் கொன்றவன்; நித்திய சூரியர்க்கு முன்னவன்; மதுபோல் மனத்துக் கினியவன். 7. திரிவிக்கிரமன்: பூமியையும் வானையும் ஆற்றலால் தனக்கே ஆக்கிக் கொண்டவன்; வேதமயன்; அன்பரின் மனத்துளுறைபவன்.

வாமன னாகி மனந்தனை யீர்க்குமோர்
வாமமாய் நின்றனை மல்கும் பரிவிலே
சேமமே நல்கவென் சிந்தையுள் தோய்வையால்
காமனைப் பயந்த காளையே! கண்ணனே! 8

சீதர நாமனாய்த் தேவர் தலைவனாய்ப்
போதமர் பாவை புணர்தரும் மார்பினை
போதமும் பொன்னும் பொருளொடு மின்பமும்
வாய்தர நல்குவை மாமணி வண்ணனே! 9

பதும நாபனாய்ப் பாவன மூர்த்தியாய்ப்
பதுமத் தெழுந்தாய் பகர்தருங் காலமாய்ப்
பதும மயமாய் விளங்குவை யுந்தியிற்
பதுமம் பூத்தனை பாரெலாந் தோன்றவே. 10

இருடீ கேசனா யிந்திரி யங்களின்
மருளே மலைத்திடும் வன்மையே வாய்ந்தனை
மருளெலாம் மாய்த்துநீ மானவர் வாழ்தரத்
தெருளே யருளுவை தேவர் தலைவனே! 11

தாமோ தரனாய்த் தாயா லுரலிலே
தாம மதனால் தகையுண் டழுதனை
வாம வடிவனே! சௌரிமா மாயனே!
ஏம வொளியே! எமக்கருஞ் செல்வமே! 12

---

8. வாமனன்: மனத்தைக் கவரும் அழகுடையவன். சிந்தையுள் தோய்ந்து சேமம் அளிப்பவன்; காமனைப் பயந்தவன். 9. சீதரன்; தேவர் தலைவன்; பிராட்டியைத் திருமார்பில் ஏற்பவன்; எல்லா நலன்களும் நல்குமவன். 10. பதும நாபன்: பாவன மூர்த்தி; பதும மலரில் தோன்றியவன் (புஷ்கரத்தில்); பதுமம் என்பதால் கால மயமானவன். பதுமம்: கோடாநுகோடி; கால அளவு. உந்தியில் பதுமம் வாய்ந்தவன். 11. இருடீகேசன். இந்திரியங்களுக்கு அதிபதி: தீநெறியைப் போக்கும் வலிமை வாய்ந்தவன்; மாந்தர்க்கு நல்லறிவு அளிப்பவன். 12. தாமோதரன்: தாயால் கட்டுண்டவன்; வயிற்றில் கயிறு வாய்ந்தவன்; அழகிய மேனியன்.

## 8. தெள்ளிய சிங்கம்

வன்பகை யல்லது மனத்தினில் வளர்த்திலன்
வாளவுணன்
வன்மம ழித்தனை மடங்கலின் வடிவினில் வந்தவனே!
மன்னுமிச் சினத்தினை மாற்றுவை மனத்தினி லச்சமின்றி
நின்னெழில் பருகுவம் நிமலனே! இவ்வருள் நீசெய்வாய் 1

சீறிவ ளர்ந்தனை திசைகள் திகைத்திட மாவுருவில்
பாரொடு மாகட லண்டமும் பதைத்தன பற்பலவே
மாறுத கைத்தனை மண்டிய கதமிது மாற்றுவையோ?
சீரிய நின்னுரு வணங்கிடச் செல்வனே! நீயருள்வாய். 2

பிளிறு பெருக்கினை பிளந்தன வானொடு மண்டமெலாம்
அளறு பரப்பினை யவுணனு ரத்தெழு செந்நீரால்
கிளறு கதத்தினிற் கேசவா! இன்னும்நீ செய்வதெதோ?
தளர்வுறு மெங்களுக் குன்தனித்தண்ணளி நீயருள்வாய். 3

பிலமென விரிந்திருள் பெருகிட ஆழ்ந்ததுன் பேழ்வாயோ
வலியன வெயிறுகள் வாளென மண்டின நாவிதுவோ
வலமிட மாகவ சைந்தசைந் துலவிட வாயினிலே [வாய்.
நிலவுநின் னெழில்தனைக் கண்டிட நின்மல! நீயருள் 4

வில்லெனக் கோடிய நெற்றி நெறித்தனை வெல்லகிலா
அல்லலுக் காமழ லம்பென வம்பகம் தீயெறிவ
வெல்லகி லானொரு மேவலன் வீழ்த்தியும் சீற்றமிதென்?
செல்வனே! திருமகள் நாயக! சீற்றம கைத்திடுவாய். 5

---

1. நரசிங்க மூர்த்தியின் அழகோடு சீற்றத்தையும் கண்ட தேவர்கள் வேண்டிக்கொள்வது. வன்மம்—பகை. 2. மாறு—பகை; பகைவன். இவன் கொண்ட பெருவடிவம். 3. பேரொலியால் எங்கும் நடுக்கம். பிளிறு—பேரொலி. எங்கும் உதிரத்தால் சேறு. அளறு—சேறு. 4. பயங்கரமான வடிவம். வாய்: குகை போல் இருள் அடர்ந்துள்ளது. பற்கள் வாள் போல்வன. நா வாயில் உலவுகின்றது. 5. பின்னும் வடிவத்தின் வருணனை. நெற்றி நெறித்தாய்.

உளைகள் சிலிர்த்தன ஒன்றலாத் தோமரம் போலுலவி
வளையுகிர் வாளென நீண்டன வாருவ வூன்சதையே
அளைதலி லவுணனி னாகமே இன்னமுஞ் சீறுவதென்?
தெளிவினில் தேசினில் தேவனே! எம்முனந் தோன்று
வையோ? 6

கபடம னத்தினன் காதுகன் தன்மக னுக்கரியாஞ்
சுமடன கைத்தனை தோய்ந்தநா லூனொடு செந்நீரும்
அபயம ளிப்பையோ? அங்கையா லாளரி யானவனே!
சுபமெனு முன்னுடைத் தொல்லுரு காட்டுவை
தூமணியே! 7

நாகரின் நங்கையர் தம்மொடும் நாட்டிய காயகரைப்
போகம்பு ணர்தரத் தன்வய மாக்கிய புல்லியன்றன்
ஆகம ளைந்தவன் குடரினை யேந்திய கோளரியே!
நீகதம் நீக்குவை நின்னெழி லுருவுடன் நீயுறைவாய். 8

பொழிலொடு கானமும் பூதரமு மின்னன வீரத்தால்
விழியிலொ டுக்கியே மேதகு வேள்வியும் பூசனையும்
அழிவில தாக்கமுங் கொண்டவ னாகமே கீண்டனையால்
விழுமிய நின்திரு மேனியை யாந்தொழக்காட்டுவையோ 9

காமரு சோதியிற் கண்ண புரத்துறை தூமணியே!
நீமுன மாளரி யாயினை நேரலன் நீறாகத்
தேவர்க ளேத்திடச் சீரிய தாமுரு வேற்றனையால்
ஆவதா மிவ்வுரு மனத்தினுக் காவதா மோரணியே. 10

---

6. பின்னும் வருணனை. உளை—பிடரி மயிர். தோமரம்—கைவேல். உகிர்—நகம். 7. இவன் கொடியவன் என்பது. காதுகன்—கொடியவன். சுமடன்—இழிஞன். 8. நாகர் நங்கையரைக் கவர்ந்தவன். நாகர்—தேவர். நாட்டியர்—நடனம் வல்லவர். காயகர்—இசை வல்லவர். நாட்டிடகாயகர்—உம்மைத் தொகை. புல்லியன்—அற்பன். கோளரி—மிடுக்குடைய சிங்க வடிவன். கதம் நீக்குவை—கோபத்தை ஒழிப்பாய் 9. யாவற்றையும் தனக்கெனக் கவர்ந்தவன். பொழில் பூமி. பூதரம்—மலை விழியில் ஒடுக்கி—கண்ணாற் குறிக்கும் ஆணைக்கு உட்படுத்தி.

## 9. வாமன மூர்த்தி

விதிசிவர்க் கத்த னென்று வேதநூ லேத்துங் கோவே!
சதமகற் காக வன்று தவமுனி மகனாய் வந்து
முதுமறை வாயொ லிப்ப மூவடி மண்ணி ரந்து [தாய்.
பதமுறப் பாத மொன்றைப் பாரிதோ வொடுங்க வைத் 1

நற்றவ முனிவ ரேத்துவம் நாரண நம்பி! முன்னம்
உற்றதோர் மாணி யாகி யும்பர்வா யோங்கும் போதே
பற்றுற விண்ணின் பாலே பாதமொன் றோங்கி யோங்கி
முற்றுறா வானி லெங்கும் மொய்த்ததுன் மேனி தானே. 2

அசைவிலாச் சீர்த்தி கொண்ட வச்சுதா! அமரர் கோவே!
விசையினிற் பாய்ந்து விண்பால் மேவிநீ யெழுந்தபோதோ
அசலமுங் கடல்க ளெல்லா மடர்ந்தநின் காலி லாங்கே
திசையெல்லாம் மேனி யார்ந்த திருமுடி கீழ்ந்த வானே. 3

அந்தமில் மறைகள் போற்று மாதியாம் பரம! உன்றன்
உந்தியிற் சுகனம் தோய்ந்த வொலிகட லுதரத் தாழ்ந்த
விந்தையே மார்பி லுற்ற வெஞ்சுடர் மதிய மந்தோ
அந்தரம் பூத மெல்லா மடர்ந்தநின் மேனி யின்பால். 4

மார்பினில் மலராள் மன்ன மாணெலாம் மல்க வாய்ந்த
தேவர்தங் கணங்க ணீண்டுன் சீரெலாம் பாடி யார்ந்தார்
மீவரும் மகிழ்வி னோடு சாம்பவான் பறையை யேந்திப்
பூவலஞ் செய்தனன்காண் போற்றியுன் வெற்றிதன்னை. 5

---

வாமனாதவதாரத்தில் பகவான் கொண்ட பேருரு இப் பதிகத்தில் வருணிக்கப்படுகிறது.

1. விதி—பிரமன். சதமகன்—இந்திரன். தவமுனி—காசிபன். பதம் உற—இடத்தில் (பூமியில்) பொருந்து மாறு 2 உம்பர்வாய்—ஆகாயத்தில். முற்றுறா வான்—அளவின்றி மேன்மேலும் ஓங்கும் ஆகாசம். 3. விசையினில்—வேகத்தில். அசலம்—மலை. அடர்ந்த—அடர்ந்தன. ஆர்ந்த—ஆரந்தன. கீழ்ந்த—கீழ்ந்தது. 4. உந்தி—கொப்பூழ். ககனம்—ஆகாசம். விந்தை—ஆச்சரியம். அந்தரம்—ஆகாயம். பூதம்—ஐந்து பூதங்கள். 5. மலராள்—இலக்குமி. மாண்—பெருமை. மீவரும்—அதிகமான. பூவலம் செய்தனன்-பூமியை வலஞ் செய்தான்.

அரந்தையே கொள்ளா வண்ண மகிலமுங் காக்கு முன்றன்
கரங்களி லமரர் தோய்ந்தார் காதுகள் திசைக ளாய
சிரந்தனிற் கேசந் தானுஞ் சிறந்ததே மேக மாகப்
பரந்தநின் விழியி ரண்டும் பரிதியும் பிறையு மாய. 6

தோடுலா மங்கை தோயுந் தூமணி மார்ப! உன்றன்
நாடிகள் நதிக ளாய வுரோமமு லிகைக ளாய
நாடோடு நகரந் தாமும் நகர்வன நிற்ப வெல்லாம்
கேடிலாவுன்றன் மேனிக்கிளர்விலேதோய்ந்தவென்னே! 7

மதுதனை மாய்த்த மாலே! வானில்நீ வளர்ந்த போது
வதனமோ வன்னி யாகி வாணியே மறைக ளாய
நுதலதோ பகலு மெல்லி யாயவே நொடிவு மின்றி
இதமுறக் கர்ணந் தம்மி லியங்கிய சாம கானம். 8

பன்னிரு நாம மோதிப் பாங்கினி லன்னை யேத்தப்
பொன்னவிர் மேனி யோடும் புவியிதிற் போந்த மாலே!
மின்னிட நேமி தண்டும் படையொடு சங்கு மன்றிக்
கொன்னவில் வில்லின் நாணோ கோளெழ வொலித்த
தம்மா! 9

மாதிரத் தோங்கு முன்றன் மலரடி மலரோன் வாழ்த்தி
ஆதரத் தலர்கள் தூவி யலம்பிய வம்பு தானும்
பாதகம் பாற்ற வல்ல பரமமாம் மருந்தே யாய
ஆதியாம் மருத்து வன்நீ யாயினை சௌரி! மாலே! 10

---

6. அரந்தை— துன்பம், அவனி— பூமி. திசைகள் ஆய திசைகளாயின; எங்கும் செவி மயமாயிற்று. மேகமாகச் சிறந்தது— மேக பதத்தில் சேர்ந்தது. பரிதி— சூரியன், பிறை— சந்திரன். 7. தோடு— தாமரையிதழ். தோடுலா மங்கை— லஷ்மி. நாடி— நரம்பு. நாடுகள்... எல்லாம் நாடுகள், நகரங்கள், உயிர்கள் இவை சோதியில் அடங்கின. 8. வதனம்— முகம்; முகச்சோதி அக்நியாயிற்று. வன்னி— அக்நி. வாணி— சொல், பேச்சு. நுதல்... எல்லி— ஒளியாலே பகல், கேசத்தால் இரவு. 9. அன்னை— அதிதி. பன்னிரு நாமம் ஓதி— பகவான் அவதரித்தபோது அவனுடைய பன்னிரண்டு திருநாமங்களை யும் ஓதி வாழ்த்தினாள். நேமி-சக்கரம். படை— வாள்.

## 10. இராமபிரான் குணங்கள்

உலகனைத்து மோர்குடையின் கீழொடுக்கிக்
　　கோடாக்கோ லோச்சுங் கோவே!
கலையனைத்துங் கற்றவனாய் நின்செல்வன்
　　காகுத்தர் குலத்தின் சோதி
நலனனைத்தும் தரணிக்கே நாடுமிவன்
　　நாட்டுக்கோர் திலத மாவான்
நிலமனைத்து மிளங்கோவாய் நின்னுடனே
　　இவனாள நினைக்கின் றோமே. 1

தினகரன்றன் குலவிளக்காய்த் திசையெங்குஞ்
　　சீர்த்தியெழ விளங்குஞ் செல்வன்
கனைகடல்போல் மாண்புடையன் பனியடரும்
　　கல்லகம்போல் தீரங் கொள்வான்
மனமருவு புந்தியினாற் சுரகுருவாம்
　　மகவானாம் வீரந் தன்னால்
தனமனைய தன்மத்தால் மிக்கோனாம்
　　சத்துவத்தின் மூர்த்தி கண்டாய். 2

---

*தசரத சக்கரவர்த்தி இராமபிரானை இளவரசாக்க நினைத்துப் பேரவையில் இதை வெளியிட, யாவரும் பெரு மகிழ்ச்சி கொண்டனர். தசரதனுக்கு இராமபிரானின் குணங்கள் யாவையும் விரித்து அவனிடம் விண்ணப்பம் செய் தனர். அவையோர் கூறியதை இப்பதிகம் சுருக்கிக் கூறுவது.*

1. *இராமபிரான் இளவரசாக நாங்கள் விரும்புகிறோம் என்கின்றனர். கோடாக் கோல்—கோடாத செங்கோல்; அரசநீதி தவறாமல். கலையனைத்தும்—வேத வேதாந் தங்கள், அரச நீதி போல்வன. நலன் அனைத்தும்: முதல் குணம்; தனக்கென வாழாதவன்; நாட்டுக்கு நலமே நினைப்பவன்.* 2. *தினகரன்—சூரியன். விளக்கு: தானும் விளங்கிக் குலந்தையும் விளங்கச் செய்பவன்: மாண்பு—பெருமை. கல்லகம்—மலை. பனியடரும் கல்லகம்—இமயமலை. மனம் மருவு—மனத்தில் அடர்ந்த. சுரகுரு—பிருகற்பதி. மகவான்—இந்திரன். தனமனைய தன்மத்தால்—தன்மத்தைத் தனம் போல் கருதி வளர்ப்பவன். சத்துவத்தின் மூர்த்தி—சத்துவ குணமே உருவெடுத்து வந்தது போன்றவன்.*

சாந்தமயன் தாந்தியொடு சத்துவமுந்
தண்ணளியும் நன்றி யோர்வும்
வாய்ந்துமன மென்மையொடு வாய்மைநலம்
வல்லவனாய்த் தேவ ரோடும்
மாந்தரினம் வாழ்த்துமொரு தனிச்செல்வன்
மாநிலத்தின் திலக மாவான்
தேய்ந்தகலத் தீமையெலாந் தீர்க்கவலன்
செம்மலிவன் செங்கோல் வேந்தே! 3

நலமடர நாடுமிவன் நலிவுக்கா
மசூயைதனை நையக் காய்ந்து
நிலவிடுமோ ரின்பத்தில் யாவர்க்கும்
நெருங்குதற்கா மெளிமை வாய்ந்தான்
நலனணவுஞ் சொல்வல்லன் சத்தியத்தில்
நழுவிலனா யூன்றி நிற்கும்
குலவுமொரு புன்னகையே குவிதருமே
கோகனக முகத்திற் கோவே! 4

மூவகையாம் மூத்தோர்தம் பதங்களிலே
மொய்த்தடரு மன்பால் தோய்ந்தோர்
ஆவலிலே பற்பலகால் தானோதி
யருந்தனமாய்க் கலைக ளாய்ந்து
மேவரிதாம் ஞானத்தின் விரிகடலாய்
வேய்ந்துளனால் கீர்த்தி வேந்தே!
தேவரினக் குருவாகுஞ் செல்வன்போற்
சிறப்புறுமுன் செல்வன் றானே. 5

---

3. அரிய குணங்கள்: சாந்தம், தாந்தம், சத்துவம், தண்ணளி, நன்றி யோர்வு, மனத்தின் மென்மை, வாய்மை. தாந்தம்—மனமடக்கம். 4. யாவர்க்கும் நலமே விரும்புவான்; அசூயை கொள்ளமாட்டான்; எப்போதும் இன்பமுறுவான்; யாவரிடத்தும் பழகும் எளிமை; நல்லதே சொல்லுவன்; சத்தியமே விரும்புவோன்; எப்போதும் புன்னகையே கொள்வான். 5. மூவகை மூத்தோர்: வயதால், அறிவால், ஒழுக்கத்தால். ஞானம் வாய்ந்தவன்.

போருக்கா மத்திரசத் திரமறிந்த
புயவலியன் சிலையொன் றேந்தி
யாருக்கு மஞ்சானா யண்டலர்தம்
நிரையெல்லா மொடுக்குந் தீரன்
போருக்காங் கோலங்கொண் டேகுங்கால்
புவிவிண்ணுங் கலங்கு மன்றா
பாருக்காம் பாலனத்தில் தக்கானாம்
பார்வேந்தே! மனத்திற் கொள்வாய். 6

மக்களிடம் தான்முன்னே குலவுமிவன்
வாயாரச் சேமங் கேட்கும்
துக்கமெது மிவர்கொள்ளில் துவளுமிவன்
தூயமனப் பான்மை கொண்டே
மெத்தவருஞ் சிந்தையுடன் விழவினிலே
தான்முந்தி விளங்கச் செய்வன்
இத்தகைய சீலன்காண் நின்செல்வன்
எங்கள்தனி வேந்தே! கேட்பாய். 7

மன்மதன்போல் மேனியினன் மலைபோலுந்
திண்ணியதாம் மார்பே வாய்ந்து
கன்னவிலுந் தோளுடையான் கழுகனைய
கண்டத்தான் தண்ணார் முன்னம்
கொன்னவிலுஞ் சிலையேந்திக் கொடுங்கணைகள்
குலங்குலமா வுய்க்குந் தீரன்
மன்னவநின் மாநிலமே இவனொருவன்
வலத்தாலே காக்கும் திண்ணம். 8

---

6. போர் செய்ய வல்லவன். அண்டலர்—பகைவர். இவன் போருக்குச் சென்றால் மண்ணும் வானும் கலங்கும். பாலனம்—காப்பாற்றுதல். 7. மாந்தரிடம் பழகும் வகை: முன்னே பேசுவான், சேமம் கேட்பான். துக்கம் காணில் தான் முந்துற வருந்துவான். விழாக்களில் தான் முன்னே இருந்து நிகழ்த்துவன். 8. திருமேனி யழகு: பலம் வாய்ந்த தோள்கள், திண்ணிய மார்பு, கழுத்தின் அழகு. பகைவர்களை அழிக்கும் திறல் வாய்த்தவன்.

வீரத்தால் விட்டுணுவிவன் வெண்மதிபோல்
யாவர்க்கும் நல்கு மின்பம்
தீரத்தால் சினத்தாலே சீறிவள
ருழித்தீ யாவன் வேந்தே!
பாரொக்கக் கமைகொள்வன் பகையறியான்
தியாகத்தால் தனத னாவான்
காரொக்கும் மேனியினன் கருதரிய
சத்தியத்தின் வடிவே யாவான். 9

வீரத்தால் திண்மனத்தால் மேவரிய
மிடலாலே வென்னே கொள்ளுந்
தீரத்தன் தானாகித் திறம்பாத
நீதியினன் தேசா லெங்கும்
நேரொப்பொன் றில்லாத வபிராமன்
தானாகி நீமுன் வாழ்ந்தாய்
பாருய்க்கக் கண்ணபுரம் வந்தவனே!
பரஞ்சோதி! மாதாள் மார்பா! 10

## 11. பிராட்டிக்கு அனுமான் ஓதியது

கற்புக்கா மருங்கலமே! காகுத்தற் காருயிரே!
நிற்பிரியா நினைப்புடைய நின்கேள்வன் நலங்கேட்பாய்
பற்பமென விழியுடையான் பகர்க்கரிய வெழிலுடையான்
பொற்புடைய மதிவதனன் பொருவில்லாப்
புண்ணியனே! 1

புகராலே கதிரவனாம் புந்தியினாற் சுரகுருவே
நிகரோதாச் சீர்த்தியினால் நேரோவ்வா னிந்திரனும்
புகலாவான் சான்றோர்க்குப் புவியாகும்பொறுமையினால்
அகமார நெறிவல்ல வருந்தகைய னாயிழையே! 2

9. தனதன்—குபேரன். நேரொப்பு—நேரும் ஒப்பு
10. மாது ஆள் மார்பா எனப் பிரிக்க.

1. தாமரை போல் கண்கள், அழகு வாய்ந்தவன். பற்பம்—தாமரை. பொற்பு—பொலிவு; மிகுதி. 2. நிகர் ஓதா—நிகர் சொல்ல முடியாத; நிகரில்லாத. சான்றோர்க்கு இவன் புகலாவான். பொறுமையுடையவன். அகம்—மனம்.

மனங்கவரும் கட்டழகன் மதனற்கும் மதனனிவன் [யும்
சினங்கொன்னான் சிறிதேனுஞ் சினங்கொள்ளில் தேவரை
இனங்குலையக் கணைபொழியுந்தீரனிவனேந்திழையாய்!
இணங்குலவு நூலெல்லா மிவனோர்ந்தே சிறப்புற்றான் 3

அரசருக்காம் நெறியெல்லா மறக்கற்ற வருந்தகையன்
தெரியலர்தம் முன்நின்றே திறனொடுக்குந் தீரனிவன்
பொருமுனையிற் புக்கிவனேபொருந்தார்படைவீய்ப்பன்
வரிசிலையால்மாற்றார்தம்மனங்குலைக்குங்கோளரியே. 4

தாமரையா மிவன்பாதம் சதிரமைந்த விரலெல்லாம்
காமருவு கற்பகத்தின் முகிழாவ நகநிரையோ
தூமதிபோ லிலங்குவவே சுடர்கொண்டு வயிரம்போல்
தேமியிவன் புறவடியோ தேசொளிரும் கருமணியே. 5

ஊருவிணை யரம்பைத்தண் டன்றிகளிற் றின்கரமோ?
தேறகிலே னுந்திவர நதிதன்னின் சுழலாமோ?
மார்பொருமா மணிமலையோ? மந்தரமோ? கையிரண்டும்
ஊருவரை யூர்வனவே தாமரையே யொக்குமிவை. 6

மேருவெனத் தோளிணையோ விம்மியவே கந்தரமோ
சீரியதோர் சங்காமோ? செழுங்கமுகின் கழுத்தாமோ?
வேரிவளர் தாமரையே யிவன்வதனம் மெல்லியலாய்!
தேரிலவாம் புருவங்கள் நெளிவுற்ற சிலையாவ. 7

---

3. கட்டழகு, வீரம். சினங்கொள்ளான்: கொண்டால், தேவர் கணங்களையும் அழிக்கவல்லான். 4. போர்த்திறல்; தெரியலர்—பகைவர்; பொருந்தார்—பகைவர். 5. பாதங்கள் : தாமரை; பாதத்தின் விரல்கள் : கற்பகத்தின் முகிழ்கள்; பாதத்தின் நகம்: சந்திரன் போல் சுடர் வாய்ந்தது. பாதத்தின் மேற்பாகம் கருமணி போன்றது. 6. ஊரு இணையின் அழகு : வாழைத் தண்டோ, களிற்றின் கரமோ? கொப்பூழ் : நதியில் சுழல் போன்றது. மார்பு : திண்ணியது. கரங்கள் ஊரு, வரையில் நீண்டுள்ளன.

தண்ணீரி லாழ்ந்திலங்குந் தாமரையா மிவன்வதனம்
விண்ணோங்கு கற்பகத்தின் மென்தளிரா மிவனோட்டம்
வெண்ணகையோ நித்திலத்தின் நிரையாகி விரிதருமே
கண்ணிணையோ கஞ்சமல ரேயாவ காரிகையே! 8

முகிலினத்தின் முழக்கெனவே யின்பம்பெய் மொழிவல்லன்
புகரிதுவோ மேனியிலே பொன்னொளியே தானாகும்
இகலிலையா லிவற்கெங்கு மிவன்பாலே யிகல்கொள்வார்
அகைவுறுவ ரிவன்வீர மிதுகண்டா யாயிழையே! 9

கடிபொழில்சூழ் கணபுரத்தென் காகுத்தா! நின்னரிய
வடிவழகுங் குணநலனும் மதிவல்ல மாருதியுன்
துடியிடையாள் திருமுன்னர் சொல்லியதாம்சொல்லிதனை
அடியேனிங் குரைத்தேனோ ரார்வத்தி லம்மானே! 10

## 12. தேவகியின் துதி

பொன்னின் புகரிடையே பூத்த மணியொளியாய்
சின்னஞ் சிறுமகவாய்த் தெய்வத் திருவுருவில்
மின்னும் முடிவேய்ந்து வெள்வளை யாழியோடும்
என்முன் னுறைந்தனையே ஏழுல குக்கிறைவா! 1

பொலியும் மழவினிலே பொங்கப் புகரெங்கும்
நிலவும் படையைந்து மேந்தி நெடுமாலே!
உலவச் செவியின்பா லொல்லார் குழையிரண்டும்
குலவும் முறுவலிதோ கொண்டாய் பெருமானே! 2

---

8. வாய் : தாமரை மலர் போன்றது. ஓட்டம்—உதடு. நகை : முத்து நிரை. கண்கள்: தாமரை போல்வன. கஞ்சம்—தாமரை. 9. குரல் : மேகத்தின் முழக்கு. இகல்—பகை. அகைவுறுவர்—அழிவர்.

1. கண்ணன் அவதரித்தபோது தேவகி வாழ்த்தியது. மகவு—குழந்தை. வெள்வளை—வெள்ளை நிறமுடைய சங்கு. 2. மழவு—இளமை: ஒல்—ஒளி. படை ஐந்து—சங்கு, சக்கரம், வில், கதை, சார்ங்கம்.

மார்பில் மறுவோடு மன்னுங் கவுத்துவமும்
சீரார் துளவத்தார் வேய்ந்து திருவரையில்
ஏரார் கலையுடுத்தென் முன்னே யிணைவிழிகள்
நீரார் கமலம்போல் நிலவ வுறைந்தனையே. 3

ஏழே முலகுக்கு மேந்தால்! இறையாகிக்
கேழில் தனிமுதலாய் நின்றாய் கிளரொளியில்
ஊழி முதலாவா யும்பர் பெருமானே!
வாழி யென்க்காம் மகனாக வந்தனையே. 4

எண்கண் ணிறைவற்கு மேறூர் சடையற்குங்
கண்ணாய்க் குறையெல்லாங் காய்ந்து புரப்பாய்நீ
விண்ணோர்க் குயிராகி வேத விழுப்பொருளாய்
எண்ணுக் கமுதாகி யென்முன் னொளிருவைநீ. 5

நின்றன் தனிப்பெருமை நீயு மறிவாயோ?
பொன்னாம் நகர்க்கிறையாய்ப் பொன்றா மகிமையுடன்
அன்பின் பெருங்கடலா யத்தா! விளங்குவைநீ
என்றன் மடிதோய்ந்தா யெந்நே ரெவராவர்? 6

கொள்வாய் பிறவிபல கூறில் வரம்பிலதால்
வள்ளால்! வரையின்றி யெவ்வோ வடிவேற்பாய்
விள்ளுஞ் சுடரிடையே மேவி மகனெனக்காய்
நள்ளிரவில் நாடியெனை வந்தாயால் நாரணனே! 7

அன்பார்க் குயிராகி யன்னா ரகத்துறைவாய்
அன்பர் நினையின்றிக் கொள்ளா ரகத்தினிலே
நின்பொற் கழலிணையே நேரும் புகலாக
இன்பம் பெறநாடு மெந்தா யுலகெல்லாம். 8

---

3. கலை—உடை. 4. கிளர் ஒளியில்—ஓங்குகின்ற சோதியில். உம்பர்—வைகுந்தம், நித்திய சூரிகள். 5. எண்கண் இறைவன்—பிரமன். ஏறூர் சடையான்—சிவன். ஏறு—இடபம். கண்ணாய்—நாயகனாய், முதல்வனாய். விழுப்பொருள்—சிறந்த பொருள். பொன்னாம் நகர்—வைகுந்தம் 7. வரம்பு—எல்லை; எந்த வடிவம் என்ற நியதி இல்லை விள்ளும்—மலருகின்ற. 8. அகம்—உள்ளம்.

பொல்லான் புவிபாலன் போன்றாப் பகையிலுனைக்
கொல்லுங் குறிப்பினனாற் கோல வடிவிதனை
அல்ல லணுகாமல் அத்தா! மறைப்பாய்நீ
மல்லல் மழவாகி யென்றன் முலையுண்பாய். 9

கானார் பொழில்தழுவுங் கண்ண புரத்தமுதே!
மானேர் விழியாளுன் வாமப் புகர்கண்டு
தானோர் களிப்புற்றுந் தளரா நடுக்கத்தால்
மானப் பரிவினிலே யேத்தும் வகையிதுவே. 10

## 13. யசோதை யழைத்தல்

மாலைப் பொழுதிது வாடுமா லுன்வயிறு
பாலகர் தம்முடன் பாடியில் நீதிரிந்தாய்
கோலனே! கண்டுயிலக் கொள்ளுவை கொட்டாவி
மாலனே! வந்தென் முலையுண்பாய்
மணிவண்ணா! வந்தென் முலையுண்பாய். 1

வந்து வளைதரும் பிள்ளைகள் தம்முடனே
தந்தியின் கன்றெனச் சாலத் திளைத்தாய்நீ
அந்தோ! பசியு மறிகிலை யச்சுதனே!
எந்தாய்! வருவாய் முலையுண்ண
இறைவனே! வந்தென் முலையுண்பாய். 2

எண்ணில தீம்புகள் செய்தனை யென்முன்னே
நண்ணின ராய்ச்சியர் யாவும் நவின்றனரே
கண்ணே! களைப்புற்றாய் நானெதுங் கூறகிலேன்
அண்ணலே! வந்தென் முலையுண்பாய்
அமுதனே! வந்தென் முலையுண்பாய். 3

---

9 புவிபாலன்—அரசன், கம்சன். 10. போன்றா—குறையாத, அழியாத. மழவு—குழந்தை.

1. (யசோதை கண்ணனை அழைத்தல்.) பாடி—ஆயர் பாடி. கோலன்—அழகுடையவன் 2· தந்தி—யானை. வளைதரும்–சூழும். ஆய்ச்சியர் நண்ணினர், நவின்றனர்.

நாரா குறியினில் வைத்த நறுவெண்ணெய்
ஆர வயின்றனை யந்தோ களவினிலே
நாரா யணனே! சினந்தும் நவிலகிலேன்
ஆரா வமுதா முலையுண்பாய்
அத்தனே! வந்தென் முலையுண்பாய். 4

பூதனை தன்முலை போகமே யென்றுண்டாய்
தீதெதுங் கண்டிலை தெய்வத் திருவருளால்
பாய்தரும் பாலென் பணைமுலையிற் பாய்ந்துநீ
மாதவா! வந்தென் முலையுண்பாய்
மாயவனே! வந்தென் முலையுண்பாய். 5

வானி லிளம்பிறை வந்த துனக்காகக்
கோனே! இதுதனைக் கொள்வாய் விளையாட
ஏனோ விரைகிலை எங்கள் குலவிளக்கே!
ஆனாய்! விரைவாய் முலையுண்ண
அன்பனே! வந்தென் முலையுண்பாய். 6

கஞ்சன் புணர்த்த கபடப் பெரும்பேயோ
வஞ்சம் விளைக்கவே வந்ததா லந்தியிலே
நெஞ்சோ நெகிழுமா லென்நா னினிச்செய்வேன்?
அஞ்சன வண்ணா! முலையுண்பாய்
அச்சுதா! வந்தென் முலையுண்பாய். 7

உந்தி மலரானு மொண்பிறைச் சடையானும்
எந்தா யெனப்போற்று மேற்ற முனக்கேகாண்
வந்தாய் மகனாக என்சொல் மகிழ்ந்தேற்பாய்
வந்தென்பா லன்பா! முலையுண்பாய்
வாமனனே! வந்தென் முலையுண்பாய். 8

---

4. அயின்றனை—உண்டாய். முலை, ஆரா அமுதமாய் உண்பாய். 5. பாய்ந்து—விரைந்தோடி வந்து. 6. ஆனாய்—ஆனை போலச் செருக்குடையவனே! 7. புணர்த்த—ஏவிய. 8. உந்தி மலரான்—பிரமன். ஒண் பிறைச் சடையான்—சிவ பெருமான். வந்தாய் மகனாக நான் பெற்ற பேறு இதுவாம். வாமனனே—வாமனனாய் முன்னம் அவதரித்த பெருமானே!

நின்னேர் மதலையர் நித்திரை கொண்டனர்
என்றன் மடியினி லிப்போ துறங்குவைநீ
இன்ப விசையிது தாலாட் டிசைப்பேன்நான்
அன்பனே! வந்தென் முலையுண்பாய்
ஆருயிரே! வந்தென் முலையுண்பாய். 9

ஆலந் தளிரினி லன்றொருகா லோரூழி
கோலக் குழவியாய் கண்டுயில் கொண்டனைநீ
சீலனே! சௌரிப் பெருமானே! செம்மணியே!
மாலனே! வந்தென் முலையுண்பாய்
மாதவனே! வந்தென் முலையுண்பாய். 10

## 14. ஆய்ச்சியர் காதல்

காவலர்க்குங் காவலனே! கணபுரத்தென் கருமணியே!
பூவலரும் பொழினிலே பூவையர்க ளுனைத்தேடி
ஆவலிலே யலைந்தலைந்து காணாமல் லல்லலிலே
கூவினரா லுளங்குலைந்து குமுறலெதிர் பொங்கிடவே. 1

பன்னங்கள் படர்ந்தடரப் பச்சைவணப் பட்டுடுத்து
மன்னுமரும் புகரோடு வானுயருந் தருவினங்காள்!
அன்பனெமக் காருயிரா மாயர்கோ னிங்குளனோ!
என்னிதுதா னிக்கணமே யெங்கட்குச் சொல்லுவிரோ? 2

குரவங்காள்! வகுளங்காள்! கொடியினங்கா ளசோகங்காள்
சுரபுன்னை காளெமக்குச் சொல்லுவிரோ முகில்வண்ணன்
கரநான்கு கற்பகம்போற் பணைத்ததனிக் காளையிவன்
வருவானோ மகிழ்ந்திங்கே எமைக்காண வனமிதிலே! 3

---

9. மதலையர்—குழந்தைகள். 10. குழவி—குழந்தை.

1. சவுரிப் பெருமான் முன்பு கண்ணபிரானாய் அவதரித்த போது ஓரிரவில் நிகழ்ந்தது. பொழிலில் கண்ணபிரானைக் காணாமல் பெண்கள் தேடி ஆங்கு மரங்கள் முதலியவற்றை "கண்ணன் இங்குளனோ?" என்று வினவினர் காவலர்—தேவர்களின் தலைவர்; பிரமன், இந்திரன் முதலோர்.
2. பன்னம்—பர்ணம், இலை. இலையடர்ந்த நெடுமரங்கள் பச்சை நிறப்பட்டு உடுத்தன போல் விளங்கின.

தளங்குலவுந் துளவமெனுந் தருணியளே! மாலோன்ற
னுளங்கவரு முத்தமியே! உற்றானோ அவனிங்கே?
வளங்குலவு வனமாலை மார்பினனிங் கெம்மோடும்
நலங்குலவ வருவானோ? நவிலுவையோ நங்காய்நீ? 4

மாலதியே! மல்லிகையே! மனங்கவருங் கருமுகையே!
மாலவனுக் கென்றேநீர் மலர்வீரால் மாமாயன்
கோலமெலா முமக்கேயோ? எமக்கிலையோ கூறுவிரே
சீலனிவன் திருமேனிச் செவ்வியெமக் காகாதே? 5

யமுனைமணற் குன்றினங்காள்! யாதவனா மிளஞ்சீயம்
இமையோர்தங் குலமுதல்வ னெமக்கின்றி யுமக்கேன்றே
அமையுவனோ? அவனின்றி யுயிர்வாழா அடியோங்கள்
குமைவுறுவோ மவற்கிதுதான் குறிக்கொண்டு கூறுவிரே. 6

மானினங்காள்! மணிவண்ணன் மதுசூதன் வேய்ங்குழலின்
கானமெலாம் நுகர்ந்திங்கே களிப்பீராற் காமனிவன்
கானிதனி லெங்குற்றான் கருணையுட னிதுகூறி
ஆனதுணை யெமக்காவீர் ராருயிரு மாவீரே. 7

ஆலுமயிற் கூட்டங்காள்! அரவிந்தக் கண்ணன்றன்
கோலமெலா முமக்கேயோ? கோவிந்தன் குழலூதி
மாலிவனோ எங்குற்றான்? வரைவீரோ? வரையீரோ?
ஏலுமொரு பேரின்ப மிவனணைந்து பெறுவோமோ? 8

வண்டமருந் தாமரைகாள்! மாலோன்றன் மதிமுகமே
கண்டுமனங் கருகியதோ? காமற்குங் காமனிவன்
தண்டுளவத் தாரானை யாங்காணச் சாற்றுவிரே
விண்டுவெனும் மேலனிவ னிங்குளனோ விளம்புவிரே. 9

---

4. துளவம் ஒரு பெண் போல் கருதப்படுகிறது. தளம் குலவும்—தளங்கள் அடர்ந்த. 5. யமுனை மணற் குன்றுகளிற் பெருமான் விளையாடுவான். குமைவுறுவோம்— துன்பப்படுவோம். 7. காமன்—காமனைப் போல் அழகுள்ளவன். 8. அரவிந்தம்—தாமரை. ஏலும்—ஏற்றதான. 9. இரவில் தாமரை கூம்பும்; சந்திரனைக் கண்டு கூம்பும்; கண்ண பிரானது முகம் சந்திரனை யொக்கும். ஆதலால் கூம்பியது என்பது கருத்து. அல்லது வெள்கிக் கூம்பியது என்னுமாம்.

நிலமெங்கும் பாயவென நிலவடர்க்கும் மாமதியே?
நலமெங்கட் களுள்செய்யும் நாரணனைக் காட்டுவையோ?
வலங்கொள்ளும் நேமியனைக் காட்டாமல் வானிதனில்
சலங்கொள்ளல் தகவில்லை சாற்றுமிது கேட்பாயோ? 10

## 15. குரவை

வாழி முல்லைய ரன்ப! மைந்தனே!
ஆழி முன்துயின் றவனி வந்தனை
ஆழி சங்கிவை யங்கை யேந்திநீ
கேழிற் சோதியின் கிளர்வி லுற்றனை!
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 1

பொங்க ரெங்கணும் புரிவில் நின்றனம்
எங்க ளிடையிடை யெங்ஙன் நின்றனை?
சங்கு சக்கர மேந்து சோதியே
திங்க ளின்சுடர் தெரிய லாயதே.
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 2

பரம! நின்கரப் பங்க யந்தனால்
பரிவி லெங்கரம் பற்றி நின்றனை
பெருகு மின்பமோ பெருந்தி வந்தினிற்
பரவு மின்பினிற் பரம தாகுமே.
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 3

---

10. இரவில் சந்திரன் தோன்றும் போது எங்கும் நிலவு வடரும். வலக்கையில் சக்கர மேந்தியவன். சலம் கொள்ளல்—சஞ்சரித்தல். அன்றிக் கபடமாகக் காட்டாதிருத்தல்.

1. குரவையில் ஆய்ச்சியரின் இடையிடையே கண்ண பிரான் பலபல வடிவத்தில் கரங்கோத்து நின்றான். ஆழி—கடல். 2. பொங்கர்—பொழில். பெருமானது முகம் சந்திரன் போலிருப்பதால், இவன் கொண்ட பல வடிவங்களிலும் முகம், சந்திரனால் ஆன மாலை போல் விளங்கியது. 3. பெருந் திவம்—பரமபதம்.

விரவி வந்ததால் வேரி யிவ்விடம்
நறும லர்த்துழாய் நாற்ற மேகொலோ?
பரம! நின்னகம் படிந்த வாசமோ?
அறிய கிற்கிலோ மமலை கேள்வனே!
    எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
    செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 4

மரைநி கர்த்தநின் வாயின் செவ்வியில்
விரியி தழ்களும் மென்ன கைத்தரம்
பரவு மோர்கொடிப் பவளந் தன்னிலே
நிரைய டர்த்ததாம் நித்தி லங்கொலோ?
    எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
    செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 5

மால! நின்னகம் வாய்ந்த பூணினம்
கோல்வ ளர்க்குமோர் குரைக டல்கொலோ?
ஆலு மாமணிக் குழைக ளச்சுதா!
நீல வானிலே நிமிருமின் கொலோ?
    எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
    செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 6

கூடி யெம்முடன் குலவி யன்பிலே
பாடி யாடுமோர் பாங்கி தோசொலில்
தேடு தற்கிலாத் தேற லாகுமே
தேடி யெம்மிடை நிற்கும் நேசனே!
    எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
    செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 7

---

4. எங்களிடையில் வீசும் பரிமளம். உன்னுடைய மேனியி லுள்ளதோ? அல்லது திருத்துழாயின் பரிமளமோ? அமலை—பிராட்டியார். 5. வாய் : தாமரை போன்றது; விரிந்த இதழ்கள் போல்வன உதடுகள். மெல் நகை தரம் : முறுவலின் அழகு ; பவளக் கொடியில் முத்து படர்ந்தது போலாம். உதடுகள் பவளம், பற்கள் : முத்து. 6. பூண்—ஆபரணங்கள். கோல்—அழகு. மேனி கடல் போல; அணிகள் அலைபோல 7. எம் முடன் பழகுவதால் நாங்கள் பெறும் இன்பம் தேன் பருகு வதைப் போன்றதாம்.

மலர்க ளிப்பொழில் மல்கி யெங்கணும்
நிலவ வாசமே நெடுக வீசுவ
மலய மாருதம் வந்து சூழ்ந்ததால்
உலைவ தின்றியே ஊர நாற்புரம்.
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ!
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 8

அருக ணைந்ததால் யமுனை யாறிதோ
திரையின் சீகரம் தூவ நின்கழல்
இரவு தன்னையு மிகந்து பொங்கரில்
பறவை யின்கணம் பாடி யாலுமே.
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 9

கார டர்பொழில் கணபு ரத்துறை
நார ணாமுன மாயர் நங்கையர்
மூரல் மொய்த்ததோர் பொங்கர் தன்னிலே
ஆர்ந்து நின்றனை யலகில் மூர்த்தியாய்.
எல்லே! இவ்வரு ளெங்ஙன் வந்ததோ?
செல்வ! நின்னருள் செப்ப வல்லதோ? 10

## 16. அக்ரூரன் ஆர்வம்

கரவே வடிவாங் கஞ்சன் தனக்காகித்
திரியு மெளியேன் செய்த தவமிதுவோ?
கருணைக் கடலாங் கண்ணன் மணிவண்ணன்
அருளே யணித்தா மரிதாம் நலனிதுவே. 1

---

8. மலர்களின் பரிமளம்; தென்றல். உலைவு—அழிவு. 9. யமுனை யாறு பெருமானின் திருவடிகளில் நீர்த்திவலை களைத் தூவுகிறது. சீகரம்—நீர்த்துளி. இரவில் தூங்கும் பறவைகள், துயில் மறந்து பாடுகின்றன. 10. நங்கையர் மூரல் மொய்த்த—ஆய்ச்சியரின் புன்முறுவலே அடர்ந்த.

1. கஞ்சனது ஆணையால் கண்ணபிரானைக் காணச் செல்லும் அக்ரூரன், தான் பெறக்கூடிய இன்பத்தைத் தனக் குள் சொல்லிக் கொள்ளும் வகையில் இப்பதிகம். கரவு—வஞ்சகம்.

அயனோ டரனு மடிதொழு மோர்சோதி
மயனாம் பரமன் மண்ணிதி லாயர்தம்
வயமாய் வளர்வான் மாணடி தாழ்ந்தேத்தி
உயவாம் நலனது பெற்றே உயர்வேனே. 2

முகுந்தன் முகமும் மூரலு மன்புவளம்
மிகுந்து விளங்கும் விழியுந் தவத்தினர்தாம்
உகந்து பருகு மொளியா ருருவிதுவும்
நுகர்ந்து விழியிணை நோன்பெனத் தான்மகிழும். 3

பாரிதன் பாரங் குலைந்திடப் பார்வந்த
காரடர் வடிவனைக் கற்பகத் தீங்கனியை
நீரினை யேற்று நெடுவான் நிமிர்ந்தவிவன்
சீரினன் தேவன் திருவடி யிற்படிவேன். 4

கஞ்சற் குரியவ னென்றெனைக் கண்ணனிவன்
நெஞ்சி லிறையும் நினையான் தடங்கொண்ட
கஞ்ச மலராய் விரிதருங் கண்ணாலும்
அஞ்சொல் வளனா லழைப்ப னிவனெனையே. 5

வாவென் றழைப்பன் வாகு வளைத்திவனோ
ஆர்வி லணைப்பனா லாங்குறை யாயர்க்கு
மேவலி லென்றனைக் காட்டுவன் மேலுமிவன்
ஆவலி லாசனத் தென்னை யமர்த்துவனே. 6

விரையார் துளவம் புனையும் விமலனிவன்
குரைகழல் தன்னிற் குனியு மெளியேனை
அரிதி லணைக்கும் வினவுவ னென்குசலம்
அருகி லுறைவார்க் குரைப்பனா லென்பேரே. 7

---

2. ஆயர் வயமாய்—ஆயர்களுக்கு உரியவனாய். 3. பெருமானது பேரெழில். நோன்பு—தவம்; தவப்பயன். 4. நீரினை ஏற்று—வாமனனாய். 5. என்னை இகழமாட்டான். கஞ்ச மலர்—தாமரை மலர். கண்ணாலும் கையாலும் என்னை ஏற்பன். கண் : காட்டுவது ஆதரம். 6. வாகு—புயம். 7 என்னை அணைப்பன்; க்ஷேமமா என்று கேட்பான். அரிதில்—அருமையாக.

மேனி யழகினில் மெய்ம்மறந் தாவலிலே
கோனவன் முன்னே குனியு மெளியேனைத்
தேனனை சொல்லால் தெளிவிலென் பேர்தனையே
தானுகந் தோதி யழைப்பன் தகையனிவன். 8

தனக்கா மன்பர் தனமெனத் தான்கொள்வான்
தனக்கெவ ரென்றுமே சார்பெனக் காணானால்
தனக்காம் பகையொடு பற்றுமி வற்கில்லை
எனக்குமி ராகி யெனையிவ னாட்கொள்வான். 9

கண்ண புரத்துறை கண்ணா! உனைமுன்னம்
நண்ணுங் குரிசிலக் ரூரன் நசையினிலே
எண்ணுக் கமுதென வேற்றுக் களித்துகந்த
வண்ணம் வரைந்துளன் வானா ரமுதெனவே. 10

## 17. மாலாகாரர்

வாம வடிவந் தன்னோ டிறைவனே!
தாமம் புனைவோன் தாமம் புகுந்தனை
சேம மிதுவாம் வரவெனத் தேறி
காம மடர்தரக் கண்டவ னேத்துவனே. 1

தேடித் தெருவினில் தேவ ரிருவீர்
நாடி நடந்தீர் நாயேன் குடில்பால்
தேடற் கரிதாம் செம்பொரு ளாவீர்
பாடி நுமதருள் பாதம் பணிவேன். 2

---

8. "அவாக்யநாதர:" (பேசாதவன், ஆதரங் காட்டாதவன்) பெருமான். இவனும் என்னைப் பேர் சொல்லி அழைப்பான். 9. இவனுக்கு இவனன்பரே தனம்; பற்றும் பகையும் இல்லை. 10. குரிசில்—சிறந்தவனாகிய அக்ரூரன்.

1. மதுரையில் கண்ணபிரானுக்கும் பலராமனுக்கும் மாலை வழங்கியவர், மாலாகாரர். இவர் இவ்விருவரையும் ஏற்ற வகை இப்பதிகத்திலுள்ளது. வாம—அழகிய. தாமம்—மாலை, வாழுமிடம். காமம்—விருப்பம். 2. செம்பொருள்—கடவுள். இருவீர்! விளி; இருவராக வந்தவர்களே!

அருளே பொழிந்தீ ரடியே னுழியே
பொருளா மதித்தடி யேன்முனர் போந்தீர்
பரிவுடன் செய்வதாம் பூசனை யென்பால்
பெரிதெனக் கொள்ளுவிர் புன்மை யெனினுமே. 3

உலகிற் பிறந்தீ ருயிர்கள் நலமுறப்
பொலிதரு மன்பிற் பொருவிலா மேலீர்!
சலமில ராகித் தமக்காம் பகையும்
குலவிட நட்புங் கொளகிலிர் நீவிர். 5

எளியே னுமக்குச் செயவல ஏவுவிர்
தெளிதி லுரைப்பீர் திவத்துக் கிறைவீர்!
எளியே னளிக்கு மிலம்பகந் தம்மைக்
களியே மனத்துக் கனிதர வேற்பீர். 5

நீலமு முற்பலம் நெய்தலுந் தாமரை
கோல மடர்தரக் கோத்தவிம் மாலையைச்
சீல மறியாச் சிறியேன் வழங்குவன்
பாலின் வணனே! பரிவினி லேற்பாய். 6

மல்லிகை தன்னொடு மௌவலும் மாதவி
மல்கிடக் கோத்ததாம் மாலை யிதுதனை
எல்லே! ஆர்வி லெளியே னளிப்பனால்
வல்லவர் மன்னா! வனைவாய் மகிழ்ந்தே. 7

பற்ப நாபநின் பாதத் திமையோர்
கற்பக மாமலர் தூவுவ ராங்கே
அற்ப மலரிவை தூவுவ னடியேன்
பொற்பெனக் கொள்வாய் புனித வடிவனே! 8

---

3. புன்மை—அற்பம். பூசனை—பூசை. 4. சலம்—வஞ்சகம். உங்களுக்குப் பகைவரு மில்லை, நண்பரு மில்லை. பொலி தரும்-விளங்குகிற. 5. இலம்பகம்—மாலை. 6. பலராமனுக்கு அளிக்கும் மாலை. உற்பலம்—செங்கழுநீர் பாலின் வணனே!—பால் போல் வெளுத்த மேனி வாய்ந்தவனே. 7. வல்லவர்—இடையர். மன்னா—இறைவனே! 8. பற்பம்—தாமரை. ஆங்கே—வைகுந்தத்தில். பொற்பு—அழகு, சிறப்பு.

எப்பிறப் பேனு மெளியே னுனதாம்
பொற்பதம் போற்றிடும் புந்தியர்க் கன்பனாய்
செற்றமே காண்கிலாச் சிந்தைய னாகவே
எற்கருள் செய்வா யெம்பிரான் கண்ணனே! 9.

நின்திரு நாமமும் நின்னடி யார்தமின்
பன்னரும் புகழுமே பாடிநான் வாழ்தர
என்னருந் தலைவனே! ஈந்தருள் செய்வாய்
பின்னெது மோரேன் பெரிதெனக் கோவே! 10

## 18. அர்ச்சை : எளிமை

நிலையே லில்லா நெஞ்சுடையேன்
நின்னை நினைக்கும் வழியுண்டோ?
கலையும் நெறியும் நானறியேன்
கன்மஞ் செய்யேன் புந்தியினால்
சலியா துள்ளந் தனைநிறுத்திச்
சரணா நின்னை வணங்ககிலேன்
குலையா வன்பாற் பத்துடையார்
குழுசேர் கண்ண புரத்திறைவா!

உன்னைக் காணும் வேட்கைத்தனை
யுள்ளந் தன்னிற் கொண்டாலும்
முன்னம் பாரில் நீகொண்ட
மூர்த்தந் தம்மைக் காண்பேனோ?

---

9. செற்றம்—பகை. 10. ஓரேன்—தேவையென நினைக்க மாட்டேன்.

1. அர்ச்சைநிலை எவ்வாறு எளிது என்பது இப்பதிகத்தில் விவரம் பெறும். பெருமானைப் பெறுவதற்கு கர்மம், ஞானம், பக்தி இவை வேண்டும். இவை எனக்கில்லை சரணா—புகலாக. சரணாகதி இறுதி உபாயம்; இதுவும் நான் அறியமாட்டேன். 2. உன்னைக் காண வேட்கை நிகழ்ந்தாலும் பயனில்லை. முன்னம் கொண்ட அவதாரங்கள் இப்போது காலத்தால் கை கழிந்தவை. வற்றிய ஆற்றில் நீருக்குப் போவாருண்டோ? அவதாரங்கள் வற்றிய ஆறு போல்வன.

மன்னி வெள்ளங் கரைபுரண்டு
வற்றும் நதியாற் பயனுண்டோ?
கன்னல் வளஞ்செய் வயல்சூழக்
கவினார் கண்ண புரத்திறைவா! 2

காதல் வாய்ந்துன் னெழிலுருவைக்
காண வேண்டிப் பாற்கடலில்
ஓதந் தன்னிற் காண்பேனோ!
ஓங்கத் தாபங் கொள்ளுங்கால்?
காதந் துளைத்துப் பாரினிலே
தண்ணீர் காண்ப தாவதுவோ?
கோதி லன்பர் குலங்குலமாக்
குலவுங் கண்ண புரத்திறைவா! 3

ஆவல் மிக்குன் னடியிணையே
அடியேன் காண நினைத்தாலும்
மூவாத் தேவ ரினஞ்சேரும்
மூதாம் நகரிற் காண்பேனோ?
நாவே துடிக்கத் தாகத்தால்
நாடி யண்டத் தப்பாலே
மேவித் தண்ணீர் பருகுவதோ?
மேலோய்! கண்ண புரத்திறைவா! 4

ஆறோ வடிந்து மண்ணடரும்
காலத் ததனுள் ளூற்றினிலே
ஊறுந் தண்ணீ ருரெங்கும்
ஊட்டித் தாபம் தகையாதோ?

---

3. பெருமானைக் காண வேண்டும் என்ற காதல், தாகம் போல்வதாகும். இப்போது நமது தாகம் தீர்ப்பதற்காகப் பாற்கடலுக்குப் போக முடியாது. ஓதம்—வெள்ளம். வியூக நிலையில் பெருமானை நாம் காண முடியாது. அல்லது பூமியில் துளைத்துப் பெறுவதுவோ? அந்தர்யாமி நிலையும் இவ்வாறே யாம். 4. பெருமானைக் காண ஆசை மிகுந்தால், இப்போதே வைகுந்தம் போய்க் காண முடியுமோ? மூவா—மூப்பில்லாத. இது எவ்வாறு எனில், தாகத்தால் நா துடிக்கும்போது அண்டத்தப்பாலுள்ள பெருங்கடலுக்குப் போவதோ?

மாறு குலைத்தென் மனத்தினிலே
 மாலே! உன்னை நினைத்தாலே
தேறிப் புகலா யுன்கழலே
 சேர்வன் கண்ண புரத்திறைவா! 5

இயல்பி லுனக்காம் நலனெல்லா
 மென்று முயர்ந்து குறையாமல்
நயனார் ஞானம் வலிமையொடு
 நலுங்கா வீர மனையவெலாம்
வயமா வடர்வ நின்பாலே
 மாலே! பூரண னாவாய்நீ
வயலார் செந்நெல் வளம்பரவி
 மலியுங் கண்ண புரத்திறைவா! 6

புகரே பொழியும் மாணிக்கம்
 பூபன் முடியிற் பொலிவதுதான்
பகர்நர் கையிற் படிந்தாலும்
 பங்க முறுமோ வொளியாலே?
நிகரில் ஞானச் சுடரனைய
 நிலத்தில் நீவந் துற்றிடினும்
மிகுமாற் சோதி மேன்மேலும்
 மேலாங் கண்ண புரத்திறைவா! 7

அண்ட மொடுக்கு மருந்திறலா
 னரச னிருளில் நகரினிலே
கொண்ட வேடத் தேகிடினும்
 கொள்ளுந் திறனுங் குலைவதுவோ?

---

5. மாறு—உன்னைக் காணாதவாறு வெறுப்பு. 6. அர்ச்சையில் உறைவதால் ஞானம், வலிமை, வீரம் போல்வன குறைவனவல்ல. வயமா—நின்வசமாக, வலிவுடன். அர்ச்சை நிலை பூர்ணம் என்பர்; எல்லாக் குணங்களும் குறையாமல் அடர்ந்திருப்பதால். 7. ஞானம் முதலியன குறையமாட்டா. பூபன்—மன்னன். மாணிக்கம் அரசன் முடியிலிருந்தாலும் விற்பவன் கையிலிருந்தாலும் புகரோடே இருக்கும். 8. அரசன் மாறு வேடங் கொண்டு இரவில் நகரில் திரிந்தால், அவனது வீரம் குறையுமோ?

அண்டக் குலத்துக் கோரரசே!
ஆர்வி லிங்கே நீவரினும்
மிண்டுந் திறனே மேலோங்கும்
மேலோய்! கண்ண புரத்திறைவா! 8

ஞான வொளியாம் மேதையெதும்
நவிலா தவையில் நின்றாலும்
ஞானக் குறைவென் றெவரேனும்
நகைப்ப துண்டோ வோராமல்
ஞானச் சுடரே! வானத்தும்
ஞாலத் தெங்கும் வளங்கொள்வாய்
மானேர் விழியாள் மாபுல்கும்
மார்பா! கண்ண புரத்திறைவா! 9

விண்ணுக் கிறைவன் நீயேதான்
வியூக மூர்த்தி நீயேதான்
கண்ணார் கடலில் பாம்பின்பால்
காணும் பெருமான் நீயேதான்
மண்ணில் முன்னம் வந்துதித்த
மூர்த்தி மாலே! நீயேதான்
பண்ணார் சாம வடிவாய
பரமா! கண்ண புரத்திறைவா! 10

## 19. தலத்தின் மேன்மை

கண்ண புரத்துறை கண்ணனே! நின்புரம்
புண்ணிய மேழாற் பொலியும் புரமாம்
மண்ணில் பிறிதெதும் மாண்பிதே வாய்ந்தில
தெண்ணுவர் மேலோ ரிதுதமக் காமென. 1

---

9. இங்கு வந்து அவதரித்ததால் ஞானம் குறையாது.
10. இங்கு உறையும் பெருமான், எல்லா நிலைகளிலுமுள்ள மூர்த்தியே. பண்ணார்.... வடிவாய: "சாம வேத கீதனே!" (திருமழிசைப் பிரான்).

1. இது ஸப்த புண்ணியத் தலம். ஏழு புண்ணியங்களால் சிறந்தது. இது தமது தவத்திற்கேற்றதாக மேலோர் எண்ணுவர். மாண்பு—பெருமை.

க்ஷேத்திர நாமமுங் கிளர்வின் வனங்கொள
வாய்த்ததாம் நாமமும் மால! நின் நாமமே
நேர்த்தியாய் நின்புர மேற்குமோர் நாமமும்
சீர்த்தநின் நாமமே தேவனே! மாதவா! 2

உன்ற னுறைவிதோ வுத்பலா வதகமாம்
உன்ற னுறைவில் முனிவர ரூணொழித்
தென்பே மயமதா யிங்கே யுறைவர்
உன்ற னுயிரென வுன்னுவை யிவரை நீ. 3

புனிதப் புனல்மலி பொய்கை யிதுவோ
அனைத்துப் புனல்கட் கிருப்பிட மாகும்
நினைத்தற் கரிதாங் கரையில் நெறிவல
முனிவர் தவந்தனில் முன்ன ரமர்ந்தனர். 4

கங்கை யினும்மலி காவிரி பாய்வதால்
பொங்கும் பொலிவே புரமிதிற் கீழ்த்திசை
வங்கக் கடலுன் வளநகர்க் கெல்லையாம்
தங்கு மிதனுளே சைலமை நாகமே. 5

இந்நலந் தம்மா லிறைவனே! இத்தலம்
பன்னரும் பாவன மாகப் பணிப்பரால்
நின்னுடை மந்திர சித்திதான் நேருமால்
இந்நகர் தன்னி லிமையவர் கோனே! 6

மந்திர சித்திதான் வாய்ந்திட ஏற்றதாம்
சிந்தனை செய்வதே யென்பர் தெருளோர்
தந்திர நேம மினையன நீத்தே
முந்தியிவ் வெட்டெழுத் தோதுவர் மூத்தோர். 7

---

2. மூன்று புண்ணியங்கள்: கிருஷ்ண க்ஷேத்ரம், க்ருஷ்ணாரண்யம், க்ருஷ்ணபுரம். 3. விமானம்: உத்பலா வதகம். ஊண் ஒழித்து என்பே மயமதாய்—உணவில்லாமல் என்பு மயமாக. 4. புஷ்கரிணி: தீர்த்தங்கள் யாவும் இங்கே விளங்குவன 5. ஆறாவது புண்ணியம்: காவிரி யாறு; ஏழாவது கீழ்த்திசைக் கடல். இது க்ருஷ்ண புரத்திற்கு ஓர் எல்லை. 7. இந்தப் புண்ணியங்களால் இங்கு மந்திர சித்தி பெறலாம்; நியமமின்றிச் சிந்தனை செய்தல் போதும்.

அரங்கம் முதலா மருந்தல மெட்டினுள்
வரங்கொள் மனுதனின் வாய்ந்ததொன் றொன்றாய்ப்
பிறங்கு மெழுத்தாய்ப் பெருமான்! உறைந்திவண்
வரங்கொளும் மந்திர மேனிய னாயினை. 8

இந்திர னித்தலத் தூன்றினன் வேள்வியில்
சந்திரன் கோளோ தவிர்ந்ததுன் முன்னரே
செந்தமிழ்ப் பாண்டியன் சென்னி யனையார்
மந்திர மேற்றதும் மாலுன் வயினே. 9

சென்னியிற் கேசம் செறிந்து வளர்ந்ததும்
அன்ப னளித்த வடிசி லயின்றதும்
நின்ற னருளால் நினைப்பரும் நீர்மையால்
பன்னி யிவையே பகருவர் சான்றோர். 10

## 20. அர்ச்சைத் தலங்கள்

முந்தையாய் மூவுல குந்தொழும்
தந்தையை யாதியைத் தாதர்தஞ்
சிந்தனை தன்னைத் திருவரங்கம்
வந்துறை மாலினை மாதவனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரத்தினிலே. 1

ஓங்கலைப் பேர்த்தன் றுயர்த்தவனை
பாங்குறப் பத்தர்தஞ் சிந்தையிலே
தேங்கிடுந் தேனைக் கரும்புதனை
வேங்கட வெற்பின் விளக்கொளியை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரத்தினிலே. 2

---

8. திருவரங்கம் முதலிய சுயம்வ்யக்தத் தலங்களில் திரு வெட்டெழுத்தில் ஒவ்வோர் எழுத்தாய்ப் பெருமான் விளங்குவான். இங்கு முழு மந்திர மேனியன்.

1. சுயம் வ்யக்தத் தலங்களில் உறையும் பெருமானே இங்குறைபவன். 2. ஓங்கல்—மலை. "குன்ற மேந்திக் குளிர் மழை காத்தவன்...பரன் சென்று சேர் திருவேங்கடம்."

ஒட்டிப் பரவையி னோதத்தில்
முட்டித் தரணியைத் தன்கொம்பி
லிட்ட வராகனை யென்னுயிரை
முட்டத் துறைதரு மூர்த்தியினை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 3

வானோர் பருகிடும் வானமுதைத்
தேனார் குழலியர் தேவியர்தம்
மானார் விழியெழில் மாந்தியுறை
வான மலையாம் மணியொளியை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 4

வையக முய்த்திட வந்தவனை
ஐயனை யாரண மாமொளியைத்
தெய்வப் பொழிலிற் சிறந்துறையும்
நைமிச நம்பியை நாரணனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 5

கதியெனத் தன்னைக் கருதுமவர்
பதமுறச் சீரிற் பகர்தரவென்
றிதமுட னெட்டெழுத் தோதிடவே
வதரியில் மன்னும் மணியொளியை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 6

குட்டக் கரையினிற் குஞ்சரமுன்
பட்டதோர் துன்பந் தொலைத்தவனை
மட்டவிழ் தாமரை மல்கிவனை
புட்கரப் புனலுறை புங்கவனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 7

3. முட்டம்—ஸ்ரீமுஷ்ணம். 4. வானமலை—வானமாமலை.

வானர விற்றுயில் மாதவனை
கோனட னரம்படை யச்சுதனைக்
கானதன் மேனிக் கவினுருவைச்
சாளக் கிராமத் தலத்தினனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 8

மெய்யர்தம் நெஞ்சினில் மேவுநனை
மையடர் நீர்மலை மன்னவனைப்
பையர வின்மிசைப் பாசமுடன்
மெய்ய மலையுறை வேதியனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 9

மாணுயர் சிங்க மணியுருவைச்
சேணுயர் தெய்வக் கடிகையனை
வாணகை மாமகள் நாயகனை
நாண்மதி யாம்பதி நாரணனை
அண்ணலை யென்னுயி ரச்சுதனைக்
கண்டது கண்ண புரந்தனிலே. 10

## 21. அர்ச்சை—குணங்கள்

அன்ப ருருச்சித் துய்வதே யாகுமோர்
இன்ப மெனக்கொள் ளிறைவனே! நின்வடி
வன்பர் தமக்கே யமையு மவருளம்
நின்பத மாகும் நிகரிலா நாதனே! 1

8. கோள்—மிடுக்கு. 9, 10. திருமங்கையாழ்வார், இத் தலத்துடன் இணைத்துக் குறித்தருளிய மற்றைத் தலங்கள்: திருநீர்மலை, திருமெய்யம், திருக்கடிகை, தலைச்சங்க நாண் மதியம். மெய்யர்—முனிவர். மை—மேகங்கள். வாணகை வாள்—ஒளி. நகை—மென்னகை.

1. அர்ச்சையில் பெருமானது அரிய குணங்கள் இப் பதிகத்தில் விவரிக்கப்படுகின்றன. இவன் ஏற்கும் திருமேனி அன்பருக்காக: "பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே."

பத்த ரமைக்கும் வடிவிற் படிவைநீ
பத்த ருகக்குந் தலமதே பற்றுவை
பத்தர் பகர்தரும் நாமமே பாங்குறச்
சித்தஞ் சிறந்திட ஏற்பையால் செல்வனே! 2

ஆசையி லன்ப ரமைக்கு முறைவுன்
வாசமாம் பூசனை வாய்ந்திடின் மற்றவர்
பேசிடும் போதெலா மேற்பாய் பெருமையில்
பாச மவர்க்கே படர்க்கும் பரமனே! 3

சித்திரந் தன்னிலுஞ் செய்யும் வடிவமோ
எத்தரமாயினு மேற்ற தெனவே
மெத்தவ ன்பிலினில் மேவலிற் சேருவை
பத்தர் குடிலுளும் பாசத் துறைவையால். 4

மெச்சருஞ் சக்தியும் வீர்யமும் வாய்ந்துநீ
அர்ச்சனை செய்யுந ராதர வொன்றையே
வித்தமா யுன்னுவை வேறுபா டுண்டெனிற்
சர்ச்சை செய்யவாஞ் சித்தமே நிற்கிலை. 5

அற்பமே யாயினு மன்ப ரளிப்பதோ
பற்றினி லேற்பாய் பரமா மமுதென
குற்ற மிறையெனுங் கொள்வ திலையால்
எற்றே யுனதா மிணையிலா வன்பிதே! 6

மாலுன் வடிவமோ மங்கல மாகுமால்
சால வுயிர்க்கெலாம் நீயே சரணம்
கோல வடிவிதோ கண்களிற் கொள்ளவே
மேலதா மின்பம் விளைக்கும் விரியவே. 7

---

2. அன்பர் உகக்கும் உருவம், தலம், நாமம் இவற்றையே ஏற்பாய். 3. பூசனை, அவர் விரும்பும்போதுதான். 4. சித்திரமாயினும் படிவமாயினும், உறைவது உகப்புடன். 5. சக்தி, வீர்யம் இவை மிக வாய்த்திடினும், பெருமான் பூசை செய்வோர் ஆதரத்தையே நோக்கியிருப்பான். 6. அன்பர் அளிப்பது அற்பமே யாயினும், அமுதெனப் பெருமான் ஏற்பான். 7. பெருமானது வடிவம் மங்களகரம். இந்த நிலையில் பெருமான் யாவர்க்கும் புகல்,

உலக முழுது முனக்கே யெனினும்
நிலனில் நினதரும் மேன்மை நிறைந்ததால்
அலகில் கருணையா லன்பர்க் கருளே
நலனுக் கருளுவை நல்குவை நாடுவவே. 8

ஞானங் கனிந்த நலனதா லின்றியே
ஊன விழிகளுக் குன்னுரு வில்லையால்
ஆன வருச்சை வடிவினி லுன்னையே
தேனி னினித்திடச் சீரினிற் காண்பமே. 9

உயர்வுறு வானமுன் னுறைவே யெனினும்
உயிர்தமுள் தோய்ந்தோ ருயவறக் காப்பாய்
உயிரெலாங் கண்டுனை யுய்தர வுத்தமா!
அயர்வெதுங் கொள்ளா தருச்சையி லுற்றனை. 10

## 22. அர்ச்சை — குணங்கள்

எட்டெழுத் தொளியினி லிம்மையு மெம்மையு மோரின்பம்
பெட்புற நல்கிடும் பெருமையில் நின்றனை பெம்மானே!
நட்டதொ ரன்பினில் நாடுமுன் னடியவர் நன்மையுற
கட்புலன் கவர்தர நின்றனை கண்ணபு ரத்திறைவா! 1

வானினில் மல்கிடும் வாமமுஞ் சோதியும் வாய்ந்துவளர்
ஞானமுஞ் சக்தியு மின்னன நலனெலாம் மண்ணிதனில்
மானவ ருய்ந்திட வாய்ந்துநீ மகிழ்ந்துறை கின்றனையால்
தேனறை சோலைகள்சேணெழுங் கண்ணபு ரத்திறைவா!2

---

9. ஞானத்தால் வரும் பக்குவ மனத்தால் உன்னைக் காண முடியும். ஆனால் அர்ச்சையில் ஊனக் கண்ணுக்கும் இலக்கா வாய். 10. அர்ச்சை நிலை உலகினரை உய்விப்பதற்காக.

1. அர்ச்சை நிலையில் இத்தலத்து எம்பெருமான் புரிந்த அருள்களின் விவரம். பெட்பு—பெருமை. 2. வாமம்—அழகு. வைகுந்தத்தில் நீ கொண்ட குணங்கள் இங்கே குறையற வாய்ந் துளை. தேன்—வண்டுகள்.

வானவர்க் கிடர்பெயும் வலிமிக டாக்கனிம் மண்ணிலுமே
கானுறை முனிவரர்க் கிடுக்கணே கணக்கில செய்துலவக்
கானதி ரக்கனை பெய்தவன் காயம கைத்தனையால்
மானதொ ராழிவ னைந்தனை கண்ண புரத்திறைவா! 3

இந்திரன் தம்பியாய் வந்துநீ யேந்தியுன் சக்கரமே
அந்தரத் துலவிடு மலைகளின் சிறகவை மண்ணினிலே
சிந்திடச் சீய்த்தனை தேவர்தந்தேவனே! நின்னொளியைச்
சிந்தையிற் சேர்ப்பரால் மானவர் கண்ண புரத்திறைவா. 4

சதமகன் துனிதனைத் தகைத்தனை வானதில் மேலதொரு
பதமதை மீட்டனை பற்றுட னவனுனைச் சிந்தித்தே
நிதமுமே வாழ்த்துவன் நின்பத மேத்துதல் நின்னடியார்
இதமென நாடுவ ரெந்தையே! கண்ணபு ரத்திறைவா! 5

வாசவற் கன்பனாம் வசுதனை நின்முனம் நீயழைத்துன்
தேசினைத் தெளிவுறக் காட்டினை சிந்தையுன் பாலடரப்
பாசம்வி ளைத்தனை பகர்ந்தனை நின்னரும் மந்திரமே
பேசரும் புகழுடையப் பெருமைய! கண்ணபு ரத்திறைவா! 6

மன்னவன் மகள்கொள மான்விலாப் பாசமே நல்கியவள்
முன்னர்நீ கனவினில் மன்னினைமுகந்ததொரான்பொளிரப்
பொன்னெனப் புணர்ந்தனை புவியிதை யாண்டிடு
மன்னவர்தம்
மன்னவர் தம்முனம் கண்ணனே! கண்ணபு ரத்திறைவா! 7

நிசிசர னாயினும் நின்னுழி நேசமே கொண்டவனை
நசையினிற் கூட்டிநின் நண்பனா யேற்றனை யன்றியுமுன்
வசிதனில் நின்முனர் சேர்த்தனை வைகலும் நின்விழியால்
வசிகொளச் செய்குவை மாதவ! கண்ணபு ரத்திறைவா! 8

---

3. விகடாக்ஷனை வதஞ்செய்தமை. ஆழி—சக்கரம்.
4. இந்திரன் தம்பியாகப் பிறந்து மலைகளின் இறகுகளைச் சிதைத்தாய். 5. இந்திரனுக்கு மூவுலகை மீட்டளித்தாய். சதமகன்—இந்திரன். 6. வசுவை நீயே நின்பால் ஏற்று மந்திரம் உபதேசித்தாய்.

பூசகற் கன்பனாய் மற்றவன் புரிந்ததோர் புன்மையிலும்
நாசமே நாடுறா வண்ணமே நலமெனச் சென்னியிலே
கேசமே யேற்றனை கேசவா! தொண்டருக் கென்னவரும்
பாசமே கொண்டனை பரமனே! கண்ணபு ரத்திறைவா! 9

ஆக்கையா லார்தரும் வல்வினை யனைத்துமே இம்மையி
நீக்கிநீ நல்குவை நின்கழற் கன்பதே பின்னையுமுன் [லே
மோக்கமே நல்குவை மூதுவர் தமதருஞ் சிந்தையிலே
தேக்கியே யேத்திடுந் தேவனே! கண்ணபு ரத்திறைவா!10

## 23. அடியார் பெருமை

கற்றார் வணங்குங் கண்ண புரத்தாய்!
பற்றா யுனதிணைப் பாதம் பணிந்திடப்
பெற்றா ரெவரோ பெரியோ ரவர்க்கே
உற்ற பணிவிடை யுள்ளத் தடர்த்தேன். 1

இறைவனே! உன்கழ லேத்து மடியவர்
பிறவியோ யாதே யெனினும் பெறுதற்
குரியவ ராவர் குலமெது மோரா
தரிதா மவருடன் சார்தரும் நட்பே. 2

மாதவ! உன்னிரு மாணடி வாழ்த்துவார்
பாதமே பவக்கடற் காகும் படகாம்
கோதுள வேனு மிவர்பாற் குறைகளே
யேதெதுங் காணேன் பிரியே னிவரைநான். 3

அண்ணலே! நின்னுழி யன்புடை யோரை
நண்ணிநான் நட்புறக் கூடுவன் நட்பிதோ
எண்ணுவ னீடிலாப் பொன்னே யெனநான்
கண்ணெனக் கொள்வன் கலந்துரை யாடலே. 4

---

9. பூசகனுக்குப் புரிந்த நன்மை. 10. இப்பெருமான் வைகுந்தம் கொடுப்பவன்.

1. உன் அன்பருக்கு நான் பணிவிடை செய்வேன். 2. அவரது பிறவியை ஆராய மாட்டேன். 3. அவர்களது திருவடிகளே பிறவிக்கடலைக் கடப்பதற்குப் படகாகும். 4. அவரது நட்பே விரும்புவேன்.

பொங்குமுன் சீரெலாம் போற்றிடும் பத்தர்
தங்குலந் தாழ்ந்ததென் றாய்வரோ கல்வியால்
பங்குறா வாருண மாயினு மாவராற்
குங்குமந் தாங்குங் கழுதையே கூறினே. 5

பரமனே! உன்பாற் பற்றுடை யன்பரோ
வரனவில் வானவர் தம்மினும் மாண்பினர்
வரையிலா வன்பிவர் மாணடி கொள்பவர்
நிறைபுகழ் பாடுவேன் நெடுமால்! நிதமுமே. 6

பன்னக வைரிநின் கோயிலின் பாலகர்தம்
முன்ன ரிழைத்ததோர் மூர்க்க மதனால்
பன்ன மிழந்தான் பரமனே! உன்றன்
அன்பர்க் கவமதி செய்வதா லாமிதே. 7

வேடன் நட்பினை வேட்டனை கானில்
நாடு மரக்கனை நண்பனா யேற்றனை
தேடிச் சபரிமுன் சேர்த்த தயின்றனை
நேடற் கரிதா யிவரைநீ நினைத்தனை. 8

சன்மமோ தாழ்ந்ததே யாயினுந் தாதர்தம்
பன்னரும் பத்தியால் பாவன ராவரால்
உன்னரும் நாமமே வோதுநன் பேயின்
துன்னலே துணித்தான் தூயதோர் நோன்பினன். 9

பத்த ரினத்துடன் பாங்குறச் சேர்ந்தே
சித்த மவர்பாற் சிறப்புறக் கொள்வாய்
பத்தர்க் குயிராம் பரமனே! அன்னவர்
வித்தமே யென்று விரும்பியாட் கொள்வையால், 10

---

5. ஞானக் கடலே யாயினும் எவர் அடியாரது குலத்தை இகழ்கிறாரோ, அவரது ஞானத்தால் பலனில்லை; அவர் குங்குமஞ் சுமந்த கழுதையே யாவர் 6. உன்னுடைய பக்தர் நித்திய சூரிகளிலும் சிறந்தவர். 7. பன்னக வைரி—கருடன். இவன் பக்தரை அவமதித்தால் துன்பங் கொண்டான். உனக்கு அடியாராகிய குகன், சபரி இவர்களை நீ ஆதரித்தாய். 9. கைசிக புராண வரலாறு. உன் பேரை இசைத்தவன் பெரும் பேயின் பாவப் பிறப்பை நீக்கினான்.

## 24. அடியார் பெருமை

ஆதியா யண்டந் தோற்றி யாருயிர் தம்மைக் காக்குந்
தாதையுந் தாயு மாகுந் தாமரைக் கண்ண! உன்றன்
பாதமே பற்ற லல்லாற் பற்றெனப் பிறிது கொள்ளாத்
தாதர்தம் பாதந் தம்மைத் தமியனேன் பற்று வேனே. 1

பிறவியே யில்லை யேனும் பெருகுமோர் கருணை யாலே
பிறவிகள் விரும்பி யேற்ற பெருமநின் பாதந் தம்பாற்
குறையறப் பணிய லல்லால் குறிப்பெதும் பிறிது கொள்ளா
நெறியினர் மேனி யென்றன் நெஞ்சினில் நிலைத்து
நிற்கும். 2

வரிசிலை கையி லேந்தி வையகம் புரிவிற் காக்குங்
குரிசிலாய் வந்த வுன்றன் குணங்களே பாடி யாடிக்
குரைகழ லேத்த லல்லாற் குறிப்பினிற் பிறிது கொள்ளாப்
பெரியவர் தம்மைக் கண்டு பேணிநான் வாழ்த்து வேனே. 3

அமரருக் கமுதம் நல்கக் கமடமா யசலந் தன்னை
நிமிரநின் முதுகி லேற்ற நிகரிலா வள்ளா லுன்னை
அமைதரச் சிந்தை சேர்த்து வாழ்த்துத லன்றிச் செய்யார்
இமையவர் தம்மை யொப்ப ரென்றுநா னேத்துவேனே. 4

நாமநீர் வேலை சூழும் நானிலங் காக்கு முன்றன்
பாமரு குணங்க ளெல்லாம் பாடிநின் பாதந் தம்மில்
தேமலர் தூவ லல்லாற் சிந்தையிற் பிறிது கொள்ளா
நேமரின் பாத தூளி நிதியினும் மேல தன்றோ? 5

---

1. மறந்தும் புறந்தொழா மாந்தரின் பாதங்கள் நமக்குப் புகல் என்பது இப்பதிகத்தின் கருத்து. பெருமானது பாதங்களையே தொழுவார்களது பாதங்களைத் தொழுவேன். 2. இவ்வாறான நெறியுடையார் என் நெஞ்சில் நிலைத்து நிற்பர். 3. இராம பிரானது குணங்களைப் பாடும் பெரியவர்களை நான் வாழ்த்துவேன். குரிசில்—சிறந்தோன். 4. ஆமையாகிய பெருமானது வள்ளல் தனத்தைச் சிந்தை செய்வார் தேவர்களிலும் சிறந்தவர். 5. உலகத்தைக்காக்கும் பெருமானது குணங்கள் பாடி, அவன் திருவடிகளில் மலர்கள் தூவி வணங்குவர், எனக்கு ஒப்பற்ற நிதியே யாவர்.

ஆயருக் குயிரே யாகி யாநிரை மேய்த்த வன்பா!
ஆயிழை யார்க ளிட்டும் வெண்ணெயே யயின்ற வுன்றன்
பாயசீர் கேட்ட லல்லாற் பற்றெனப் பிறிது கொள்ளாத்
தூயர்தம் நேச மொன்றே தோயுமென் சிந்தை சேர்ந்தே. 6

அடியவர்க் குணையே நல்கு மச்சுதா! அமரர்க் காகப்
படியினில் மண்ணி ரந்து வானெலாம் பரந்த வுன்றன்
படியிலாப் பரிவே யின்றிப் பிறிதெதும் பாட கில்லா
அடியவ ரடியில் தோய்ந்தே யனுதினம் வணங்கு வேனே. 7

ஐவர்தம் மல்ல லெல்லா மரியன செய்த வித்த
ஐயனே! அடியார்க் கென்றே கொண்ட நின் னன்பு தன்னை
மெய்சிலிர்ப் பேறப் பாடி வேறெதும் பாட மாட்டார்
எய்தருந் துணைய ராவ ரெனக்குயி ராவ ரன்றோ! 8

ஏனமாய் மண்ணி டந்துன் னெயிற்றினி லேந்தி நின்ற
ஞானநன் மூர்த்தி! நீமுன் நவின்றதாம் மந்தி ரத்தைத்
தேனெனச் சிந்தை செய்த லின்றிவே றெதுவுஞ் செய்யார்
வானவ ரென்று நாடி வாழ்த்துவ னவர்தம் பாதம். 9

பார்மனர் நீலன் சோழன் பாண்டிய னன்னா ரோதத்
தேர்வுற வெட்டெ ழுத்தைச் செப்புநின் செவ்வி தன்னை
நேரினிற் கண்டு நாளும் நினைத்தலே யின்றிச் செய்யாச்
சீரியர் தாளில் தோய்வேன் சிறிதெனும் பிரிய கில்லேன். 10

---

6. ஆய்ச்சியர் ஈட்டிய வெண்ணையே விரும்பிய உன்றன் சீரையே கேட்பாரது நட்பே நாடுவேன். 7. படி—பூமி, படி—ஒப்பு. உன்னைப் பாடுவோரது திருவடிகளில் நாளும் படிந்து வணங்குவேன். 8. உன் அன்பர்க்கு நீ செய்தவற்றை நினைத்து மெய்சிலிர்ப்புறுவார், எனக்கு துணையராவர். 9. வராகப் பெருமானாய் நீ வெளியிட்ட மந்திரமாகிய த்வயத்தை ஓதுவார் நித்யசூரிகளே யாவர். 10. திருமங்கையாழ்வார், பாண்டியன், சோழன் இவர்களுக்குத் திருமந்திரம் உபதேசித்த பெருமானின் திருமேனியைக் கண்டு நினைத்திருப்பவர்களது திருவடிகளிலே நான் படிந்துய்வேன். மனர்—மன்னர். நீலன்—திருமங்கை யாழ்வார்.

## 1. வேந்தன் கவலை

அருந்த வத்தாற் பெற்ற வணங்காம் மகளிவளோ
திரிந்தாள் சிந்தை சிறிதுந் துயிலே நினைத்திலளே
வருந்தி யுரைக்கும் "மாலே! கண்ணா! வரு"கென்றே
மருந்தே யறியேன் குலையும் மனத்துக் கெதுவென்றே. 1

நாண மிழந்தாள் நலிவே கண்டாள் நடுங்குமிவள்
"காணே னென்றன் தலைவன் கண்ணன் தனை'யென்றே
ஊணுங் கொள்ளாள் மேனி யொளியே ஒடுங்கியதே
மாணார் குலத்து வந்தாள் கொள்ளும் மயலிதுவே. 2

வாமை யிவள்தன் மழவுக் கேற்ப வயமாவாங்
கோமா னொருவன் றன்னைக் கொண்டேன் குறிப்பினிலே
தாமோ தரனை யின்றித் தனக்கென் றிவள்நினையாள்
ஆமா றெதுவென் றஞ்சிக் கலங்கித் துயில்கொள்ளேன். 3

தாரார் மார்பர் தரணித் தலைவர் தமைக்கூட்டி
சீரார் செவ்வித் திருவே யனையாள் திருமணமே
பாரோர் வாழ்த்தச் செய்யும் பாரிப் புடையேன்நான்
நாரா யணனை நங்கை யிவளோ மணங்கொண்டாள். 4

கண்ண னிவனோ என்னைக் காக்குங் குலதெய்வம்
எண்ண இல்லே னர்ச்சை யிதனி லிவனுறையும்
மண்ணி லென்றன் மகளை யெங்ஙன் மணம்புரிவான்
அண்ணால்! கண்ண புரத்தாய்! அடியேன் கவலையிதே. 5

---

1. தனது புதல்வி சௌரிப் பெருமாளையே மணந்து கொள்வதாகக் கூறுவதால், உபரிசரவசு இது எங்ஙனம் நிகழும் என்று கவலைப்படுகிறான்.

நாணம்: பெண்களுக்கு அவசியம் வேண்டுவது. இவள் வாய்விட்டுத் தலைவன் பேரைச் சொல்லுகிறாள். இதனால் நாணமிழந்தவள். 3. வாமை—அழகுடையவள். வயமா—சிங்கம். 4. என் விருப்பம்: யாவருங் காணுமாறு திருமணம் நடத்துவது. 5. இப்பெருமான் என் குலதெய்வம்; எனினும் என் சங்கை: இவன் மானிட வுருவில் எப்படி மணம்புரிவான் என்பது.

மன்னர் குலத்து மணியாய் வந்த மகளிவளோ
என்னே! சிந்தை யிங்ஙன் சிதைந்தா ளுலகிதுவோ
துன்னத் தூட ணங்கள் சொல்லி யிகழாதோ?
என்நான் செய்கே னெந்தா யிறைவா! அறியேனே. 6

என்னைத் தேடித் தன்பா லேற்ற இறைவனிவன்
பொன்னா மிவளைத் தன்பா லேற்றுப் புணர்வானோ?
என்னே! நாடும் நகரு மறிய இவர்தம்மை
நன்னர் மணத்தி லிணைத்து நானும் மகிழ்வேனோ! 7

செல்வி யிவட்குச் சிந்தை தெளியப் பகர்ந்துமிவள்
"எல்லே! நின்முன் நின்ற இறைவன் கனவினிலே
மல்ல லொளியைக் காட்டி வந்த மணியுருவன்
வல்ல னெதுவுஞ் செய்வான்" என்பாள் துணிவினிலே. 8

என்முன் தோன்றி யிறைவ னிவனோ தனதுறைவே
அன்பி னென்னைக் கொண்டே கொண்டான் மகளிவளைத்
தன்பா லேற்றுத் தக்க வகையில் வதுவையிலே
மன்னர் குலங்கள் வாழ்த்த மணந்து மகிழ்வானோ? 9

கொற்றக் குடையின் கீழே கோலைக் கரங்கொண்டு
வெற்றி முழக்கி வாழ்வேன் மெலிந்தேன் கவலையினால்
எற்றே! என்றன் மகட்கோர் நலனே இறையவனே!
பற்றி யருள்வாய் யிவளை மணந்து பரம்பரனே! 10

---

*6. இவள் நிலையைக் குறித்து உலகோர் தூடணங்கள் சொல்லுவர். 7. எனக்குத் தானே வந்து அருள் செய்த பெருமான், யாவரும் காண இவளை மணந்து கொள்வானோ? 8. இவளது சிந்தையைத் தேற்றுவிக்க நான் பல சொல்லியும், இவள் கூறுவது: "அத்தனே! உன் முன்னே தோன்றிய இறைவன், யாவருங் காண என்னை மணந்து கொள்ள வல்லவனன்றோ?" 9. இவன் என்னிடம் கொண்ட அன்பு: என்னைக் கொண்டு தன் திருக்கோயிலை நிருமித்துக் கொண்டான். இவன் எல்லாருங் காணுமாறு திருமணஞ் செய்து கொள்வானோ? 10. வேந்தனாகிய எனக்கும் கவலை. பெருமானே! இவளை மணந்து கொள்வாய்.*

## 2. தாயின் கவலை

சிந்தை சிதைந்தாள் செல்வி யென்மகள்,
"எந்தாய்! கண்ண புரத்தாய்!" என்னும்
"மைந்தா!" என்னும் மாழ்குஞ் சோரும்
அந்தோ ஆயிழை கொள்ளு மயர்வே!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 1

ஓவா துயிர்க்கு மோடுந் தேடும்
"ஆவா கண்ணா! அணைப்பாய்!" என்னும்
"தேவன் வருமோ?" என்றே சிதையும்
கோவை வாயாள் கொள்ளுங் குலைவே!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 2

"கண்ணா!" என்னும் "காளாய்!" என்னும்
"எண்ணி லுறையு மென்கோன்!" என்னும்
கண்ணீர் கலுழுங் கையா லிறைக்கும்
பெண்ணிவள் கொள்ளும் பேதுற வென்னே!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 3

என்சொற் கேளா ளென்குடங் காலில்
பொன்னிவ ளென்னே! பொருந்த கில்லாள்
"என்கோ னென்னை மறந்தான்" என்பாள்
"ஏன்நான் செய்கேன்?" என்றே யரற்றும்.
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 4

---

1. பதுமினியின் தாய் இவள் நிலையைக் குறித்துக் கலங்குவது. மாழ்கும்—மயங்குவாள். இவள் பரிசே: காதல் கொண்ட இவள் இவ்வாறு கலங்குவதோ? 2. உயிர்க்கும்—பெருமூச்செறிவாள். சிதையும்—மனங்குலைந்து வருந்துவாள். 3. கலுழும்—பெருக்குவாள். பேதுறவு—கலக்கம். 4. குடங்கால்—ஏற்றுக் கொள்ளக் குழித்து வைத்த கால்; மடி. பொன் இவள்—பெரிய பிராட்டிக்கு ஒப்பாகுமிவள்.

"வானோ ரிறைவா! என்றன் மனத்துக்
கோனே!" என்னுந் தேம்பும் துவளும்
"ஏனோ என்னை மறந்தனன்?" என்னும்
மானேய் நோக்கி மனமிக நைந்தாள்.
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 5

"ஆயங் காளோ! ஆருயி ரானென்
நேய னென்னை நினைத்திலன்" என்னும்
பாயல் தன்னிற் படிய கிலளாய்
ஆயிழை காணு மல்ல லிதுவே.
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 6

"இரவே வூழியின் நீடிய" தெனுமால்
இறையுந் துயிலாள் "என்கோ னிவணே
வருமோ?" என்னும்வாடும் புலம்பும்
அரிவை யிவட்கா மரந்தை யிதுவே!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 7

"சீதக் கிரணன் தீயே!" எனுமால்
"கோதில் மலயங் கொடுங்கனல்!" என்னும்
"ஏதோ தலைவன் வந்திலன்" என்னும்
கோதை யிவளோ கொள்ளுந் துனியென்!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டாள் ளிவள்பரிசே! 8

---

5. தேம்பும்—தேம்பியழுவாள். துவளும்—துடிப்பான். எனை—என்னை. மானேய் நோக்கி—மான்போன்ற விழியுடையவள். 6. ஆயங்காளோ!—தோழியரே! அன்னையரே! ஆய்—தாய்; அம் : சாரியை. பாயல்—படுக்கை. ஊழியின் நீடிய—ஊழிக் காலத்தை விட நீண்டது. இறையும்—சிறிது நேரமும். அரிவை—பெண். 8. சீதக்கிரணன்—சந்திரன்; தீ—நெருப் போலே என்னை வாட்டுகிறான். கோதை—பெண். துனி—துன்பம்.

நானே மறந்தாள் நவிலு மிதுவே
"மாணார் மாதவன் வாரா ரெனினே
வீணென் சன்மம்" என்றிவள் வீழும்
வானுத லந்தோ! மான மிழந்தாள்.
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 9

"கனவி லென்னை யணைத்திடுங் காளை
நினைவி னின்றும் நீங்கான்!" எனுமிவள்,
"அனையே! அந்தோ அலந்தேன்!" என்னும்
புனையிழை நீத்தாள் பொலிவிதே யந்தோ!
கண்ண புரத்தாய்! நின்பாலே
காதல் கொண்டா ளிவள்பரிசே! 10

## 3. தோழி வேந்தனுக்குக் கூறியது

வேந்தனே! கேட்பாய் விளம்புவ நின்மகளோ
வாய்ந்தனள் காதல் கணபுர மாலுழியே
மாந்த ரினமே மனந்தனிற் கொள்ளாளால்
ஏந்திழை யென்னே இளைத்தாள் கவலையிலே. 1

மன்னவர் மன்னா! மானிவள் நின்மகளோ
பொன்னெனக் கண்ட கனவு புகல்கின்றாள்
தன்னுயிர் கண்ண புரத்தினன் தன்னுடனே
இன்புற வணைத்து மகிழுவ னென்றிதுயே. 2

ஈடி லெழிலா னெவனுஞ் சுரபதியும்
நாடா தவனிடம் நாட்டஞ் சிறிதேனும்
தோடார் துளவத் தாரான் றனையிவளோ
கோடா வுளத்துக் கொண்டாள் கொடியிடையே. 3

---

1. ஏந்திழை—பெண். 2. மான் இவள்—மான்போல் நோக்குடைய இவள். கனவு : கனவினிலே தன்னைப் பெருமான் அணைக்கிறான் என்பது. 3. சுரபதி—இந்திரன். நாட்டம்—பார்வை, விழி. கோடா—குலையாத. கொடியிடை—பெண்.

"வளங்கொள என்றன் மனத்துள் வளருவதோ
விலங்கல் காணேன் மெய்யே இது" வென்றே
"கலங்குங் கலுழியிற் பாய்வேன் கனலினுமே
கலங்கேன் கடுவிடங் கொள்வேன்" எனுமிவளே. 4

"மேனி யிதுகாண் விளம்புவ லென்னுயிர்க்கே
தேனின் துளவத் திருமுடி மாலென்னைத்
தானோர் மகிழ்வினிற் சார்ந்தெனைப் புல்கிலனேல்
ஏனோ பயனிம் முலையால்?" எனுமிவளே. 5

"அர்ச்சை நியமத் தவனென் முனம்வந்து
சித்தங் குளிர்தரச் சேருமோ? என்பாயேல்
அத்த னருகினி லன்றுருக் காட்டியவன்
இத்தகை யானெனக் காவன்" எனுமிவளே. 6

"எந்தா யெனதுயிர்க் கோமா னெளியேன்றன்
சிந்தை புகுந்தது திண்ண மிதுவென்னில்
முந்து மன்பே முகிழ்தர வென்பாலே
வந்துறும் வந்துறும்" என்றிவள் கூறுவளே. 7

"ஏடீ! இவன்ற னன்பு மெளிமையுமே
கேடி லருளுங் கிளர்தரு சீலமுடன்
நாடு மெளியேற் கிலையெனில் நான்தோழீ!
வாடிக் குலைப்பேன் வாழ்வினை" என்பாளே. 8

எல்லை யிலதாய் வளரும் கருணைவளம்
மல்கு மிவன்பால் மனமோ துணைநாடிச்
செல்லு மிதுவு மிவன்றன் திருவருளால்
அல்ல லினியிலை என்பா ளணங்கிவளே. 9

---

4. விலங்கல்—தடை. கலுழி—வெள்ளம். கனல்—தீ. 5. என் உயிர்க்கு—எனக்கு உயிர் போன்ற பெருமானுக்கு 6. அர்ச்சை நிலையிலுள்ள இவன் என்னை மணந்து கொள்வானோ? இவன் என் தகப்பனாருக்குத் தன்னுருவைக் காட்டினானன்றோ? 7. இவன் என்னிடம் கனவில் கூடி மனத்திற் புகுவது நிச்சயமானால், இவன் தானே என்பால் வருவான். 9. இவன் கருணை வாய்ந்தவன்; இனி எனக்கு அல்லலே இல்லை.

"இறைவ னிவனையென் னுள்ள மிளைப்பின்றிப்
பருகும் பரனிவன் பத்தர்க் குயிராவான்
பெரியோர் பரவும் பெருமா னெனையேற்பன்
சிறிதுங் கலங்கேன்" என்பாள் தெரிவையிவள். 10

## 4. தோழி தாயிடங் கூறியது

தேவிநின் செல்வி கொள்ளு மீசனைச் சிந்தை தன்னில்
"ஏவுவன் கணைகள் மார னெங்ஙனே தரிப்பே" னென்னும்
ஆவியே! அமுதே! கண்ணா! அணைக்கநீவருக வென்னும்
கூவியே யிங்ஙன் தேவீ துயிலெழுங் கொள்ள கில்லாள்! 1

மதனதால் மண்டுந் தாபம் மாற்றுவான் தேவி! நாங்கள்
பதமுறப் பாயல் வேய்ந்து பரிமள மலர்கு வித்தோம
புதியன தளிர்கள் தூவிப் பொலிவுறச் செய்து மந்தோ!
இதமெதுங் காணா ளாகி யிக்கொடி வாடு மெல்லே! 2

பனியினுங் குளிர்ந்த சந்தம் பாவையின் மார்பி லப்பி
நனியன நளின பத்ரம் கொங்கைமீ தடர்த்து நாங்கள்
பனியெனத் தண்ணீர் தூவி வீசனம் பாங்கில் வீசி
இனியன கீதம் பாடி யிவள்தனைத் தேற்றி னோமே. 3

இனியதாம் மணமே கொண்ட இணரொடு தளிரு மார்ந்து
கனியினங் குலுங்குங் காவில் காரிகை யிவளை யுய்த்தோம்
கனியெனச் சிவந்த வாயாள் களிப்பெதுங் காணா ளாகித்
துனியினால் துவண்டு தோய்ந்தாள் சுற்றிலும் நோக்க
கில்லாள். 4

---

10. இறைவனாகிய இவனை என் உள்ளம் இளைப் பின்றிப் பருகும். இவன் என்னை ஏற்பான்.

1. மாரன்—மன்மதன். 2. மதன்--காம வேதனை. மாற்றுவான்—மாற்றுவதற்காக. பாயல்—பாய். இக்கொடி—கொடி போன்ற இந்தப் பெண். 3 மேலும் செய்தவை: மார்பில் சந்தனக் கலவை அப்பித் தாமரை இலைகளை வைத்தனர். நளினபத்ரம்—தாமரையிலை. வீசனம்—விசிறி. 4. இணர்—பூங்கொத்து. காரிகை—பெண்.

நங்கையின் தாபந் தீர நாங்களோ இவளைத் தேற்றி
அங்கடர் வளனே காட்டி யிவளுளம் மாற்ற வென்றே
பொங்கர்வாய் சூழல் தன்னிற் பொன்னியைத் தாங்கிச்
சென்றோம்
எங்கணு மெழிலே கண்டு மிவளுளங் களிக்கக் காணோம்.5

காவினில் மலர்கள் தம்பால் களித்துவண் டிசைகள் பாடத்
தேவரும் வியக்கும் வண்ணந் தீங்குயில் கூவ வாங்கே
மேவிய மயிற்க ணங்கள் வியனெழ நடன மாடத்
தேவி!நின் செல்வி கண்டு தெளிந்தனள் தேறி நின்றாள்.6

"கண்ண!நின் நாம மெல்லே கடுவினிற் கொடிதே"
என்னும், "புண்ணினிற் புளிபெய் தொப்பப் புண்கணே
பெருக்கு" மென்னும், "பெண்ணிவள் துன்பந் தன்னைப்
பெரும!நீ அறியாய" யென்னும், "எண்ணினிற் கொண்ட
வுன்னை யெங்ஙனே மறப்பே" னென்பாள். 7

'கஞ்சனைக் காய்ந்த காளை கடைக்கணாங் கணையாய
லென்றன், நெஞ்சமேநெகிழ்ந்த" தென்னும், "நெஞ்சினில்
நின்ற நேசன், அஞ்சலென் றணைக்க கில்ல னணைவனோ
யென்னை ' யென்னும், "வஞ்சக மிதனைத் தீர்க்கும்
வகையெதுங் காணே" னென்பாள். 8

"பொன்வணப் புள்ளை யூரும்பொருவிலா வமரர்கோமான்
தன்னகந் தமியேற் காக்கித் தணிக்குமோ இந்தத் தாபம்?
மின்னொளிர் மௌலி வேய்ந்த கோனிவன் தோளோ
டென்னை
மன்னவே பொருத்தி வைப்பீர் மங்கைமீர்! என்றேகூவும்.9

"இம்முலைக் கிடரே தீர எனக்கருள் செய்வ தொன்றாம்
இம்மையு மெழுமைக்காகு மென்னுயி ரென்றன் கோமான்
அம்மநீ அஞ்சே லுன்பா லணவுவன் விரைவி லென்றே
செப்புற நவிலு வானேல் தேறுவேன்" என்பாள் தேவி! 10

---

5 பொங்கர்—சோலை. சூழல்—சுற்றியுள்ள இடம். 6. எவ்வாறு தேறினாள் என்பது. 7. கடு—விஷம். புன்கண்—துன்பம். எண்ணினில்—எண்ணத்தில், மனத்தில். 8. தலைவனுடைய கடைக்கண் அம்பு போலாயிற்று.

## 5. மன்மதனை வேண்டல்

அனங்க னேலு மங்கையிலே
    யலருஞ் சிலையுங் கொண்டென்றன்
மனங்கொள் புகராய் நின்றனையே
    வரைவ கேட்பாய் மன்மதனே!
இனங்கொள் கவலை யிற்றொழிய
    என்னைக் கோமான் கண்ணபுரத்
தனங்க னோடுங் கூட்டுவையேல்
    அருளோ இதனில் வேறுண்டோ? 1

உதயத் தெழுந்து நீராடி
    ஒருபோ துண்டு நோன்பினிலே
இதயத் தடர்த்துன் புகழ்தன்னை
    யிசைப்பேன் கண்டாய் மன்மதனே!
இதமே காணேன் பிரிவாலே
    என்னை யிறைவன் கண்ணபுர
மதன னோடுங் கூட்டுவையேல்
    மாண்போ இதனில் வேறுண்டோ? 2

நீலம் முல்லை நளினமொடு
    மாவும் நின்தாள் தனில்தூவிக்
காலை மாலை நான்தொழுது
    கான மிசைப்பேன் மன்மதனே!
ஏல வென்னை யென்னுயிரா
    னிமையோ ரீசன் கண்ணபுர
மாலோ னோடுங் கூட்டுவையேல்
    வாய்ப்போ இதனில் வேறுண்டோ? 3

---

1 பதுமினியின் வாக்கு. அனங்கன்—உருவில்லாதவன், அலர்—ஐந்து மலர்கள். கவலை—பெருமானைப் பெறக் கூடுமோ என்று. இதம்—மனத்துக்கு இன்பம். மதனன்—மன்மதன். 3. நளினம்—தாமரை. மா—மாவின் மலர். மாவின் மலர், நீலம் இவை மன்மதனின் ஐந்து கணைகளுள் இரண்டு.

வானோர்க் கென்று வன்னியிலே
வார்க்க வாகு மவிதன்னை
ஈன ஞமலி யேற்பதுவோ?
இதுவே தேறுவை மன்மதனே!
மான வர்க்கோ நானல்லேன்
மதனே! என்னைக் கண்ணபுரக்
கோனுக் காக்கிக் கூட்டுவையேல்
அருளே இதனில் வேறுண்டோ? 4

சுவரி லுன்ற னுருவெழுதி
மலர்கள் தூவித் தொழுவேனே
அவலுங் கட்டி யரிசியொடு
கனியு மளிப்பன் மன்மதனே!
கவலே கொள்ளு மெளியேனைக்
ககனத் திறைவன் கண்ணபுரத்
தமல னோடுங் கூட்டுவையேல்
அருளே இதனில் வேறுண்டோ? 5

நின்றன் கணைகள் நிலந்தனிலே
நிமிர வரைந்து சித்திரமா
நின்றனருள்கள் தமையோதி
நிதமு மிசைப்பேன் மன்மதனே!
என்ற னின்ன லறியாயோ?
என்னை யென்கோன் கண்ணபுரத்
தன்ப னோடுங் கூட்டுவையேல்
அருளே இதனில் வேறுண்டோ? 6

தூயோர் வகுத்த தொன்னெறியில்
தோய்ந்து நாளு மர்ச்சித்து
ஓயா துன்னை வாழ்த்துவனே
இரதிக் குயிராம் மன்மதனே!

---

4. வன்னி—ஓமத் தீ. ஞமலி—நாய். 5. கட்டியரிசி—கன்னலுடன் கூட்டிய அரிசி; காப்பரிசி. கவல்—கவலை. ககனம்—வான்; பரமபதம். 6. நிமிர—நன்கு அமைய.

நோயால் மெலியு மெளியேனை
நுணங்கா தென்கோன் கண்ணபுர
மாயோ னோடுங் கூட்டுவையேல்
வாய்ப்போ இதனில் வேறுண்டோ? 7

வேந்தர் செல்வர் பலரென்னை
விரும்பு கின்றா ரவரோடும்
மாந்து மின்பம் நான்வேண்டேன்
மனங்கொ ளிதுவே மன்மதனே!
ஆய்ந்தென் சிந்தை நீயறிவாய்
என்னை யையன் கண்ணபுரத்
தேந்த லோடுங் கூட்டுவையேல்
ஏற்போ இதனில் வேறுண்டோ? 8

எந்தைத் குயிரா மச்சுதனை
எண்ணிற் கொண்டே னவன்தானும்
வந்தென் கனவில் தோன்றுவனே
மனத்து ளிதுகொள் மன்மதனே!
அந்த ணர்கள் மறையோதி
யாகத் தணைக்குங் கண்ணபுர
மைந்த னோடுங் கூட்டுவையேல்
வாய்ப்போ இதனில் வேறுண்டோ? 9

வாருக் கடங்கா முலைகளிவை
மாலோன் மார்புக் கேயாவ
பாரி லெவர்க்கு மிவையில்லை
பகர்வ கேட்பாய் மன்மதனே!
காரின் வண்ணன் கடல்வண்ணன்
காயா வண்ணன் கண்ணபுரத்
தாரா வமுதோ டெனைச்சேர்ப்பாய்
அருளே இதனில் வேறுண்டோ? 10

---

7. நோய்: பிரிவால். 8. ஏந்தல்—சிறப்புடையவன்; ஏற்பு—ஏற்ற செயல். 9. ஆகத்து—மனத்தில். மைந்தன்—மணாளன். 10. வார்—கச்சு. பகர்வ—சொல்லுவதை. ஆரா வமுது—எத்தனை அனுபவித்தாலும் மேலும் மேலும் இன்பம் அளிப்பவன்.

## 6. நெஞ்சு விடு தூது

நெஞ்சே! நின்றனிற் சுற்றம் நினைப்பதுவோ?
வஞ்ச முனக்கிலை மாண்பே வடிவானாய்
கஞ்ச மலர்க்கணன் கண்ண புரத்திறைமுன்
கொஞ்சிக் குலவி யென்நிலை கூறுவையோ?

மனமே! எனக்காம் வயனெலாம் நீயறிவாய்
கனவினில் தோன்றிக் கலந்தவன் கற்பகநற்
கனியினைக் கண்டென் காதலைக் கூறுவையேல்
நினைவினிற் கொண்டென் னுழிவரும் நேசனிவன். 2

மாலோன் வடிவும் மழவும் வளநகையும்
கோலங் குலவும் விழியும் மறப்பனவோ?
பாலில் துயின்ற பரமன் றனைக்கண்டு
மாலிவள் கொண்டாள் வருகென் றழைப்பாயோ? 3

முகுரக் கதுப்பும் முகிழ்இதழ்ச் செவ்வாயும்
மகரக் குழையும் மணிமுடிச் செவ்வியிவை
பகர வரிதாய்ப் படருவ வென்முன்னே
புகல்வா யவனிவண் போந்திட என்நெஞ்சே! 4

மின்னிடை மாவும் மிளிருங் கவுத்துவமும்
பொன்மணி முத்தொடு பூண்புனை மார்பினனை
என்னிடம் வந்திட என்துணை நன்னெஞ்சே!
முன்னி யவன்பால் மொழிந்திடி லுய்வேன்நான். 5

சுற்றிலு மெங்கணுஞ் சூழ்ந்தடர்ந் தென்னுள்ளும்
பற்றி யுறையும் பராபரன் பாவனனைக்
கற்பகந் தன்னை யெண்ணினின் றோட்டுவதோ?
மற்பொரு தோளனை வாழ்த்தியென் நோய்பகர்வாய். 9

---

1. பதுமினி தனது நெஞ்சைத் தூது விடுகிறாள். கஞ்சம்—தாமரை. 3. மழவு—இளமை. பால்—திருப்பாற் கடல். இவள் மால் கொண்டாள் : மயங்கினாள். 4. முகுரம்—கண்ணாடி. கதுப்பு—கன்னம். புகல்வாய்—சொல்லுவாய். 5. மா—பெரிய பிராட்டியார். 6· பாவனன்—தூயோன்.

என்முன் கனவி லிவனோ வொளிர்தருவான்
என்னிவ னென்னை மறக்குமோ? என்நெஞ்சே!
பன்னி யிவன்பாற் பகருவை யென்நிலையை
என்னிடம் மீள்வா யிவனொடு மிவ்விடமே. 7

எங்கும் நொடியினி லேகுந் திறனுடையை
இங்குநீ தங்கிடி லென்நிலை யென்னாகும்?
பொங்கு புகரினன் புண்ணியன் பால்விரைந்து
மங்கை யிவளை மறக்கவோ வென்றுரைப்பாய். 8

மேனி மெலிந்தது வெள்வளை கைநில்லா
நானுயிர் வாழ்வது நாரண னாகத்தில்
பூணெனத் தோய்ந்து புணர்ந்து மகிழ்வதுதான்
ஏனினித் தாமத மென்னுடை நன்னெஞ்சே? 9

திருவணை மார்பன் திருமுனர் சென்றவன்றன்
னருகினி லென்நிலை கூறிடி லப்பெருமான்
அரிதென வுன்னை யணைப்ப னவனுடனே
விரையுவை யிங்கே விளைவது பேரின்பே. 10

## 7. குயில் விடு தூது

கானம் பொழியுங் குயிலே! கருதி யுனைநானே
வானின் றிழிந்த மாணா ரணங்கே யெனக்கொள்வன்
கானார் பொழில்சூழ் கண்ண புரத்துக் கருமணியைக்
கோனை யிவணம் விரையக் கூவாய் குறிக்கொண்டே. 1

தேனுந் தெவிட்டும் தெய்வக் குயிலே! நினதரிதாம்
கானம் தெவிட்டா ககனத் தாருக் கமுதாமே
வானார் பரம னெனதாம் மனத்து ளுறைந்தானே
ஏனோ விவன்பாற் கூவி யிணைக்கிலை யென்னுடனே! 2

7. *தலைவியின் நிலை : மேனி இளைத்தது; கை வளைகள் கழன்றன.*

1. *பதுமினி ஒரு குயிலைத் தூது விடுகிறாள். குயிலே! நீ பறவையலை; தெய்வப் பெண்.* 2. *உன் கானம் தெவிட்டாது, வானோர் கேட்டு மகிழ்வர்.*

இளமை யிளகா திலங்கு மெழில்கொள் குயிலேநின்
வளனார் பொழிவோ வற்றா தென்றும் வளர்ந்தோங்கும்
துளவம் புனையும் முடியான் தூயோன் திருமார்பன்
இளகும் வணமே கூவி யென்னோ டிணைப்பாயே. 3

ஓயா துனதா மமுதப் பொழிவோ உயர்வானிற்
பாயுந் தரத்தாற் பரந்து வழியுந் திசையெங்கும்
ஆயன் கண்ண பிரான்முன் அன்பே! இசைபெய்தென்
நோயைப் பகர்ந்தால் நொடியில் விரைவன்
நினைத்தெனையே. 4

அழிவே யில்லை யுனதா மமுதப் பொழிவிதற்கு
பொழில்க ளெங்கு முன்றன் பொழிவினாற் புத்துயிரே
தழுவிச் சாரும் தாமோ தரன்பா லுனதமுதம்
பொழிவாய் புகல்வா யென்ற னன்பினைப் பூங்குயிலே! 5

சாமப் பொழிவு தனினுந் தரத்திற் பொழிகுயிலே!
சாம முகக்குஞ் சாம நிறத்தான் முனங்கூவில்
சேமம் வினவும் தெளிவிலென் சிந்தை தெரிவித்தால்
வாமக் குயிலே! வருவா னென்னைப் புணர்தற்கே. 6

காதலி யோடுங் களித்திசை பெய்யுங் கருங்குயிலே!
காதல் வளனே நல்லாய்! கருத வலைநீதான்
மாதவ னென்பால் வந்திடக் கூவ கிலையென்னில்
யாதென் நிலையென் றறிவா யன்பே! எனதுயிரே! 7

என்னுட னிந்நாள் வரையி லுயிரா யிலங்குவைநீ
என்னுயிர் நாதனை யெல்லே! பிரிந்தாற் பொழிவிதுதான்
என்னுயிர்க் காமோ? இதுநீ யெண்ணுவை யிக்கணமே
என்னுட னென்னுயிர் கூடவே கூவி வருவிப்பாய். 8

---

3. இளமையால் உன் கீதப் பொழிவு வற்றாது. 4. இப் பொழிவு எங்கும் அடரும். 5. இதற்கு அழிவில்லை; ஆதலால் பொழில்கள் புத்துயிர் பெறுவன 6. சாமப் பொழிவு—சாம வேத கானத்தின் வெள்ளம். சாம நிறத்தான்—கறுத்த நிற முடையவன். 7. நீ காதலியோடிருப்பாய்; தனித்திருக்கும் என் நிலை அறிவாய். 8. என் உயிர்க்கு ஆமோ—என்னுயிரைக் காக்க வல்லதோ?

பாலிற் பிறந்த பாவை தனக்கு மமுதாகும்
மாலோ னென்னுயிர் வளர்க்கு மமுதென நீயறிவாய்
கோலக் குயிலே! கோவலன் வந்திடக் கூவுவை யேல்
ஏல! உனதாம் மொழியே யெனக்கா மமுதாமே. 9

வன்ம மறியாய் மன்னுயிர் மகிழ்வே யுனக்காகும்
இன்சுவை பெய்வா யென்னிளஞ் செல்வக் குயிலேயுன்
கன்ம முணர்ந்தாற் கண்ணனை யென்னுடன் கூட்டுவதே
தன்ம மெனவே யுணர்வாய் சாற்றவும் வேண்டுமிதோ? 10

## 8. மேக விடு தூது

நீல முகில்காள்! நெடுவானில் மின்னணைந்து
மாலோன் வணங்கொள்வீர் மாலெனப் பேர்பெற்றீர்
சீலன் திருமார்பன் செம்மணியெங் கண்ணபுரக்
கோலக் குழகனென் பால்வரக் கூறுவீரே. 1

மஞ்ஞைக் கணமாட வானடர் மேகங்காள்!
என்கோ னெழில்கொண் டெழிலி யெனப்பெற்றீர்
பொங்கும் புகரான் பொழில்வளை கண்ணபுரப்
புங்கவ னிவ்விடம் போதரப் புகலுவீரே. 2

கனத்தடர் மேகங்காள்! கண்ணன் தனையொப்பக்
கனத்தருள் பெய்வீர் கனமெனப் பேர்பெற்றீர்
மனத்துக் கினியான் மணிவண்ணன் கண்ணபுரப்
புனத்துழாய் மார்வனுக் கென்நோய் புகலுவீரே. 3

---

9. பால்—பாற்கடல். பாவை—பெரிய பிராட்டியார். 10. வன்மம்—கபடம். உயிர்கள் மகிழவே நீ பாடுவாய். என்னை அவனுடன் சேர்ப்பது தர்மம் என்று அறிவாய்.

1. பலவகையாலும் மேகங்கள் பெருமானைப் போல் சிறப்புறுவன. வணம்—வண்ணம். மாலின் வணம் கொண்டீர்; ஆதலால் மால் என்ற பேர். வணம்—இயல்பு. 2. பெருமானது எழில் வாய்ந்ததால், எழிலி என்ற பேர். 3. பெருமானைப் போல் கனக்க அருள் பெய்வீர்; ஆதலால் கனம் என்று பேர்.

கொண்டற் குலங்காள்! குருமணி யென்னுயிர்போல்
கொண்டி ரெழிலிது கொள்வீ ரருள்தானும்
அண்டர்க் கிறைவனை யண்ணலைக் கண்ணபுரம்
அண்டியென் காத லறிவித் துயிர்காப்பீர். 4

மின்னிக் கனத்தடரும் மேகங்காள்! நும்பேறாப்
பொன்னாம் புனல்பெய்வீர் கைம்மா றெதுவின்றி
என்கோ னிமையோர்க் கிறையவன் கண்ணபுரம்
மன்னும் மணியை வருகெனக் கூறுவிரே. 5

ஆழி படிந்தெழு மம்புதங் காளிறைபோல்
ஆழி மறைப்பீ ரருளும் பொழிவீரோ?
பாழிப் புயத்தான் பரம்பரன் கண்ணபுரம்
வாழுந் தலைவருக் கென்நோய் வரைவீரே. 6

மண்டி விசும்பினில் மஞ்சினங் காள்பொழிந்து
விண்டு வெனப்பேர் பெற்றீர் விரிபொழிலில்
வண்டு வரிபாடும் மாநகர் கண்ணபுரத்
திண்டோள் திருமாலுக் கென்நோயே செப்புவிரே. 7

சீதமெனும் பேர்பெற்றீர் தெண்ணீர் சுமந்தென்றன்
நாதன்போல் நாட்டில் நலம்பெய்வீர் பேதமிலை
வேத மனுவாகும் மேனியன் கண்ணபுரச்
சோதி தனைக்கண் டுரைப்பீரென் சோர்விதுவே. 8

---

4. குருமணி—இரத்தினம். எழில் கொள்வீர்; அருள் பெய்வீர். அண்டர்—அண்டத்தில் வாழ்வோர்; ஆயர். 5. பெருமான் அருள் பொழிவது பொலக் கைம்மாறே இல்லாமல் பொழிவீர். 6. அம்புதம்—மேகம். ஆழி—கடல்; சூரியன். பெருமானைப் போல் கடலில் படிவீர்; சூரியனையும் மறைப்பீர். பாழி—வலிமை. 7. மஞ்சு—மேகம். வீண்டு—விஷ்ணு. விஷ்ணுவைப் போல் எங்கும் மண்டிப் பொழிவீர். ஆதலால் விண்டு என்ற பேர். 9. தெண்ணீர் சுமந்து... ஆதலால் சீதம் என்ற பேர். வேதமனு—திருமந்திரம். பேதம் இலை—வேறுபாடு காணாமல் எங்கும் பொழிவீர்.

குயினெனப் பேர்பெற்றீர் கொண்டல்காள்! நும்மொலியோ
குயிலி னிசைபோற் குளிர்ச்சி நலங்கொள்ளும்
கயல்க ளுகளுங் கயம்பரவுங் கண்ணபுரம்
நயந்துறை நம்பனுக்கென் காதல் நவிலுவிரே. 9

சீரார் முகில்காள்! சென்றெங்கும் நீர்பொழிவீர்
பேரிதே செல்லெனப் பெற்றீர் நலிவிதனைப்
பாரீரென் னுள்ளம் படிவானைக் கண்ணபுரஞ்
சேருந் திருமாலுக் கென்நிலை செப்புவிரே. 10

## 9. தலைவி நிலை

காயா மலர்காள்! கண்ணன் வணமிதுதான்
வாய்வ தும்மக்கே மகிழ்வீரோ?
ஏயு முளமோ இவன்பா லெனக்காகும்
நோயோ கொடிதால் நுவலுவதோ?
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 1

மலரும் மரைகாள்! மாலோன் நயனம்போல்
நலனே வனைந்தீர் நகைப்பீரோ?
நிலவே பொழியும் நேமிப் படையான்பால்
உலவுமென் னுள்ள முலைவுறுமே
என்னுயிர் காக்கும் வகையெதுவோ?

---

9. குயிலின் இசை போல் குளிர்ச்சி விளங்கும் உமது ஓசையில். ஆதலால் குயின் என்ற பேர். 10. பெருமான் எங்குந் தோன்றி அருள் பெய்வது போல், நீங்கள் எங்கும் சென்று பொழிவீர்; ஆதலால் செல் என்ற பேர். நலிவு—உடல் குலைந்த வகை.

1. தான் காண்பன யாவும் பெருமானை நினைப்பூட்டுவ தால், தலைவி தன் நிலையை இவை கண்டு ஏளனஞ் செய்வ தாகக் கருதுகிறாள். வணம்—வர்ணம். ஏயும்—இவனிடம் பொருந்தும். காயா மலர்கள் ஏளனஞ் செய்கின்றன 2. தாமரை மலர்கள் ஏளனஞ் செய்கின்றன. மரை—தாமரை.

கோவைக் கனிகாள்! கொண்டீ ரிமையோர்தந்
தேவ னிதழின் திறனிதுவே!
ஆவா! அவன்பா லணவும் மனமிதுவோ
நோவே வளர்ந்து நொசிவுறுமே.
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 3

முல்லை மலர்காள்! முந்நீர் வணங்கொண்ட
செல்வனின் மூரல் திறன்கொண்டீர்
நல்லா னிவணபால் நாடிய வென்நெஞ்சும்
அல்லல் கொளுமா லகைவின்றி.
என்னுயிர் காக்கும் வகையெதுவோ. 4

பிறையே! என்கோன் பெருமான் நுதலொப்ப
அரிதா மழகா லகந்தையிதோ?
இறைவன் தன்னிட மேகும் மனமிதுவோ
குறையே குவிந்து குலைவுறுமே!
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 5

காமன் கருப்புச் சிலையே! கருத்தெதுவோ?
கோமான் புருவப் பொலிவுற்றாய்
சாம நிறத்தினன் தாளை நினைப்பேற்குச்
சேம மிதுவோ தெளியகிலேன்!
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 6

இருளே! இருளே! எனதுயி ரான்குஞ்சிச்
சுருள்போல் துலங்கி மகிழுவையோ?
கருளக் கொடியுடைக் கண்ணனைக் காணாமல்
மருளே வளரும் மகிழ்வதுவென்?
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 7

---

4. இதழ்—உதடு. நொசிவு—துன்பம். 5. முந்நீர்—கடல். மூரல்—புன்னகை. 6. நுதல்—நெற்றி. பிறை—சந்திரன். அகந்தை—அகம்பாவம். குலைவு—அழிவு. 6. பொலிவு—குழகு, வாய்ப்பு. சாம - கறுத்த. சேமம்—நலம். 7. குஞ்சி—குழற்கற்றை. துலங்கி—விளங்கி. கருளன்—கருடன். மருள்—மனக் கலக்கம். மகிழ்வது என்—இதைக் கண்டு நீ மகிழ்வதுவோ?

குயிலே! குயிலே! கூவுவை யோவாதே
மயலே மலிந்து மனமிழந்தேன்
செயலே லறியேன் சிந்தை திருமால்பால்
நயனே நாடி நலிவுறவோ?
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 8

மயிலே! காரார் வண்ணன் நிறங்கண்டு
நயனார் நடனம் புரிவாய்நீ
மயலே கொண்டேன் மனமே சிதைந்ததுவே
அயர்வே கண்டே னலந்தலையால்.
என்னுயிர் காக்கும் வகையெதுவோ? 9

மானே! மாணார் மாதவன் வண்ணமெலாம்
கானிற் கண்டு களிப்பாயே
கோனை யென்பாற் குறுகிடக் கூவுவையேல்
நானுங் களித்து நலனுறுவேன்.
என்னுயிர் காக்கும் வகையிதுவே! 10

## 10. கண்ட கனவு

அன்று கனவினில் வந்தவ னச்சுத னென்தலைவன்
இன்று மகிழ்வினி லென்முன னிணையிலாச் சோதியிலே
நின்று, "துணையென நின்னைய டைந்துளன்
நித்திலமே!"
என்று நவின்றன னேடிநான் கனவிது கண்டேனே. 1

---

8. ஓவாத—இடையறாது மயல்—மயக்கம். நயனே—நன்கு. நலிவு—துன்பம், 9. வணம்—நிறம். மேகம் போன்ற நிறம். அயர்வு—சோர்வு. அலந்தலை—துன்பம், 10. வண்ணம்—குணம், நிறம். நானும்: உன்னைப் போலவே.

1. தான் கண்ட கனவைப் பதுமினி தன் தோழியிடம் கூறுவது. பெருமான் கனவில் சொல்லியது: "நித்திலமே! நின்னைத் துணையென அடைந்துளன்." ஏடி—தோழீ!. அச்சுதன்—தன்னை யண்டியவரை நழுவ விடாதவன்; தன்னுடைய காப்புத் தன்மையினின்றும் நழுவாதவன்.

மாவில மர்ந்திவன் மாநகர் மறுகினி னூர்தரவும்
தேவர்தி ரண்டனர் விண்மிசை தேமலர் தூவினரே
காவல ரீண்டனர் கண்டிடக் கடிமணச் செவ்விதனைப்
பாவலர் வாழ்த்தினர் பாங்கினிற் கனவிது கண்டேனே. 2

கோளின் நிலையினை யாய்தரும் குரவரர் கூடினரே
நாளை மணந்தனுக் காவதாம் நலனுடை நாளென்றார்
பாளை கமுகொடு மாவிலை நிரையடர் பந்தரிலே
கோளரி மாதவன் குறுகிடக் கனவிது கண்டேனே. 3

நித்தில நிரையினம் நிறைந்தநு நிலவெறி பந்தரிலே
மொய்த்தனர் பத்தர்கள் மூதுவ ரோதினர் மந்திரங்கள்
மைத்துனன் வாமனன் வந்தென தருகினிற் சோதியிலே
கைத்தலம் பற்றினன் களிப்பினிற் கனவிது கண்டேனே. 4

நாற்றிசை வாய்தரும் நற்புனல் தூவின ராங்குறையும்
பார்ப்பனச் சிட்டர்கள் பாங்கினி லாசிக ளோதினரே
வாய்ப்புற மாதவன் றன்னோடு மென்கர மேற்றிடவே
காப்புவ னைந்தனர் தோழிநான் கனவிது கண்டேனே. 5

மங்கலம் பாடினர் மங்கையர் வாச்சியம் பற்பலவே
எங்குமொ லித்தன என்னுயி ரானென் கழுத்தினிலே
மங்கல சூத்திரந் தன்னைவ னைந்தனன் வானவர்கள்
துங்கம லர்களைத் தூவிடக் கனவிது கண்டேனே. 6

மங்கலி லாநெறி நிற்பவர் மாமறை வல்லவர்தாம்
புங்கவர் வாழ்த்திடப் பூவையர் மங்கலம் பாடினரே
பைங்கிளி வண்ணன் பாவன னென்கரம் பற்றிவளர்
அங்கிவ லஞ்செயத் தோழிநான் கனவிது கண்டேனே. 7

---

2. மா—குதிரை. காவலர்—மன்னர். 3. கோள்—கிரகங்கள். கோள் அரி மாதவன்—சிங்கம் போல் வலிமையுடைய பெருமான்; நரசிங்க மூர்த்தியாகிய மாதவன். 4. நித்திலம்—முத்து. மைத்துனன்—கணவன். 5. நற்புனல்—தீர்த்தங்கள். காப்பு—கங்கணம். 6. மங்கலசூத்திரம்—திருமாங்கல்யச் சரடு. துங்க—சிறந்த, தூய. 7. புங்கவர்—சிறந்தோர். பூவையர்—பெண்கள். அங்கி—அக்நி.

இம்மையு மேழெழு சன்மமு மென்னுயி ராந்தலைவன்
நம்பன் நலந்திகழ் நாரணன் வானவர் நாயகன்றன்
செம்மலர்க் கையினா லென்பதம் பற்றிம கிழ்வுடனே
அம்மிமி தித்திடத் தோழிநான் கனவிது கண்டேனே. 8

என்னைய ணைத்திவ னானையின் மீதமர்ந் தின்புடனே
புன்னகை பூத்தனன், "பொன்னெனப் போந்துளை என்துணையாய்
மன்னுவை யென்னுறை" வென்றன னெங்கணும் வீதியிலே
இன்னிசை சூழ்ந்தது ஏடிநான் கனவிது கண்டேனே. 9

மாமகள் மண்மகள் மான்விழி நீளையும் முன்வந்தார்
ஆவலில் மங்கலம் பாடின ரழைத்தன ரார்வுடனே
"தேவிநீ எம்முடன் சேர்ந்தவள்" என்றெனை நன் கணைத்து,
"பாவைநீ வருகெனக்" கூறிடக் கனவிது கண்டேனே. 10

---

8 சன்மம்—பிறவி. நலந்திகழ்—நலமே வாய்ந்தவன். 9. பொன் என—பெரிய பிராட்டியார் போல். என் உறைவு மன்னுவை—எனது கோயிலிலே உறைவாய். 10. மாமகள்—பெரிய பிராட்டியார், மண்மகள்—பூமிப் பிராட்டியார்.

விண்ணப்பம்

## 1. புகல் இறைவனே

கருவிற் புகுந்து கடுமலத் தின் நடுவே
உருவா வுழன்றே னுனைநா னறிவேனோ?
அரியே! கணபுரத் தண்ணால்! அடியேனுக்
கருள்வா யருளே அடிமை யுனக்காவேன். 1

பிள்ளைப் பருவத்திற் பெற்றா ரருள்நோக்கி
எல்லே! வளர்ந்தே னுனையிறை யெண்ணலிலை
வள்ளால்! கணபுர மாலே! அடியேனை
எள்கல் செயாதுன் னடியினி லேற்பாயே. 2

பாலப் பருவத்திற் பாலர் பலரோடும்
சாலக் களித்தேன் சரணா நினையறியேன்
மாலே! கணபுரக் கோவே! மனமிதனுட்
கோலம் படர்த்துக் குடியாய் வருவாயே. 3

இளமைப் பருவத்தே யெல்லா மெனக்கெனவே
வளர்ந்தே னுனைநான் மனத்துள் வகுத்தேனோ?
வளனார் கணபுர மாலே! எனக்குன்பால்
தளராப் பரிவு தனைவளர்த் தேயருள்வாய். 4

---

1. நமது வாழ்க்கையில் ஒவ்வொரு நிலையிலும் பெருமானை வாழ்த்தி யுய்வதற்கு வாய்ப்பேயில்லை. ஆதலால் பெருமானது அருளே நோக்குவதாக, அவனிடம் விண்ணப்பஞ் செய்யும் வகையில் இப்பதிகம் அமைந்துள்ளது, கடுமலம்—பொறுக்கத் தகாதான மாசு. 2. பிள்ளைப் பருவத்தில் நான் உன்னை நினைக்க வாய்ப்பில்லை. எள்கல்செயாது—இகழாமல். 3 சால—பெரிதும். சரணா—புகலாக. 4 எனக்கெனவே—எனக்கே நன்மையெனக் கருதி. வகுத்தேனோ—வைக்கவில்லை. தளராப் பரிவு—குறையாத அன்பு,

காளைப் பருவத்தே காமற் கிலக்காகி
நாளுந் திளைத்தேன் நலனே பிறிதறியேன்
காளாய்! கணபுரக் கண்ணா! எளியேனுன்
தாளில் தாழுந் தகையே யருள்செய்வாய். 5

வயது முதிர்ந்த மனைவாழ் விதனைநான்
நயனா நினைப்பன் நன்மை பிறிதறியேன்
அயர்ந்தேன் கணபுரத் தன்பா! அறிந்தேனே
உயவா வுனதடி யுன்னு மிதுவொன்றே. 6

மூப்பு முதிரும் முடிவில் துனியாலே
ஆப்புண் டயர்வே னரியே! உனைநினையேன்
காப்பாய் கணபுரக் கண்ணா! குவிந்துவளர்
தீப்பால் வினைகளைத் தீர்ப்பா யருட்கடலே! 7

கூற்றங் குறுகும் கொடிதொரு பாசத்தால்
ஆற்றப் பிணைக்கு மடியே னுனைநினையேன்
போற்றி கணபுரப் பூமான்! உனதடியே
ஏற்றேன் சரணா எனைநீ தறிக்கொள்வாய். 8

எந்தாய்! எனக்கென வாகி யெனதாகுஞ்
சிந்தை நிறைந்தாய் தெவிட்டாத் தெளிதேனே!
வந்தாய் கணபுர மாலே! எனைக்காப்பான்
கொந்தார் துளவ முடியாய்! குருமணியே! 9

என்போ லிழிஞ ருய்தர எம்பெருமான்!
அன்பா லுறைந்தனை பாரிதி லர்ச்சையிலே
பொன்னே! கணபுரம் போந்தா யெனைக்காக்க
உன்போ லுளனோ காத்தற் கொருபுருடன்? 10

---

6. நயனா—நலமளிப்பதாக. மனை வாழ்க்கையைத் தவிர வேறு நினைக்கமாட்டேன். உயவா—உய்யும் வழியாக, நினைப்பாக. 7. குவிந்து வளர்-பல பிறவிகளாலே குன்றெனக் குவிந்து மேன்மேலும் வளரும். தீப்பால்—தீமையே இயல்பான. 8. கூற்றம்—யமன். பாசம்—கயிறு. 9. எனக்காக வந்தாய், என் சிந்தை புகுந்தாய். என்னைக் காக்கவே திருக்கண்ணபுரம் வந்தாய். 10. இழிஞர்—கீழ்ப்பட்டோர்.

## 2. வாழ்வின் மாயம்

மண்ணில் மண்டியே மாயு மிவ்வுடல்
மண்ணில் மண்டியே சாம்ப ராவதால்
எண்ணு தற்கிலை யென்று மிதனைநான்
கண்ண னேயுனைக் காண்பன் தஞ்சமா. 1

மேனி மாமையும் மென்மை யின்னன
வானின் வில்லென மங்கு மாதலால்
யானி வற்றையே யெண்ணு தற்கிலை
தேன றுந்துழாய் மார்ப! தேவனே! 2

காம னேயெனப் பிறங்கு காயமோ
வாம மேகுலைந் தருகில் மன்னுவோர்
ஆமி தெங்ஙனென் றிகழ்வ ராதலால்
நேமிக் கையனே! நினைப்ப னுன்னையே. 3

வீர மேசெறிந் தெவரும் வீய்தரப்
போர்பு ணர்ப்பவர் புன்மை பொங்கிடப்
பார்பு ணர்ப்பரால் பரம! நின்னலால்
யாரி டத்திலுங் காப்பு நாடவோ? 4

புவிய னைத்துமே புரக்கும் மன்னரோ
அவம டர்ந்திடத் தோற்பர் கோன்மையே
நிவரு நீண்முடித் தேவ! நின்னலால்
எவரு மில்லையே யேற்க வாம்புகல். 5

---

1. உலகில் எவையும் நிலையில. ஆதலால் பெருமானையே புகலாகப் பற்றினால் நிலையான பரமபதம் பெறலாம். பெருமானிடம் விண்ணப்பஞ் செய்யும் வகைத்து இப்பதிகம். உடல் நிலையில்லை; மண்ணிற் பிறந்து மண்ணே யாகும். 2. அழகு, மென்மை இவை வானவில் போல் மங்குவன. தேன் நறும் துழாய்—தேன் மணம் மல்கிய திருத்துழாய் 3. பேரழகு குலையும்; காண்பவர், "இது எவ்வாறு?" என்று வியப்பர். நேமி—சக்கரம். 4. வீரம் நிலையற்றது. வீரரென வாழ்பவர் மண்ணில் விழுவார். 5. மன்னவர் நிலைத்து ஆள்வதில்லை அவம்—தீமை, அசுபம். நிவரும்—மேலே ஓங்கும்.

இன்ப மென்பது மென்று மேற்பதோ?
துன்ப மொன்றுமே சூழும் வாழ்விலே
அன்ப னேயுன்ற னடியி ணைதனை
என்ம னத்திலே யேற்ப னேமமாய். 6

செல்வ மென்பதுஞ் சேரு மாயினும்
அல்ல லுக்கென வாகு மாதலால்
மல்லல் நீண்முடி மாய னேயென்றன்
செல்வ மாகுமுன் செவ்வி மேனியே. 7

கேட்டி லாததாய்க் கிளருங் கீர்த்தியோ
வாட்ட மேகொள வாய்ந்த தாதலால்
தேட்ட ரும்புகழ்த் தேவ! நின்புகழ்
கேட்ட லேயலால் வேறு கேட்பனோ? 8

போக மேயெனப் புணரு மங்கையர்
தேகம் நைதரச் சிரிப்ப ரேசியே
ஆகு மோர்பொரு ளற்ற போதிலே
மோக மெங்ஙனம் மொய்க்கும் நம்முழி? 9

வாழ்வு மண்ணிலே மலர்த லேயிலை
கேழி லாச்சுகம் கேட்ப தெங்ஙனே?
வாழி மாதவ! மன்ன! நின்கழல்
தாழ்ந்து வாழ்வதே தமியற் காகுமே. 10

---

6. இன்பம் நிலையற்றது. நம்மைச் சூழ்வது துன்பமே ஏமம்—காப்பு; பொன். 7. செல்வம் நிலையற்றது. அல்லலே விளைவிக்கும். மல்லல்—அழகிய. செவ்வி—அழகிய. 8. கீர்த்தி நிலையற்றது. கேட்டிலாத—இவ்வளவென்று அளவுபடக் கேட்டிடாத. வாட்டம் கொள—வாடும் இயல்புடையது. தேட்டரும்—தேடுவதற்கு அரியதான. 9. போகத்திற்காக மங்கையரைப் புணர்வது நிலைநில்லாது. தேகம் நைதர—உடல் மெலிந்த போது பரிகாசஞ் செய்வர். அன்றியும் நம்மிடம் பொருள் இல்லாத போது அவர்கள் நம்மிடம் மோகங் கொள்ள மாட்டார். 10. மலர்தல்—உகக்கும் வண்ண மாதல். கேழ்—ஒப்பு, கேட்பது எங்ஙனே—செவியால் கேட்பதும் இயலாது.

# 3. பொல்லா ஆக்கை

அழகினா லுலகை யீர்க்கு மாக்கையோ ரடவி யாகும்
இழிவெனுங் காடு மண்டி யெங்கணு மடரு மந்தோ?
வழியெதும் வெளியி லேக வாய்வதே யில்லை கர்ப்பக்
குழியிலே வீழ்வு றாமல் கோவலா! என்னைக் காப்பாய். 1

துன்பமே துளிர்க்க வாகுந் துயக்கமாங் கொற்ற வேந்தன்
ஒன்பது வாயில் கொண்ட வுடலிதைப் புரம தாக்கி
உன்பதம் நினைக்க கில்லா னுய்வதாம் வகைய துண்டோ
அன்பனே! அடிய னிங்ங னல்லுறா வண்ணங் காப்பாய். 2

காவல னிவனோ மூடக் காரிருள் தீப மாக
ஆவதோர் கன்ம மாகு மாசனத் தமர்ந்து தன்பால்
பாவமாம் மகளி ரீண்டு பணிசெய வாழ்வ னந்தோ!
தேவனே! என்று மிந்தத் தீமைசேர் பிறப்பு வேண்டேன். 3

வாய்ந்ததோர் தாப மூன்றாம் வண்ண நற் குடைநி ழற்ற
வேந்திவன் பிறர்க்குத் துன்பம் விளைத்தட ரின்ப
மொன்றே
மாந்துவன் போக மாக வாழ்விதே மனத்துக் கொள்வான்
மாந்தருக் குயிராங் கண்ணா! மண்ணிதிற் பிறவி
வேண்டேன். 4

---

இப் பதிகத்துக்கு ஆதாரம் உலகாரியர் அருளிய "ஸம்ஸார ஸாம்ராஜ்யம்" என்ற ரஹஸ்யம். செய்யுள்களில் உருவகம் தொடர்ந்து வந்துள்ளது.

1. உடல் காடு போல; உள்ளே சென்றால் வெளியே வர முடியாது. ஆக்கை—உடல். 2. ஒன்பது வாயில் வாய்ந்த நகரம் போலாம். இதற்கான வேந்தன்; துயக்கம்—மனத்தின் மயக்கம். துளிர்க்க—தளிர் வாய்ந்து. 3. இந்த வேந்தனுக்கு தீபம்: இருள்; அறிவின்மை. சிங்காதனம் கன்மங்களால் வரும் புண்ணிய பாவங்கள். பணி செய்யும் மகளிர்: பாவங்கள். 4. இவனுக்குக் கொற்றக் குடை: தாபங்கள் மூன்றாலானது; தாபங்கள்: முன்னைப்பிறவிகளில் கன்மங்களால், தெய்வத்தால், இயற்கையால் இவ்வேந்தன் அனுபவித்துக் களிப்பது: பிறர்க்கு இவன் விளைவிக்கும் துன்பம்.

கோனவ னருகிற் கூடுங் குரவரோ புலன்க ளைந்தாம்
தானகங் கொள்வ லாபம் தணிவிலாக் கீர்த்தி பூசை
ஆனவல் வினைகளாவ சாமரை வீச லங்கள்
நானிதா மிழிவு நாடேன் நம்பனே! என்னைக்காப்பாய். 5

மன்னிவன் பவனி வந்தால் மட்டிலாத் துன்ப மெல்லாம்
சின்னகா ளங்க ளாவ செய்ததீ வினைக ளெல்லாம்
துன்னுமா தங்க மாகச் சோர்வறத் தொடர்வ வந்தோர்!
இன்னதோ ரிழிவு வேண்டேன் இறைவனே! என்னைக்
காப்பாய். 6

சயம்பகர் தமர்க ளீட்டம் தகைகிலாக் கபமு மன்ன
வயங்கொள வாழ்த்தொ லிப்பார் காமகோ பங்க ளாவ
மயங்குறாப் பணிசெய் மாதர் நித்திரை தௌவை யந்தோ!
இயங்குமித் துன்பம் வேண்டேன் எந்தையே! என்னைக்
காப்பாய். 7

நரபதி யூருந் தேரோ நால்வகைப் பாசஞ் சேர்த்து
வரையிலா வன்மை வாய்ந்த புலன்களாம் வேழம் பூட்டிக்
குறையில தாகுங் கோளார் காலமாம் பாகன் கொள்ளும்
இறைவனே! இந்த வாக்கை யெனக்குறா வண்ணங்
காப்பாய். 8

---

5. இந்த மன்னனுக்குக் குரவர்—உபதேசம் செய்பவர், ஐம்புலன்கள். இவன் தனக்கு லாபமாகக் கொள்வன: கீர்த்தி, பூசை. விசிறி சாமரங்கள்: இவன் ஈட்டிய வினைகள். 6. பவனி யூரும் போது சின்னம், காளம் இவை: துன்பங்கள். இவனுக்கு முன் செல்லும் யானைகள் : இவன் செய்த தீவினைகள். மாதங்கம்—யானை 7 தொடர்ந்து வெற்றி கூறுவோர்: கபம். வாதம், பித்தம், தகைகிலா—தடுக்க முடியாத. வயங்கொள—வயமாக; வசமாக. தௌவை—மூதேவி. 8. இவன் ஊரும் தேரை இழுக்கக் கயிறு: நான்கு வகையான பாசம்: பலவகையான ஆசை. இழுக்கும்யானைகள் ஐம்புலன்கள். தேர்ப்பாகன்: காலம் வரையிலா—எல்லையிலாத, மிகுந்த. வன்மை—கொடுமை. கோள்—வலிமை. நரபதி—அரசன். வேழம்—யானை. தேர், காலம் ஆம் பாகன் கொள்ளும்.

மறுகினி லோங்கும் வாழ்த்தோ மன்னிவன் தனக்கே
வாழ்வன்
பிறர்கொள வின்ப மென்றும் பேணலே செய்யாப்
பெம்மான்
நெறியிவன் வளர்ப்ப தாவ நிலவிட நலன்த னக்கே
இறைவனே! யின்ன சன்ம மெனக்குறா வண்ணங்
காப்பாய். 9

ஆதியோ டந்த மில்லா வண்ணலே! அவனி வாழ்வார்
கேதமே தீர்க்க வந்தாய் கிளர்தருஞ் சோதி காட்டித்
தாதனாயுன்க ழற்கீழ்த் தாழ்த ந மென்னைக் காப்பாய்
காதலே நின்பாற் கொண்டேன்கணபுரம் வந்த கண்ணா!
10

## 4. சரணாகதி

அறிவே லிலன்நான் அறியே னொழுக்கம் பகர்தற்காம்
நெறியு மறியேன் நினைப்ப வனைத்துங் கொடியனவே
அரியே! அடியார்க் குயிரே! கண்ண புரத்திறைவா!
பரவி நின்தாள் படியப் பரனே! அருள்செய்வாய். 1

பிறவி பலவும் பிறந்தேன் பெயராக் கொடுவினையால்
இறையு முனைநா னெண்ணிற் கொள்ளா விழிதகையேன்
கரியைப் பரிவிற் காத்த கண்ண புரத்திறைவா!
கரையே காணாப் பிறவிக் கடலைக் குலைப்பாயோ? 2

---

9 ஸ்ருதிகளில் இவனது பெருமையை அறிவிக்கும் வகை: இவன் தனக்கேயாக வாழுந் தகையான்; பிறர்க்குத் துன்பமே கருதுவான். நெறி : தன் வாழ்க்கையிற் கொள்வது: நலன் தனக்கே என்பது. 10. கேதம்—துன்பம்.

1. சரணாகதி செய்வார், தமது இழிவை விண்ணப்பஞ் செய்து, பெருமானைப் புகலாகப் பற்றுவர். அறிவு, ஒழுக்கம் இல்லை; நெறி அறியேன். நினைப்பன எல்லாம் கொடியன. 2 முற்பிறவிகளில் செய்த தீவினைப் பயனாகப் பிறவிகள் பல பிறந்தேன். பெயரா—நீங்காத இறையும்—சிறிது காலமும். இழிதகையேன்—தாழ்ந்தவன். கரி—யானை; கஜேந்திரன். பிறவி பெருங்கடல் போல, இதற்குக் கரையே காணமுடியாது. குலைப்பாய்—அழிப்பாய்.

மாதர் தம்பால் வளர்க்கு மன்பே மனங்கொண்டேன்
ஏது முன்பா லெண்ணங் கொள்ளும் வகையில்லை
வேத நாவர் விரும்புங் கண்ண புரத்திறைவா!
தாத னாயுன் தாளிற் சாருந் தரமருள்வாய். 3

நோயே வளர்க்குங் கர்ப்பக் குழியுள் நுழைந்தேனே
நீயே யெனக்காம் புகலே நின்னை யடைந்துய்வேன்
காயாம் பூவின் வண்ணா! கண்ண புரத்திறைவா!
தாயாய்ப் பரிந்து தமியேற் கருளே புரிவாயால். 4

கருணை யிறையுங் காட்டேன் பெருமான்! உயிர்தம்பால்
அருளே வடிவாய் வந்தா யடியே னுனைப்பெற்றேன்
கருடன் வணங்கி வாழ்த்துங் கண்ண புரத்திறைவா!
பொருளா யென்னைக் கொண்டுன் பொன்னாம் பதஞ்
சேர்ப்பாய். 5

நின்னை யின்றி நேரும் புகலோ நினைப்பரிதால்
நின்ற னருளே யின்றி நினைக்க கிலன்கண்டாய்
பொன்னின புகரிற் பொலியுங் கண்ண புரத்திறைவா!
இன்றுன் கழல்க ளெண்ணு கின்றே னிருநிதியா. 6

துனியே யின்றிக் காப்பாய் தொல்லைப் பரஞ்சோதீ!
முனிவர் மனத்துள் தோய்ந்து முகிழும் முதுவோனே!
கனியே! கனியின் சுவையே! கண்ண புரத்திறைவா!
இனிநா னுன்னை யென்று மிறையும் பிரிவேனோ? 7

---

3. மாதரிடம் மனஞ் சென்றது; உன்னை நினைக்கவில்லை. தாதனாயுன்றன்...உனக்குத் தாதனாக ஏற்றுக் கொள்வாய். 4. நோய்: பாவச் செயல்களும் அவற்றால் துன்பமும். 5. உயிர்களிடத்துக் கருணை காட்ட மாட்டேன். 6. நீயே புகல், உன் அருளேயின்றி வேறு நினைக்க மாட்டேன். பொன்னின் புகரே பொலியும்—பொன் போல்ச் சோதியோடு விளங்கும். இருநிதி—சிறந்த செல்வம். 7. துனி—துன்பம். தொல்லைப் பரஞ்சோதீ—அநாதியாய் நிகரில்லாச் சோதி வடிவாயிருப்பவனே! முகிழும்—மலரும்; களிக்கும். முதுவோனே!—ஆதி மூர்த்தியே!

எளியேன் பிழைகள் செய்து மெனக்காம் புகலாவாய்
களைகண் நின்னை யல்லாற் காணக் கிடைப்பதுவோ?
வளனார் பொழில்கள் மல்குங் கண்ண புரத்திறைவா!
துளவ முடியாய்! உனக்கே தொண்ட னடியேனே. 8

குற்றங் குவியுங் கொள்கல மானேன் கொடியேனே
நற்ற மெதுவும் நாடேன் சொல்லோ நயவஞ்சம்
கற்றார் கருத்தி லூறுங் கண்ண புரத்திறைவா!
அற்றே னுன்ற னடிக்கே யடியேற் கருள்செய்வாய். 9

பிறந்தேன் பலவாம் பிறவி பெருமான்! உயிர்காப்பாய்!
பிறந்தார் பிறவி பேர்ந்து முன்றன் பிறவிகளோ
குறையா வென்றுங் கோமான்! கண்ண புரத்துறையும்
இறைவா! நின்னை யின்றி யெனக்கா மெவனுளனோ? 10

## 5. சரணாகதி

அன்னையு மென்னே காப்பினுக் காவாளோ?
தன்னல மொன்றே சாருங் கருத்துடையாள்
துன்பமே காணில் தூற்றிலும் வீசுமிவள்
உன்னையே பெருமா னுன்னுவன் தாயெனவே. 1

அத்தனு மென்னே காப்பினுக் காவானோ?
சிந்தந் திரிந்தாற் செய்வதுந் தானோரான்
கைத்தனன் பிள்ளையைக் காஞ்சனப் பேருடையான்
மெய்த்தவ ருன்னை மேவுவ ரத்தனென. 2

---

8. களைகண் — ஆதரவு, புகல், பற்றுக்கோடு. 9. நற்றம் - நலம். 10. பெருமான் பிறப்பதால் நமது பிறவிகள் தீரும், அவனது பிறவிகளோ என்ணில; நம்மைக் காப்பதற்கு அவன் என்றும் பிறந்து கொண்டேயிருப்பான்.

1. இப்பதிகத்திற்கு ஆதாரம்; உலகாரியர் அருளிய 'ப்ரபந்த பரித்ராணம்' என்ற ரஹஸ்யம். நமதுகாப்பிற்குத்தாய் ஆக மாட்டாள். தூறு—புதர். 2. தகப்பனும் காப்பது என்பது நேராது. காஞ்சனப் பேரான்—இரணியன் இவன் எடுத்துக் காட்டு.

சுற்றத் தினராற் சூழ்வது துன்பமதே
பற்றிப் பொருளெலாம் பாச மகற்றுவரால்
அற்றது பொருளெனில் லந்தோ அகலுவரே
நற்றவர் நின்னையே நாடுவர் சுற்றமென. 3

உடன்பிறந் தாரு முகப்பினுக் காவரோதாம்?
உடன்பிறந் தாருமே யொட்டல ராயினரால்
உடன்பிற வாததோ ரோங்கலின் மூலிகையே
படர்தருந் துன்பெலாம் பாற்றுமால் பற்றறவே. 4

கணவனுங் கண்டிடர் கதியெனக் கொள்ளுவரோ?
அணவிடுந் துன்பி லகற்றினன் காணொருவன்
துணிவெதுங் கொள்ளார் துவண்டன ரைவர்முனம்
துணையென நின்றவர் துனியைத் துடைத்தனைநீ. 5

வானிடை வைகல் திரியுங் கதிரவனும்
தானவ னாணையில் தன்திற லொடுங்கினனே
கூனிய வெண்பிறை யாயினன் கோள்மதியோ
வானவர் முன்னவ! மன்னுயிர் நீகாப்பாய். 6

வெந்திறல் வாய்ந்துயர் விண்ணெலாந் தான்புரக்கும்
இந்திரன் றானு மிளைத்தன னின்னலினால்
சிந்தையில் விண்ணவர் காப்பெனச் சேர்ப்பதுவோ?
அந்தமி லாதவுன் னருளையே நாடுவன்நான். 7

---

3. சூழ்வது—அடர்வது. பொருளைப்பற்றிய பின்பு பாசம் அகற்றுவர். செல்வம் அற்றது எனில்— 4. உடன்பிறந்தார்... ஒட்டலர் ஆயினர். வாலியும் சுக்ரீவனும். ஓங்கல்—மலை, 5. ஒருவன் : நளன். துவண்டார்—வருந்தினர். ஐவர்—பாண்டவர். துனி—துன்பம். 6 தானவன்—இராவணன். இவனுக் கஞ்சிக் கதிரவன் தனது ஒளியை மிதமாக்கிக் கொண்டான். கோள் மதி—கோளாகிய சந்திரன் கூனிய வெண்பிறை ஆயினன்: க்ஷய ரோகத்தால். 7. இந்திரனும் பலவாறு துன்புற்றான். இளைத்தனன்—மனம் நைந்தான். இன்னல் : பதம் இழந்தது, பிரமஹத்தியால் வருந்தியது போல்வன.

கங்கை சடையினிற் கொண்டவன் கண்ணுதலான்
தன்கரங் கொண்டோர் தலையோட் டுடன்துயரில்
எங்குந் திரிந்துன் னருளினை யேற்றானால்
எங்கோ! உனையலால் காப்புக் கெவராவர்? 8

உந்தி மலரி லுதித்தவன் முன்னுலகம்
முந்துறத் தோற்றிய மூத்தோ னயன்றானும்
அந்தமி லாரணந் தோற்றே யலந்தனனே
எந்தால்! நினையலா லெற்கொரு காப்புண்டோ? 9

அன்னையு மத்தனு மன்பருஞ் சுற்றமொடும்
பொன்னொடு பூமி புதல்வ ரனையோரும்
மன்னிடு மின்பமும் மண்ணினில் நீயென்றே
உன்னிணைத் தாள்களே வுன்னு மன் நாரணனே! 10

## 6. இறைவனே புகல்

நினைவி லேநிமிர் நிமல! நாதநின்
புனித மாமுரு போற்றி யுய்தலின்
இனிது வேறெது மில்லை திண்ணமே
கனியி ருப்பவோர் காய்க டிப்பரோ! 1

அயனொ டம்பரு மண்டி வாழ்த்திட
உயர நின்றநின் னுறைவை நாடொறும்
நயனின் நாடலின் பிறிது நாடவோ
முயலை விட்டெவர் காக்கை முன்னுவர்? 2

8. சிவபெருமானும் துன்பமுற்றான். எம் கோ!—எமக்கு இறைவனே! 9. பிரமனும் வருந்தினான். ஆரணம்—வேதம். 10. பெருமானே யாவு மாவான்,

1. திருமேனி யழகாலுங் குணங்களாலுஞ் சிறந்த பெருமானை விட்டு வேறு புகல் நாடுவதற்கில்லை. பழமொழி கள் வந்துள்ளன இப்பதிகத்தில். கனி இருக்கும் போது காய் கடிப்பதில்லை. இது போல் இந்த எழிலைத் தவிர அனுபவம் வேறில்லை. 2. அம்பர்—வானவர். உறைவு—கோயில். முயலை—நிலத்தில் வாழும் முயலை விட்டு வானிற் பறக்கும் காக்கையைத் தொடர்வதோ?

வளைத்து வானவர் வாழ்த்தும் நாதநின்
அளக்க ரும்புக ழகத்தி னிற்கொடு
திளைத்த லின்றெது சிந்தை சேர்ப்பதோ?
விளக்கி ருப்பமின் மினியை யேற்பரோ! 3

கோலை யோச்சிமுன் காலி மேய்த்தநின்
சீல மொன்றினைச் சிந்தை செய்தலின்
மேல தாமென வேறு மேவலோ?
சோலை விட்டயல் பாலை சூழ்வரோ? 4

சுரும்பு தோய்மலர் சூடும் மார்பநின்
அரும்பு கழ்தனைப் பாடி யாடலின்
விரும்பு தற்கென வேறு கொள்ளவோ?
கரும்பி ருக்கநாம் வேம்பு கப்பதோ? 5

பழகு நான்மறை பாங்கில் வாழ்த்துநின்
விழும மாம்புகழ் கேட்க வேட்பதின்
கெழும லாவதென் கேட்க லாவது
குழலி னோசையோ கூகை யோலமோ? 6

வான வர்தொழும் மாலனே யுன்றன்
மேனி வாமையே விழிசு வைத்தலால்
ஆன போகமோ அரிது வேறிலை
தேன்சு வைப்ப தின்பதோ தோகடு? 7

---

3. பெருமானது புகழை நினைத்தால் மனத்தின் இருள் நீங்கும். இந்த இருள் நீங்குவதற்காக வேண்டுவது விளக்கோ, மின்மினியோ? 4. காலி—பசு. சீலகுணம் சோலை போன்றது. இந்தச் சோலையை அனுபவிப்பதோ, அல்லது பாலையோ? 5. சுரும்பு—வண்டு. பெருமானது புகழைப் பாடுவது கரும்பு சுவைப்பது போல. பிற இரும்பு போல்வன. 6. விழுமம்—சிறப்பு. வேட்பத்தின்—விரும்புவதின். கெழுமல்—நிறைந்தது, பொருந்துவது. கேட்கலாவது குழலேயாம். கூகை—கோட்டான். ஓலம்—ஓசை(அசுபமானது). 7. வாமை—அழகு ஆன போகம் அரிது. இந்த போகத்தை அனுபவிப்பதே தேன் போல் இனியதாம். கடு—கடுக்காய். விழி சுவைத்தல்—கண்களால் அனுபவித்தல்

மலர்ம கள்வனை மார்வ னேயென்றன்
புணர்வி னைகளைப் போக்க வல்லவுன்
இணைப்ப தங்களே இருங்க டல்மிசை
புணையி ருப்பவோர் புல்லைப் பற்றவோ? 8

மால! என்னுயிர் வழங்கி நிற்கெனச்
சால வாழ்த்துவன் நாளுஞ் சாற்றிடில்
ஏலு மோவிது வேறெ வர்க்குமே?
மாலை யீவதோ மர்க்க டங்கொள? 9

கவின டர்பொழிற் கணபு ரத்துறை
கவிவ ரர்தொழுங் கண்ண! நிற்கலால்
நவையி லாதவென் நெஞ்சம் நாடுமோ?
அவிய யின்றிட நாய்க்க ளிப்பதோ? 10

## 7. இறைவ னேற்றம்

வானவ ரென்றும் மாந்திடு மமுதாய்
வளர்தரு மின்பப் பெருங்கடலாய்த்
தேனவிர் கூந்தற் தேவிய ரோடுந்
தேசினிற் திகழுந் திருவுருவே!
மானவ ருய்ய மகிழ்ந்திவண் வந்தாய்
மனங்கவர் சோதி மாமணியே!
நானுனை நாளும் நெஞ்சினிற் கொள்வன்
நம்பனே! கண்ண புரத்தமுதே! 1

---

8. புணர்வினைகள்—என்னைப் பற்றிய வினைகள். உன் இணைப்பதங்கள் போக்க வல்லன; வேறு இல்லை. இருங்கடல்... பற்றவோ—கடலைக் கடக்கும் புணை போன்றது உன் இணைப் பதம்; இதைப் பற்றாமல் புல்லைப் பற்றுவதோ? 9. என்னுடைய ஆன்மா உனக்கே யாவது. இது வேறு எவர்க்கென ஆனால் குரங்கின் கையிற் பூமாலை பட்டது படும். 10. என் நெஞ்சம் அவிசு போன்றது. இதை வேறு எவர்க்குமாக்கினால், நாய்க்கு இடுவது போலாம்.

1. பெருமானைக் கண்டு களிக்கும் வகை அவனிடம் விண்ணப்பஞ் செய்யபபடுவது இப்பதிகத்தில். வானவர்—நித்திய சூரிகள். தேன் அவிர்—தேன் பெருகுகின்ற.

தேனடர் சுவையே! தேனெனும் வெள்ளந்
　　தேங்கிட வளர்தருங் கற்பகத்தின்
கானடர் கனியே! கனிதருங் களிப்பே!
　　களிவளர் பயனாய் விளங்குவைநீ
கானக மெங்கு நின்புகழ் வண்டு
　　களித்திசை பாடக் கேட்டுனையென்
ஊனடர் கண்ணா லுன்னொளி கண்டேன்
　　உய்ந்தனன் கண்ண புரத்தமுதே! 2

கதிரவர் கோடி கலந்தொளி பெய்யக்
　　கலந்தட ரொளியுங் காரிருளாய்
வெதிர்வுற வுன்றன் மேனியொ ளிர்ந்து
　　விண்ணவர் விழிக்கமு தாவதுதான்
மதிவலர் நாளும் மறையினை யோதி
　　வணங்கிடும் மாலே! எனக்காகுங்
கதியென வுன்றன் கழலிணை கண்டேன்
　　காவணை கண்ண புரத்தமுதே! 3

மலர்தரு மரையின் மணந்தனின் மல்கி
　　வாசமே வளரும் மேனியனே!
மலரினும் மென்மை வாமமுங் கொண்டென்
　　மனந்தனில் தோய்ந்தாய் மணிவணனே!

---

2 தேனின் சுவை போன்றவன், பெருமான். தேன் எனும்....கனியே—தேனே விளை நீராக வளர்ந்த கற்பகச் சோலை ஈன்ற கனியே! ஊன் அடர் கண்ணால்—மாமிச மய மான விழியால். கண்ணால் காண இயலாத உன்னைக் கண்ணால் கண்டேன். 3. மேனியின் சோதி: கோடிக் கணக்கில் கதிரவர் கலந்தால், விளங்கும் சோதியும் தோற்குமாறு, பெரு மானின் சோதி. வெதிர்வுறும்—அஞ்சிடும். விண்ணவர்—நித்ய சூரிகள்: "ஸதா பச்யந்தி ஸூரய.:" கதியென...கண்டேன— இந்த அர்ச்சையில் நீ எனக்குப் புகலாவது கண்டேன். 4. மேனி யின் பரிமளம். மரை—தாமரை. வாமம்—அழகு. இரண்டாம் பாட்டில் பெருமான்: "ஸர்வரஸ:" எலலாச் சுவையுமாவான்; இங்கு "ஸர்வகந்தః" எல்லாப் பரிமளமுமாவான் என்பது.

நிலனிது தன்னின் நித்தில மாகும்
நின்னுறை வதனை வலஞ்செய்யும்
நலனிது கண்டேன் நானுனை யின்றி
நாடவோ? கண்ண புரத்தமுதே! 4

சுடரெறி மணியின் சோதியின் மிக்க
தூமணி மார்பின் புகரிடையே
படருவ செவ்விப் பவளநன் முத்தும்
பாசடர் துளவப் படலையுமே
படியிது தன்னிற் படர்தர நெறியே
பலபல வடிவில் பிறங்கிடுமுன்
அடியிணை யடியேன் சென்னியிற் சேர்ப்பன்
அணியெனக் கண்ண புரத்தமுதே! 5

ஞானமு மின்பும் நவநவ மாக
நலனதும் வாய்ந்த நின்பெருமை
தானது சாற்றுந் தகையின ரெவரோ?
சாலவே நீயும் பகருவையோ?
வானெழ வோங்கும் நிலவிது வீசும்
மணிமுடி சூடும் மழவொளியே!
நானுன தன்பன் நவிலுவ னுன்றன்
நாமமே கண்ண புரத்தமுதே! 6

அமுதெனும் வேதப் பெயலினுஞ் சீர்த்த
வமிழ்தெனப் பாயு மருந்தமிழா
மமுதினி லாழ்ந்து திளைத்திடு முன்ற
னரும்புக ழென்செவிக் காமமுதே

---

நித்திலம்—முத்து. இந்தத் திருக்கோயில் நிலத்துக்கு நித்திலம் போல் சிறந்ததாகும். 5. சோதி. சுடர் எறி மணி—சோதியடர்ந்த பச்சை மணி. திருமார்பில் திகழ்வன, பவள மாலை, முத்து மாலை, துளவ மாலை. பாசடர்—பசுமையான. படலை—மாலை. படி—பூமி. 6. அரிய குணங்கள்: ஞானம், இன்பம். நவநவமாக—அப்போதைக் கப்போது புதியனவாக. நிலவு—சோதி; முடியின் ஒளி. மழவொளி—இளமையோடு சேர்ந்த ஒளி. 7. ஆழ்வார்களின் பாடல்கள், அமுதமாகிய வேதப் பொழிவிலும் சிறந்த அமுதமாவன.

சமதமந் தனமா வாய்ந்தவர் சான்றோர்
தமக்கருள் பொழியுந் தகையினனே!
இமையெனுஞ் செவியே நின்புக ழின்றி
யேற்குமோ கண்ண புரத்தமுதே? 7

நாதனே! உன்றன் சீலமே கூறில்
நாவிரண் டாயிரம் வாய்ந்தவனாம்
ஆதியன் சேட னடைவினிற் பகரு
மாற்றலே வாய்ந்தவ னோவறியேன்
பேதமே தின்றி முல்லைய ரோடும்
பெருமையிற் பழகி வளர்ந்தனையுன்
பாதமே யென்றன் சிரந்தனிற் சேர்ப்பன்
பரமெனக் கண்ண புரத்தமுதே! 8

ஆருயி ரெல்லாம் படைத்தவை காக்கு
மன்னையு மத்தனு மாகுவை நீ
ஓருயி ராகுந் துணைவியுஞ் சுற்ற
மொண்பொரு ளானா யெனக்கருளால்
காரடர் மேனிச் சோதியில் வந்தென்
கருத்தினிற் றோய்ந்தாய் கற்பகமே!
பாருய வந்தாய் நின்பதம் படிந்தேன்
பண்ணவ! கண்ண புரத்தமுதே! 9

ஏதமே யென்பாற் காண்கிலை யெந்தாய்!
ஏத்தருங் கருணைப் பெருங்கடலே!
கோதடர் சிந்தைக் கோனொடு மாமன்
கூடின ருன்கழ லுன்னருளால்

---

*சமம்*—இந்திரியங்களை அடக்குதல். *தமம்*—மனத்தை அடக்குதல். *இமையெனும்*—நொடிப் பொழுதேனும். 8. *ஆதியன் சேடன்*—ஆதிசேஷன் *அடைவினில்*—ஏற்றவாறு. *முல்லையர்*—இடையர். *பேதமேயின்றி*; "நான் உங்களுக்குச் சுற்றம்" என்று மார்பு தட்டிக்கொண்டு. 9. நீயே எல்லா உறவுமாவாய். ஓர் உயிர் ஆகும் *துணைவி*—உயிரே போல் பழகும் மனைவி *பண்ணவ*—பகவானே! 10. *ஏதம்*—குற்றம். நான் "குற்றக் கொள்கலம்" எனினும் குற்றம் பார்க்க மாட்டாய். *கோது*—குற்றம். *கோன்*—சிசுபாலன். *மாமன்*—கஞ்சன்.

சோதியே சிறிதுந் துவளுறா வண்ணம்
தோன்றினை தொண்டர் மாந்தவென
ஆதியே! அடியேன் நாடுவ னுன்ற
னடியிணை கண்ண புரத்தமுதே! 10

## 8. நன்றி

தேடித் திரிந்தென் சிந்தை திகழ்ந்தனை பல்பிறப்பாற்
பாடு படாவணம் பத்தியே நல்கினை பல்லுயிர்கள்
நாடி வணங்கிட நானிலம் நாடினை நாரணனே!
மாட மாளிகை வானடர் கண்ண புரத்திறைவா! 1

முன்னை வினையாற் பிறவியாம் முந்நீர் முழுகியிடும்
என்னை யுயர்த்திட வுன்ற னிணையடி யோர்புணையா
உன்ன வுணர்த்தினை யுகந்தனை யும்பர் பெருமானே!
என்னே! நினதருள்! ஈசனே! கண்ண புரத்திறைவா! 2

வேத மனித்தனை மேலாம் நெறியினைத் தெற்றெனவே
ஓதி யுணர்த்தக் குருவர னொண்கழல் காட்டினைநீ
பேத மகைத்தனன் பேறெனை நின்னடித் தொண்டிற்கே
காதல் வளர்ந்தது கனித்தனன் கண்ண புரத்திறைவா! 3

என்னுயி ரென்ற னுடலினும் வேறென எண்ணுவன்நான்
உன்னுடைச் செல்வ மெனதுயி ரென்றிது மோர்ந்துளனே
உன்னகத் தொன்றும் மணியென யென்னை யுகப்பாயால்
மின்னொளிர் மேனிய விண்டுவே! கண்ணபுரத்திறைவா! 4

---

1. பெருமானால் பெற்ற நன்மைகளை அவன்முன்னே விண்ணப்பஞ் செய்து நன்றி நவில்வது, இப்பதிகம். என்னைத் தேடி, உள்ளத்தில் புகுந்து, பக்தியை விளைவித்தாய். 2. முன்னைப் பிறவிகளில் செய்த தீவினைகளால் பிறவியாகிய கடலில் மூழ்கும் எனக்கு நீ தெப்பமாவாய்; உன்னை நினைக்கு மாறு அருள் செய்தாய். 3. பின்னும் செய்தவை: வேதம், நெறி இவற்றை வெளியிட்டாய்; இவற்றை உபதேசிக்க எனக்கு ஆசானைத் தோற்றுவித்தாய். 4. தெளிந்த ஞானத்தை அருளினாய், ஆத்மா உடலினும் வேறுபட்டது என்று. ஆத்மா உனது செல்வம், உனது மார்பிலுள்ள மணி போல் சிறந்தது.

என்னை நினைத்தனை யென்னு ளுறைந்தனை யென்
னையுமே
உன்னை யுளந்தனி லுன்ன நினைத்தனை யுத்தமனே!
என்னையு மென்ற னுடைமையு மெந்தாய்! உனக்காக்கி
மன்னுயிர் காத்திடும் மாதவ! கண்ண புரத்திறைவா! 5

மேலுயர் வெள்ளம் விழுங்கா வணமுயிர் யாவையுமே
கோலக் குழவியா யுன்றன் வயிற்றினிற் கொண்டனைநீ
கால முணர்ந்தவை தோற்றியே காத்தாய் கருணையனே!
மாலே! புகலென வந்தனை கண்ண புரத்திறைவா! 6

மனையும் பொருளொடு வாழ்வு மினையன யாவை
யுமாய
நினையே நினைப்பன் நிமலனே! நின்கழல் போற்றுமுளந்
தனையே கொண்டேன் தமியேன் தலையில் நினதடியே
புனைவன் பொன்னே! புனிதனே! கண்ண
புரத்திறைவா! 7

காலன் தமராற் கடுமையொ டச்சமுங் காணகிலேன்
மாலோன் றனக்குயி ரென்றென் மருங்கிலும் வாராரே
நீலக் கடலுள் நின்துயில் நீத்துயி ருய்விப்பான்
மாலனே! வந்து மகிழ்ந்தனை கண்ண புரத்திறைவா! 8

---

5. நான் பெற்ற நலம். என்னை நினைத்தாய், என்னுள் உறைந்தாய், உன்னையே நினைக்கச் செய்தாய். ஆதலால்: நானும் என் உடைமையும் உனக்கே. நம: என்பதன் கருத்து. 6 செய்த பேருதவி: வெள்ளத்தில் காத்தாய்; பின்னை உன் வயிற்றினின்றும் வெளியிட்டாய். காலம் : வெளியிட வேண்டிய காலம். பின்னும் காப்பதற்காக இங்குக் கோயிலில் உறைந்தாய். 7. நான் நினைப்பது: மனைவி, பொருள், நல்வாழ்வு எல்லாம் நீயே என்று. மனை-மனைவி. பொன்னே!-சிறந்தவனே 8. யம படர்களால் அச்சமில்லை. என்னைக் கண்டதும் அவர்கள் "இவன் மாலோனுக்கு உயிர்" என்று அஞ்சி ஓடுவர். "வள்ளலே! உன்தமர்க்கென்றும் நமன்தமர் கள்ளர் போல், கண்ணபுரத்துறையம்மானே!' உயிர்களைக் காப்பதற்கெனவே நீ கடலினின்றும் இங்கு வந்தாய்: துயில்—அறிதுயில்; உயிர்களைக் காக்கும் வகையை ஆய்ந்து உறைவது.

**நினைவோ நெகிழுறா துன்பால் நிலைக்க நினைப்பாய்நீ**
**துனியே லறியேன் புவியிதில் தோன்றினு முன்னருளால்**
**கனியே! கரும்பே! கரும்பினின் சாறே! தெளிதேனே!**
**இனியுன் னருளே யெண்ணுவன் கண்ண புரத்திறைவா! 9**

**தொண்டர் குலந்தனில் தோற்றி யெனைநீ யுன்கழற்காந்**
**தொண்டினி லுய்த்தனை தொன்னெறி காட்டினை**
**தொல்புகழோய்!**
**கண்டன னுன்றன் கருணை கடலினும் மீப்பரந்த**
**மண்டியுன் பொன்னடி வாழ்த்துவன் கண்ண**
**புரத்திறைவா! 10**

---

9. மேலும் செய்த நன்மை: நினைவு உன்னிடம் நிலைத்திருக்கச் செய்தாய். கனி என்னைப் பெறாவிட்டால் கனிவது நீ. 10. யாவற்றிலும் மேம்பட்டதான நன்மை, உனது தொண்டர்களது குலத்திற் பிறக்குமாறு செய்தாய்; சிறந்த நெறியை அவர்கள் மூலயாகக் காட்டினாய், உன் கருணை கடலினும் மிகப் பரந்தது.

# கைசிக புராணம்

[தமிழாக்கம்]

## காப்பு

வாரிதியுஞ் சுருங்கவொரு வாராக மாவுருவில்
காரடருங் குலவரைகள் கணகணப்பக் குளம்பினிடை
பாரிதனை யிடந்தேந்திப் பந்தெனவே கோடுதனில்
சீரணவ நின்றபிரான் சேவடியே சரணாமே. 1

அல்லடரு மார்கலியி லாழ்ந்துலவும் வாராகன்
வில்லடருங் கோட்டினிலே மேதினியாங் கோமளத்தை
மல்லிகையின் முகிழ்நுனியில் வண்டெனவேவைத்தனனே
செல்வரிவர் சீர்மையெலாஞ் செப்புவமே சேமமுற. 2

## நூல்

அவனிதனை யாகத் தணைத்து வராகன்
நுவலு மிதுவே யினித்து. 1

மைத்தடங் கண்ணீ! மணந்தன்னை யெப்போதும்
வைத்து நமதுழியே வைகறையிற் பாடிவரும்
பத்த னொருவனுளன் பாவாய்! அருந்தகையன்
மெத்தப் பிறிதொன்றும் வேண்டாதான் விருப்பினிலே. 2

---

**காப்பு** 1. வாரிதி—கடல். கார்—மேகம் குலவரை—ஏழு குல பர்வதங்கள். கணகணப்ப—சிலம்பின் பரல் போல் ஒலி செய்ய. கோடு—கொம்பு. 2. அல்—இருள். வில்—ஒளி. முகிழ்—மொட்டு.

**நூல்.** 1. அவனி—பூமி. நுவலும்—சொன்னான். 2. நமதுழி—நம்பால். வைகறை—விடியற்காலம்,

அளியாற் சிறப்புறுவோய்! அன்பன் பொழிவுதனில்
ஒளிரு மெழுத்துக்க ளொவ்வொன்றுக் கேற்குமிவன்
வளமுறவே வாசவனோ டாயிரமாண் டம்பரிலே
களியடர ஓர்வாழ்வு கான மிசைத்திசைத்தே. 3

அழகோடு மார்ந்த குணத்தோடு மித்தூயோன்
வழுவா தறநெறியில் வாழ்வோருள் முனைவனாய்
விழியா யிரமுடையான் வச்சிரக்கை மேலனுடன்
அழியாப் பரிவி லனுதினமும் வாழுவனே. 4

இந்திரனோ டொப்ப இவனுறைந்து மன்பாலே
சந்ததமும் நம்புகழே சாற்றி மகிழுவனால்
நந்தலிலாப் பத்துடையான் நாடரிய சீலத்தான்
சிந்தையுரை செய்கையிவை சேர்க்குமிவன் நம்பாலே. 5

நம்புகழே பாடுமிவன் வானில் நழுவுங்கால்
சும்மையெனப் பாரடருந் தொல்லை யறநீங்கி
மும்மை யணவாத மூத்தோர்வாழ் பொன்னுலகில்
நம்மடியார் தம்மோடும் நாளும் நலமுறுவன். 6

அருளின் பொழிவெனவே அவ்வுரையைக் கேட்டுகந்த
அரிவை வசுந்தரையோ ஆனனத்தில் தேசடர
வரையில் புகரான் வராகன் தனையணைத்தாள்,
"உரைப்ப னிதுகேளாய்" என்றிங்ங னோதினளே. 7

---

3. அளி—அன்பு, அருள், வாசவன்—இந்திரன், அம்பர்—மேலே (வானில்). 4. விழி ஆயிரமுடையான்...மேலோன்—இந்திரன். 5. சந்ததமும்—எப்போதும். நந்தல்—கெடுதல். சிந்தை, உரை, செய்கை இவை நம்பாலே சேர்க்கும்— 6. நழுவுங்கால்—புண்ணியத்தை அனுபவித்து, வானிலிருந்து நீங்கும்போது. சும்மை— சுமை. மும்மை— முக்காலம். மூத்தோர்— நித்யசூரிகள். பொன்னுலகு— வைகுந்தம். 7. அரிவை—பெண். வசுந்தரை— பூமிப் பிராட்டி. ஆனனம்—முகம். புகர்—ஒளி.

"பெருமானே! கீதத்தாற் பேறோ பெரிதென்றாய்
அரிதெனவே நீபுகழ்வாய் அன்பே! மிகவுகந்தேன்
ஒருவ னுறுதவமா யுன்நாமம் பாடுமவன்
தெருளன் தரங்கேட்கச் சிந்தை பெருகுமிதே." 8

பட்டும் பரிவினிலே பார்மகட்குக் கூறும்
அடர வராக னணைத்து. 9

இனிக்கு மிதுகேட்பாய் என்தேவீ! என்னுயிரே!
தனித்த புகழேந்துந் தாதன் தரந்தன்னை
நினைத்துத் தவமொன்றே நேரிலதாய்க் கீதங்கள்
அனைத்துலகும் போற்ற அவன்பொழிந்தான் நம்
புகழே. 10

தென்னன் திசைக்கணியாச் சேண்பா லுயர்ந்தடர்ந்து
மன்னும் மகேந்திரமா மோங்கல் வளர்த்தளிக்கும்
பொன்னாம் நதியொன்று பாற்கடலாம் பேரோதத்
தென்பாற் கடல்புணரத் தேசில் விரைதருமே. 11

கோமளமே! ஆங்குக் குறுங்குடியென் றோங்குபுகழ்த்
தேமருவுஞ் சோலையடர் சித்தாச் சிரமத்தில்
நேமங்கைக் கொள்வனுளன் நீசர் குலம்பிறந்தும்
சாமந் தனிலினிக்கப் பாடுந் தகையினனே. 12

வசுந்தரையே! தாழ்ந்த வழிவந்து மித்தூயோன்
அசும்பிலனாய் நம்பா லரியதொரு பத்துடையான்
பசும்பொ னெனப்போற்றும் பத்தி வளனுடையான்
நசையடர நாணாளும் நம்புகழே பாடுவனே. 13

---

8. தெருளன்—அறிவுடையவன். 9. வராகன், அடர அணைத்துக் கூறும். 10. நேர்—ஒப்பு. 11. ஓங்கல்—மலை. பாற்கடலாம் பேரோத—திருப்பாற்கடல் என்று பேர் வாய்ந்த. 12. தேமருவும்—தெய்வத் தன்மை வாய்ந்த. நேமம்—நியமம். 13. வழி—குலம். அசும்பு—குற்றம். நசை—விருப்பம்.

காரிகையே! கார்த்திகைநன் மாத வளர்பக்கம்
சீரார் துவாதசிநாட் கங்குலியா மந்தனிலே
பாரோர் தமைமறந்து பஞ்சணையில் தோய்ந்துறங்க
வாரத் திவன்வந்தான் மாலா லிசைபாட. 14

பெருகு மிருளிற் பிரமப் பே யொன்றதரில்
பருவுடலுஞ் செம்மயிருங் பாழிப் பகுவாயும்
வெருவுறவே தோன்றி விரைந்ததுவே அவ்வழியே
வருவான்பால் மாளாப் பசியாலே வாஞ்சையெழ. 15

நோன்பால் நொசிவுற்ற நம்பாடு வானாங்கே
தானோர் முயற்சியினால் தப்ப வலியிலனாய்
ஊனா லுடயுதிணர்த்த பேல் முகக்கவொரு
தேனிற் சிறக்குங் குரலாலே செப்பினனே. 16

''பிரமப் பெரும்பேயே! பேறாகக் கண்விழித்திவ்
விரவினிலே பாடி இறையவனை வாழ்த்துவதே
அரியதொரு நோன்பாகக் கொண்டேன் அதற்கெனவே
விரைகின்றே னென்னை விடுவிப்பா யன்பாலே.'' 17

ஈனப் பிறவி பிறந்தாலு மித்தூயோன்
தேனார் துளவத்தான் சீர்நினைந்து நிற்குங்கால்
ஆனாத சீற்றத்தி லாழ்ந்த பெரும்பேயோ
தானேதுங் கூறா தமுக்கிப் பித்திடிததுவே. 18

---

14. கங்குல்—இரவு. யாமம்—நள்ளிரவு. வாரம்—அன்பு. 15. அதர்—வழி. பகுவாய்—அகன்ற வாய். வெருவுற—அஞ்ச. வாஞ்சை—ஆசை. 16. நொசிவு—துவள்வு, வாட்டம். 17. இவ் விரவினில்...பாடி, வாழ்த்துவது, நோன்பு ஆக கொண்டேன். 18. ஆனாத—குறையாத, அடங்காத.

தன்னை யயிலவெனச் சாரும் பெரும்பேய்க்குத்
தன்னிகரே யில்லாத தாதனிவன் சாற்றினனே,
"என்னேநின் செய்கையிதே! எற்கிதுநீ கூறுவையால்
என்செய்வா னென்னைநீ யிவ்வணமே கொள்ளுவதே?" 19

அடல்மிக்க பேயதுவோ ஆங்காங்கே மாந்தர்தம்
உடல்பற்று மூனுதிர முண்ணும் விருப்புளதால்
உடல்வற்றி முன்நிற்குந் தாத னுரைகேட்டுத்
திடமுற்ற தீமையினாற் செப்பியதா லிவ்வணமே. 20

"இரவுபக லீரைந் துணவின்றி யேங்குவனான்
விரவும் பசியோ மிகக்கெழுதால் எல்லேயுன்
வரவோ இறைவன் வகுத்ததுவும் என்பிடியில்
ஒருவ லுனக்கில்லை ஓர்வை உறுதியிதே. 21

"உன்னுடலை யிப்போதே யங்கங்க ளொவ்வொன்றாய்ப்
பின்னமுறப் பிய்த்தூனுஞ் சோரிப் பெருக்கோடும்
என்னே! நிணந்தனையு மீசனுக் கர்ப்பித்துத்
தின்பன் பசிதீரத் திண்ண மிதுபோழ்தே." 22

பிரமப்பேய் வாயூறிப் பேசியதாஞ் சொற்கேட்டுப்
பிரமஞ் சிறிதேனுங் கொள்ளாமற் பேராது
பரவமனம் நம்பாலே பாடுஞ்சீர்ப் பத்தனிவன்
விரியு மினிமையிலே யிங்ஙன் விளம்பினனே. 23

---

19. அயில—உண்ண. தன் நிகர்—தனக்கு ஒப்பு. எற்கு—எனக்கு. 20. அடல்—வலி, பலம். உடல் பற்றும் ஊன் (மாமிசம்), உதிரம் உண்ணும்— 21. இரவு...ஐந்து—பத்து நாட்கள் முழுதும் வகுத்தது – எனக்கெனவே அமைத்தது. ஒருவல்—விலகுதல். ஓர்வை—அறிந்துகொள். 22. பிய்த்து, ஊனும் (மாமிசமும்), சோரி (உதிரம்) பெருக்கோடும்—. 23. பிரமம்—மனக்கலக்கம். மனம் பேராது, நம்மால் பரவ—.

"சாற்றுமிது நீகேட்பாய் தக்க துணர்த்துவனே
ஏற்றதுவே நீயுரைத்தாய் ஈச னிதுவிதித்தான்
ஆற்றப் பசிதன்னை ஊன்தேடு மார்வமிதே
மாற்ற முரைப்பேனோ? மாற்றகிலன் நின்துணிவை. 24

"கடிய விரதமிது காணத்தா லிவ்விரவு
நெடுமா லுகப்புதனை நேடிக் கழிப்பேனான்
விடியல் வரைபொறுப்பாய் மீள்வன் விரைந்திங்கே
படியாப் பசிதீர்வாய் என்னைப் பகுத்துண்டே. 25

"விரத மிதுகண்டாய் ஈசன் விருப்புக்காம்
இரதியிலே நாரணனு மிஃதேற்பன், ஊறின்றிச்
சரதம் நிகழவிது தக்கோய்! அருள்செய்வாய்
வரமா மிதுகேட்பன் ஈவாய் மனங்குளிர." 26

நையாப் பசியால் நலிவுற்றுத் திண்ணெனவே
செய்வ தனைநினைத்துச் செப்பும் பிரமப்பேய்
செய்ய தவத்துற்ற செல்வன் தனைநோக்கிக்
கையின் பிடியைக் கணமுந் தளர்த்திலதே. 27

"கீழ்மகனே! நின்சொல்லுங் கேவலமாம் நீயொப்ப
மாழ்குவையோ? பாரிதுதான் மானப் பெரிதன்றோ?
வாழ்வுக்கா மூர்கள் மலிந்துளவே நீயிங்கே
வாழ்வகற்றிப் போவாயால் மற்றோர் தலம்நாடி. 28

24. *உணர்த்துவன்—அறிவிப்பேன். ஊன் தேடும் ஆர்வம், ஈசன் விதித்தான்— மாற்றம்—மாறுபட்ட சொல். நின் துணிவை மாற்றகிலன் (மாற்ற எனக்கு இயலாது)—.* 25. *நேடி—விரும்பி.* 26. *இரதி—களிப்பு. சரதம்—உறுதியாக. நையா—அடங்காத. கணம்—கணப்போது.* 28. *மாழ்குவையோ—மயங்கிக் கூறுகிறாய். மான—மிக.*

"உன்னுடலைக் காத்தற்கோ ரோர்வுடையை மீண்டிங்கு
என்னே! வருவாயோ? ஏற்பதுவோ பொய்யுரைதான்?
என்னுழியே மீள்வனென என்முன் உரைப்பதிது
நின்பிறவி போலொக்க நேர்தருமால் தண்ணியனே!" 29

ஊனா லுயிர்வாழ்வா னூறுசெயும் பேய்மறுத்துத்
தானோதுஞ் சங்கை தனைக்கேட்டுத் தாழ்வின்றிக்
கானத்தில் நம்புகழே பாடுங் கருத்துடையான்
தேனி னினித்தகுரல் தன்னிலிது செப்பினனே. 30

"என்னை இழிஞ னெனவிளித்தாய் இப்பிறவி
முன்னைப் பிறவிகளின் மொய்வினையாற் பெற்றிடினும்
மன்னி நெறிதன்னில் மாந்தர்க் குரியனவாய்
உன்னுந் தெருள்வாய்ந்தேன் உற்ற பிறவியிதில். 31

"மூவுலகுக் கோரிறையாம் முன்னோன் பரம்பரனைப்
பாவிசைத்துப் பள்ளி யுணர்த்தி மகிழ்வித்து
மேவுவனான் திண்ணமிது மெய்யென்று நம்புதற்கா
ஆவ உறுதிச்சொல் அன்பா! இதுகேட்பாய். 32

"சத்தியமே மூலமெனச் சார்வ உலகெல்லாம்
சத்தியத்தி லெல்லாமுந் தாளுன்றி நிற்பனவால்
சத்தியமே நானுரைப்பன் தாழ்தல் சிறிதுமிலை
மித்யை தனையறியேன் மெய்யாம் விளம்புமிதே. 33

---

29. ஓர்வு உடையை—இவ்வாறு ஆராய்ந்தாய். 30. உயிர் வாழ்வான்—உயிர் வாழ்வதற்காக. ஊறு—துன்பம். 31. மொய் வினையால்—அடர்ந்த கொடிய வினைகளாலே. நெறி தன்னில் மன்னி—நல்ல நெறியில் படிந்து. மாந்தர்க்கு உரியனவாய் உன்னும் (கருதுகிற). தெருள்—சிறந்த அறிவு. 32. நான் மேவுவன்—இங்கு வருவேன். 33. தாழ்தல்—குறைதல். மித்யை—பொய். விளம்பும் இது மெய்—.

"பேயே! செவியேற்பாய் பேசுஞ் சபதமிது
மாயம் மனங்கொள்ளேன் மீண்டு வருவேனான்
வாயு முறுதிச்சொற் கேட்பாய் வகையிதுவே
மேவும் கொடுமையெலாம் மீளேனே லிவ்விடமே. 34

"மோகத்தால் யாவன் முற்றும் பிடிப்புண்டு
போகத்திற் காகப் புணர்வான் பிறர்மனையைச்
சோகத்திற் காகுந் துனிசெய் நரகடைவான்
ஏகத்தி லிஃதெனக்காம் மீளேனே லிவ்விடமே. 35

"உண்ணுங்கால் யாவ னுடனுண்பார் தம்மிடமே
எண்ணியொரு பேதம் இனிய தனிநுகர்வான
நண்ணுவனா னெல்லார் நரக மிடருக்காத்
திண்ணமிது மெற்காகும் மீளேனே லிவ்விடமே. 36

"பூதானம் யாவன் புனல்வார்த் தளித்துப்பின்
பேதாலே மற்றதுதான் பேணுவனோ தற்கெனவே
பேதையவன் பேயடரும் வெந்நரகே சேருவனால்
போதருவே னந்நரகே மீளேனே லிவ்விடமே. 37

"சுந்தரியை யாவன் துணையாக்கி யௌவனத்திற்
குந்தகமே கூறிக் கொடிதி னகற்றுவனோ
வெந்தழலார் வெந்நரகில் மீள்வின்றி வீழ்வன்காண்
இந்த நரகெற்காம் மீளேனே லிவ்விடமே. 38

---

34. மாயம்—வஞ்சகம். இவ்விடமே மீளேனேல் (நான் மீளாவிடில்) மேவும் கொடுமை எலாம் கேட்பாய்— 35, மனை —மனைவி. துனி—துன்பம். இஃது எனக்கு ஏகத்தில் ஆம்— முற்றும் அனுபவிப்பேன். 36. இனிய—இனிய உணவு. (அவன்) எல் (இருள்) ஆர் நரகம் இடருக்கா, நண்ணுவன்—. 37. புனல்—நீர். 38. குந்தகம்—தடை;தடையாகக் குறைகள்.

"இருளுவா வில்லெவனோ ஏற்றுப் பிதிர்சடங்கு
மருளால் மனையா ளணைந்து மகிழ்தருவான்
வெருவப் புகையடரும் வெய்ய நரகடைவான்
அருவருக்கு மஃதெனக்காம் மீளேனே லிவ்விடமே. 39

"சுவைத்தயின்றி யாவன் ஒருவல டுஞ் சோறுதனை
நவையே நவிலுவனோ நாவை யொடுக்காமல்
குவிய முடையடருங் கோர நரகடைவான்
அவல மிதுகொள்வேன் மீளேனே லிவ்விடமே. 40

"கன்னிகையை யாவன் கடிமணத்தி லீவனெனச்
சொன்ன உறுதிமொழி சோர்வுறவே சூதடர்ப்பான்
மன்னி யரவினங்கள் வாழ்நரகந் தானடைவான்
இன்ன தெனக்காகும் மீளேனே லிவ்விடமே. 41

"சோறுண்பான் யாவன் தூய்மைக்காம் நாள்நான்கில்
கூறுமுவா வன்ன குளிக்காம லுண்பானோ
சேறடரும் வெந்நரகிற் சேர்ந்து சிதைவுறுவன்
ஊறிதுவே யெற்காகும் மீளேனே லிவ்விடமே. 42

"ஈவனென யாவன் இயம்பி யொருபொருளை
ஆவ தளிக்காம லவ்வியமே கொள்வானோ
ஓவா திடருக்கா வுற்ற நரகடைவான்
மேவுதலா மிந்நரகே மீளேனே லிவ்விடமே. 43

---

39. இருள் உவா—அமாவசை. மருள்—அறிவின்மை. வெருவ—அஞ்சுமாறு. வெய்ய—கொடிய. 40. யாவன், சோறுதனை, சுவைத்து அயின்று(உண்டு)—. நவை—குற்றம். முடை—கொடிய வாசனை. குவிய—அடர்ந்து. அவலம்—துன்பம். 42. கூறும் உவா (அமாவாசை, பௌர்ணமி) முதலிய நான்கு நாட்கள். 42. ஊறு—துன்பம். 43. அவ்வியம்—வஞ்சகம்.

"தீமனத் தானெவனோ செய்யவல தோராமல்
காமத்தால் தன்நண்பன் காதலியைக் கைக்கொள்வான்
தூமத்துத் தீயடருங் குட்டத்திற் தோய்ந்தமிழ்வான்
ஆமிதுவே யென்றனக்கும் மீளேனே லிவ்விடமே. 44

"புணருவனோ யாவன் குருமன்னர் பூவையரை
அணவும் வெறியாலே ஆகா தெனவுணர்ந்தும்
கணங்கொள் கழுகடர்ந்து காயும் நரகடைவான்
தணியா திதுவெனக்காம் மீளேனே லிவ்விடமே. 45

"மணம்புணர்ந்தி யாவன் மடவா ரிருவரையோர்
குணம்புகன்று கூடு மொருத்தி தனைக்குலவி
அணங்குக் கவனாவன் ஆழ்வன் கொடுநரகம்
சுணங்க லிதுவெனக்காம் மீளேனே லிவ்விடமே. 46

"கொடியவனாய் யாவன் மணந்த குலமகளை
அடரு மிளமையிலே நைய அகற்றுவனோ
விடங்கொள் விருச்சிகங்கள் மல்கும் நரகடைவான்
இடரிதுவே யெற்காகும் மீளேனே லிவ்விடமே. 47

"அருளின்றி யாவ னருந்தப் புனல்நாடி
விரையும் பசுநிரைக்கு விக்னம் விளைவிப்பான்
திரளுங் குயவரிகள் சீறும் நரகடைவான்
இரிய லிதுவாகும் மீளேனே லிவ்விடமே. 48

---

44. செய்ய வலது ஓராமல்—. தூமம்—புகை. 45. குரு மன்னர் பூவையரை—ஆசாரியன், அரசன் இவர்களது மனைவியரை. இது தணியாது ஆகும்—இந்த நரகம் முற்றும் ஆகும். 46. மடவார் இருவர் புணர்ந்து, (இவருள்) ஒருத்தி(யை), அவளது குணம் புகன்று கூடும்—. அணங்கு—துன்பம். சுணங்கல்—மெலிதல். 48. விக்னம்—இடையூறு. 48. குயவரி—புலி. இரியல்—கெடுதல்.

"இதுகேட்பாய் யாவன் இடர்பெய்வான் தூயோர்க்கு
மதுநுகர்வான் வாய்ந்த விரதம் வனையாதான்
பதிதரிவர் எக்காலும் பாதாளத் தாழ்ந்துழல்வர்
விதியிதுவே எற்காகும் மீளேனே லிவ்விடமே. 49

"பரிவின்றி யாவன் பரன்வாசு தேவனெனும்
பரனின்றி வேறொன்று பற்றுவனோ பற்றாக
அரவதண் டங்கொள்வான் அன்ன துனியென்றும்
வருவ தெனக்கெனவே மீளேனே லிவ்விடமே. 50

"செப்புவகேள் யாவன் திருமார்பன் நாரணனோ
டொப்பவெனத் தெய்வம்வே றொன்று கருதுவனோ
தப்பகில னின்னான் இயமன்றன் தண்டனையை
இப்புன்க ணெற்காகும் மீளேனே லிவ்விடமே." 51

நம்பாடு வான்சொல் நயங்கேட்ட பேயுந்தன்
வெம்மை விடுத்து விளம்பியதால் மெய்சிலிர்த்தே,
"அன்பா! வணக்க முனக்காகும் அவ்விரதம்
செம்மை யியக்கியிவண் சேருவைநீ யெற்குணவா." 52

பேயின் பிடிநீங்கிப் பேணி நமதிடமே
வாயும் மகிழ்வினிலே வந்திந்தப் பாடுநனும்
கேயந் தனிற்கொண்ட கேழில்லா ஊக்கத்தால்
பாயும் மடையெனவே பாட்டடரப் பெய்தனனே." 53

பொழுது புலர்தரலும் புண்ணியமாம் நோன்பிதனைப்
பழுதின்றித் தானியக்கிப் பாசத்துக் கைகூப்பித்
தொழுதுநமோ நாராய ணாவென்றே ஓதியிவன்
விழுமியதோர் சிந்தையிலே மீண்டனனாற் பேய்நாடி. 54

---

49. பதிதர்—தாழ்ந்தோர். தூயோர்க்கு இடர்பெய்வான், மது நுகர்வான், விரதம் வனையாதான் (செய்யாதவன்). 50. அரவதண்டம்—யமதண்டனை, துனி—துன்பம். 51. புன்கண்—துன்பம். 52. இவண்—இவ்விடம். எற்கு உணவா—எனக்கு உணவாக. 53. பேணி—விரும்பி. பாடுநன்—பாடுவான். கேயம்—பாட்டு. 54. விழுமிய—சிறந்த, 55. காயகன்—பாடுவான். தருணன்—இளைஞன். மிடறு—தொண்டை,

கடுக நடந்தேகுங் காயகன்முன் னவ்வதரில்
நெடிய வடிவினிலே நிற்கு மொருதருணன்
மிடறு தழைத்து விளம்பினனோ ராவலிலே
அடியா னிசைவல்லான் தன்னை யணுகியிதே. 55

"அன்பா! விடியலிது தன்னிலுமோ ரார்வத்தால்
என்நீ விரைகின்றாய்? ஏகுந் தலமெதுவோ?
உன்னுங் கருத்துண்டோ ஒல்லை யியக்கவென?
இன்ன எனக்குரைப்பா யேற்றதெனிலென்செவிக்கே.' 56

தன்முன் பரிவோங்கச் சார்ந்த தருணனவன்
சொன்ன வகைகேட்டுத் தூயோனப் பாடுநனோ
பொன்னெனவே சத்தியத்தைப் போற்றும் புரிவுடையோன்
இன்னவணங் கூறினனே இன்பந் தழைத்தெழவே. 57

"அருகி லதரிதனி லாங்குளதா லெற்காகப்
பெரிதாம் வடிவிற் பிரமப்பேய் அன்பாகேள்
விரைவ னதன்பாலே மீண்டென்ற சூளுரையை
அறிவா யுரைத்தனனான் அஃதாகுங் காரணமே." 58

அவ்வுரையைக் கேட்ட தருணனவ னச்சொல்லின்
செவ்விதனை யாராய்வான் சீல முருவாகி
அவ்வியமே காணா அத்தூயோன் பத்தன்முன்
இவ்வணமே கூறு மினித்த குரலாலே. 59

"தூயோய்! இதுகேட்பாய் சொல்லுவனோ ரெச்சரிப்பு
பேயிதுவோ பாவமே பேணும் பிறப்புடைத்தால்
வாயும் பெரும்பசியால் வாயூறு மூனுண்ண
ஆவா யுணவிதற்கே அங்கேநீ போவாயோ?" 60

---

56. உன்னும்—செய்ய நினைக்கும், என் செவிக்கு ஏற்றதெனில்—நான் கேட்கலாம் என்றால். 57 புரிவு—விருப்பம். 58. அதர்—வழி. சூளுரை—சபதம், மீண்டு விரைவன் என்ற சூளுரையை நான் உரைத்தனன்; அறிவாய்—.

59. ஆராய்வான்—ஆராய்வதற்கு (உண்மையா என்று). 60. எச்சரிப்பு—முன்னறிவிப்பு (இடர் நேராவண்ணம்). ஊன் உண்ண (இதற்கு) வாய் ஊறும்—.

மரணம் பெரும்பேயால் வாய்வதுதான் திண்ணமெனத்
தருணன் பணித்ததுதான் தத்துவமே யென்றோர்ந்தும்
அரிதெனவே சத்தியத்தைக் காக்க வகங்கொண்ட
தெரிவரிய பாடுநரனோ செப்பினனாற் சீர்மையிலே. 61

''அருந்தகையோய்! என்பாலோ ரன்பாலே எற்காக
வருந்தி வரைந்தனையே செய்யே னதுதன்னை
அரந்தையிலுஞ் சத்தியமே ஆன்றோர் மனங்கொள்வர்
பொருந்துமரல் சத்தியத்திற் பொன்னெனவே
யென்னுளமும்.'' 62

கமல விழியொளிர அப்புருடன் காண்டரிய
விமல மனத்தினனை வாழ்த்தி விளம்பினனே:
'கமலை புணர்மார்பன் காப்பா னுனையென்றும்
கவலை யுனக்கிலையால் கானம் மிகவல்லோய்!' 63

உள்ளமுறை யோடுசெயல் ஊன்றியவாய்ச் சத்தியத்தில்
கள்ளங் கருதாத காயகனோ முன்னேகி
உள்ளந்தா னூனுண்ண ஊருங் கொடும்பேய்முன்
தெள்ளத் தெளிவினிலே செப்பினனா லஞ்சாதே. 64

''பேயே! உனதன்பே பெற்றெளியேன் பேணியதாந்
தூய விரதத்தைச் சோர்வின்றிச் செய்தேனே
மாயன் மணிவண்ணன் பாத மலரிணையை
தேய முடனேத்தி நின்பால் விரைந்துளனே. 65

---

61. தத்துவம்—உண்மை. அகம் கொண்ட—மனத்திற் கொண்ட; நினைத்த. தெரிவு அரிய—அறிவாலே சிறந்த. 62. அரந்தை—துன்பம். என்னுள்ளம் சத்தியத்தில் பொன் எனவே பொருந்தும்— 63. விமல—மாசில்லாத.

64. (பேய்க்கு) உள்ளம் ஊன் உண்ண ஊரும் (பரவுகிற, செல்லுகிற). 65. சோர்வு—தளர்வு.

"உறுப்புக்க ளொவ்வொன்றாய்ப் பிய்த்திவ் வுடல்
தன்னை
விருப்புற்றென் னூனயின்று வெய்ய பசிதீர்வாய்
உரைப்பதிது சத்தியங்காண்" என்றனனே, பேயதுவும்
தெரிப்பொன்றக் கூறியதால் செம்மை யுரையிதுவே. 66

"பாட்டாற் பரமன் புகழிசைக்கும் பாங்குடையோய்!
கேட்பா யுயிர்பிழைத்துக் கேடின்றி மீள்வையெனில்
வேட்பா லிரவிதனில் மேலாமோர் கீதத்தால்
ஈட்டும் பயனெல்லா மெற்கே வழங்குவையே.' 67

உடல்தடித்து வாழ்வதற்கா மூனுண்ணும் பேய்தானும்
அடல்விடுத்தோ ரன்பொளிரக் கூறு மதுகேட்டு
நெடுமால் புகழிசைக்கும் நேமத்த காயகனோ
நொடியுந் தயங்கா னிவணம் நுவன்றனனே. 68

"முன்னம்நீ என்பால் மொழிந்த வகைசெய்வாய்
என்னுளமோ சத்தியத்தி லெப்போது மூன்றுவதால்
என்னுடலைக் கீண்டுண்பா யென்னுதிர மூனோடும்
என்னிசையின் பயனோ இறையேனும் நிற்கிலதே." 69

நம்பால் மனமுய்த்த நம்பாடு வானிங்ஙன்
தெம்பில் தெளியவெனச் செப்பியதாங் காரணத்தின்
செம்மை தனைக்கேட்டுச் சிந்தை வியன்கொள்ள
இன்பந் தனிலிவணம் பேயோ இயம்பியதே. 70

---

66. என் ஊன் அயின்று,வெய்ய (கொடிய) பசி தீர்வாய்—. 67. வேட்பு—விருப்பம். ஈட்டும்—சேர்த்த. எற்கு—எனக்கு. 68. அடல் விடுத்து—கொல்லுதலை விட்டு. நுவன்றனன்—சொன்னான்.

69. என் உதிரம் ஊனோடும் உண்பாய்—இறையேனும்—சிறிதேனும் . நிற்கு—உனக்கு. 70. தெம்பு— தைரியம். வியன்கொள்ள—விறக்குமாறு. இவணம்—இவ்வாறு.

"நன்றிதுகேள் இவ்விரவில் நம்பி திருமுன்னர்
நின்று புகழ்பாடி நீகொண்ட புண்ணியத்தில்
என்றனக்கோர் பாதியெனு மீவையெனில் நீபிழைப்பாய்
இன்றுனைநானுண்பதிலைஏகுவைநீநின்னுறைவேடு" 71

பெருகும் பசிப்பிணியால் நையும் பிரமப்பேய்
அரிதி னதையடக்கி ஆர்விற் பணித்ததுவாம்
உரையை வியந்தேற்ற பாடுநனோ உள்ளத்தில்
வரையில்லா வின்படர ஓதினனாற் பின்னுமிதே. 72

"உண்ப னெனையென்றே ஓதினையால் முன்னம்நீ
உண்ணும் பயனிதனை யோராமற் கீதத்தால்
நண்ணும் பயனென்துவோ? எற்கு நவி"லென்ன
எண்ணிலா ஊக்கத்திற் பேயோ இயம்பியதே. 73

"அன்பா! நிசியிதனி லார்வமுடன் கண்விழித்தே
இன்பத்தி லேற்றதனிற் கூறாமி யாமத்தின்
நன்மைதனை நல்குவைநீ மீள்வாய் நலிவில்லை
உன்புத்தி ரர்கேளி ருன்னை யுவந்தேற்பர்." 74

பெரும்பசியே பெற்றும் மறந்து பிரமப்பேய்
பெரும்பேறாப் பாட்டின் பயன்கொள்ளப் பேணியதால்
அருந்தகைய னத்தூயோ னார்ந்த வியப்பினிலே
கரும்பனைய தீஞ்சொற் களித்துப் புகன்றனன். 75

"என்னேநீ யென்பா லியம்பியதை யேலாமல்
என்னிசையி லோரியாமத் தேற்றபல னெண்ணுவதே!
உன்பசியே தீரவென உன்முன்னே நான்நிற்பன்
தின்னுவைநீ யென்னைச் சிறிதேனுந் தயங்காதே." 76

---

71. பாதி எனும்—பாதியாவது. 72. அரிதில்—சிரமப்பட்டு, இன்பு—இன்பம். 73. ஓராமல்—கருதாமல். நண்ணும்-விரும்பும். எற்கு நவில்—எனக்குச் சொல்லு. 74. கேளிர்—உறவு.

சத்தியமே காத்துத் தவறாமல் நற்பண்பே
வித்தமென வாய்ந்த விமலன் விளம்பியதை
மெத்த வியப்பினிலே கேட்டந்தப் பேய்தானும்
சித்தந் தெளிந்திதுவே மீண்டுமிவன் செப்பியதே. 77

"தூயோய்! இரவிதனிற் செய்த துதியதுவாய்
வாயு மிசைப்பாட்டி லொன்றின் வளமேனும்
நேயமுட னெற்களித்து நீக்குவையென் பேய்ப்பிறவி
ஏயமிதை எற்கோர் சரணாக ஏகினையே." 78

ஊனுண்ணும் பேயோ உலைக்குஞ் செயலொழிந்து
தான்கொள் பசியைத் தணித்துத் தனக்காக
ஆனதுதா னத்தூயோன் கானப் பயனன்றே
தான்கருதப் பாடுநனோ சாற்றினனா லிவ்வணமே. 79

"ஒருங் கருத்துடையேன் பேயே! உரைப்பாயோ
யாரும் விரும்பாத யாக்கைப் பெரும்பேயாய்
கோர முறக்கொண்டாய் கோரச் செயலொன்று
நேர இயற்றினையோ நேசம் நெகிழ்வுறவே?" 80

நலனே உருவாகும் நம்பாடு வானிங்ஙன்
நிலவுங் கருணையினால் நேர்ந்த குறைகேட்க
வலமாம் வழுவொன்றால் முன்னம் வலித்தடர்ந்த
உலைவோதிப் பேயும் "சரண்நீ"யென் றோதியதே. 81

"ஆன்றோர் வழிதனிலே அந்தணனாய் முன்வாழ்ந்தேன்
சான்றோ ரெனைச்சோம சர்மாவென் றோதுவரே
ஏன்ற மகச்சடங்கி லேலாக் குறையந்தோ
ஆன்ற மனுதன்னை யார்க்குப்போ தாயிற்றே. 82

---

77. வித்தம்—செல்வம். 78. வளம்—தன்மை. ஏயம்—இழிவு. 79. உலைக்கும்—கொல்லும்.

"வேள்வி நிகழுங்கால் ஈனம் விளைதரலால்
கேளாய் விளைவாகக் கேடுற்றேன் நேசழிந்து
வேள்வித் தலத்தினிலே வெய்யதொரு சூலமெனுங்
கோளார் குறையாலே சன்மங் குலைந்ததுவே. 83

"உறுவயினே வேள்வி ஒருநான்கு நாள்நடந்தும்
குறையாலே ஐந்தாநாள் கொண்டேன் பிறவியிதே
மறையோதும் பாணார் பிறவி வரைநீங்கி
உறைவேனா லன்றுமுத லிங்கிவ் வதரினிலே. 84

மறைநெறியில் வாய்ந்த மகந்தன்னில் வாய்ந்ததொரு
குறையதனால் தூயோய்! கொடும்பிறவி யிஃதுற்றேன்
நெறியறியுங் காயகனே! நீயே சரணெனக்குப்
பிறிதறியேன் என்று பிரமப்பே யேத்தியதே. 85

முன்படர்ந்த தீயவுளம் முற்றொடுங்கப் பேயதுவும்
முன்னமர்ந்த நாதன் முதல்வனைத் தன்சரணா
அன்பொளிரப் பற்ற அருந்தகைய பத்தனவன்
இன்பொளிரச் சொல்லொன்றே என்னே!
உரைத்தனனே. 86

"அஞ்சற்க அன்பா! அபய முனக்களித்தேன்
எஞ்சலறப் பத்தியினா லெல்லியிதில் யானிசைத்த
செஞ்சொல்லார் கைசிகமாங் கீதத்தின் செம்மையெலாம்
வஞ்சமற நிற்களித்தேன் மாயுமா லிப்பிறவி." 87

கைசிகமாம் பண்ணிதனை யாவன் கருத்துய்த்து
நையும் மனத்தினனாய் நாடி யிசைப்பானோ
மெய்யன் விடுத்தபெரும் பேய்போல் மிடிநீங்கிப்
பைத லிறையின்றிச் சேர்வான் பரம்பதமே. 88

---

83. ஈனம்—இழிவு, குறை. கோள்—மிடுக்கு, வலிமை. சன்மம்—கொண்ட பிறப்பு. 84. உறுவயின்—ஏற்றதாம் வகையில். ஐந்தாம் நாள்—. வரை—எல்லை, காலம்.

மின்னிடையாய்! கைசிகத்தின் மேன்மையிது கூறுவனோ
தன்னிகரே யில்லாத தாதன்நங் காயகனோ
மன்னும் வளனடர வாழ்த்தி இசைபெய்வான்
பொன்னகரே புக்குறைவான் புண்ணியத்தின் பேறாக. 89

கார்த்திகையில் தூய துவாதசிநாள் கானமிதை
ஆர்வத் தெவனொருவன் ஆக்கமெனத் தானிசைப்பான்
பார்பரவும் பாவமெலாம் நீங்கிப் பரம்பதமாம்
சீர்வளரும் நம்வீடு சேர்வன் சிறப்புறவே. 90

ஏனத் துருவ னெயிற்றினி லேற்றுத்தன்
மானுக் கினிக்க மகிழ்ந்தோதுங் கைசிகமாங்
கானப் பயனாற் களிக்கு மிவள்தானும்
மானவ ருய்வரெனை நாளும் வளனேற்றே. 91

---

86 முதுவோன்—அறிஞன். 87. எஞ்சல்—குறைவு 88. மிடி நீங்கி—துன்பம் நீங்கி. பைதல்—மேலும் துன்பம். பரம்பதம்—ஸ்ரீவைகுண்டம். 89. பொன்னகர்—ஸ்ரீவைகுண்டம்.

90. ஆக்கம்—செல்வம். 91. ஏனத்துருவன்—ஸ்ரீவராகப் பெருமான். எயிறு—கோடு. மான்—பூமிப் பிராட்டி. இவள் தானும் களிக்கும்—. மானவர்—மாந்மர்வளன்—நலம், கானத் தால் பெற்று. எனைநாளும்—எப்போதும்.